# கதை இலக்கியமும் உரை நடையும்

இளநிலை பட்டப்படிப்பு (பருவமுறை)

## பகுதி I - தமிழ்

(முதலாண்டு - இரண்டாம் பருவம்)

மதுரை காமராசர் பல்கலைக்கழகம்



பதிப்புத்துறை

மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

மதுரை.

# கதை இலக்கியமும் உரைநடையும்

## இளநிலை பட்டப்படிப்பு (பருவமுறை)

### பகுதி I - தமிழ்

**(2008ம் ஆண்டு ஜூன் மாதம் முதல் சேரும் மாணவர்களுக்குரியது)**

**முதலாண்டு - இரண்டாம் பருவம்**




பதிப்புத்துறை

**மதுரை காமராசர் பல்கலைக்கழகம்**

மதுரை - 21.

# கதை இலக்கியமும் உரைநடையும்

பகுதி I - தமிழ் (பருவமுறை)
முதலாண்டு - இரண்டாம் பருவம்

(2008ம் ஆண்டு ஜூன் மாதம் முதல் சேரும் மாணவர்களுக்குரியது)

முதற் பதிப்பு : **2008**

விலை : ரூ. **40/-**

பக்கங்கள் : **140 + 100 = 240**

நூல் கிடைக்குமிடம் : **பதிப்புத்துறை**
**மதுரை காமராசர் பல்கலைக்கழகம்**
**மதுரை - 625 021**

அச்சிட்டோர் : **மதுரை காமராசர் பல்கலைக்கழக**
**கூட்டுறவு அச்சகம் லிட்.,**
**மதுரை - 625 021**

# பகுதி - 1 தமிழ் -பாடத்திட்டம்

**(2008ஆம் ஆண்டு ஜூன் முதல் சேரும் மாணவர்க்குரியது)**

## முதலாண்டு - இரண்டாம் பருவம்

# கதை இலக்கியமும் உரைநடையும்

**பாட நேரம் : வாரம் 6 மணி** **நேரம் மதிப்பெண்: 75**

**கூறு : 1 சிறுகதை இலக்கியம்**

சிறுகதைத் தொகுப்பு
பல்கலைக்கழக வெளியீடு
மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை-21.

**கூறு : 2 புதிய இலக்கியம்**

நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்
ஆம்பத்தூர், சென்னை-600 098

**கூறு : 3 கட்டுரை இலக்கியம்**

கட்டுரைத் தொகுப்பு
பல்கலைக்கழக வெளியீடு
மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை-21.

**கூறு : 4 இலக்கணம்**

1. நான்கு வகைச் சொற்கள் 2. வினாவிடை வகைகள் 3. வேற்றுமைகள் 4. தொகைகள் : வேற்றுமைத் தொகை வினைத்தொகை, பண்புத் தொகை, உவமைத்தொகை, உம்மைத்தொகை, அன்மொழித் தொகை.

**கூறு : 5 இலக்கிய வரலாறும், பயன்பாட்டுத் தமிழும்**

அ) 1. சிறுகதையின் தோற்றமும் வளர்ச்சியும் 2. புதின இலக்கியத்தின் தோற்றமும் வளர்ச்சியும் 3. உரைநடை இலக்கிய வரலாறு

ஆ) பிரித்து எழுதுதல் - பொருந்தாச் சொல்லைக் கண்டறிதல் - வழுஉச் சொற்களை நீக்கிய தொடரைக் குறிப்பிடுதல் - அகர வரிசைப்படி சொற்களைச் சீர்செய்தல் - வேர்ச் சொல்லைத் தேர்வு செய்தல் - எவ்வகை வாக்கியம் எனக் கண்டு எழுதுதல் - சொற்களை ஒழுங்குபடுத்தி சொற்றொடர் ஆக்குதல் - ஆங்கிலச் சொல்லுக்கு நேரான தமிழ்ச்சொல்லறிதல்.

# இளங்கலை தமிழ்ப்பாடத்திட்டக்குழு உறுப்பினர்கள்

1. **முனைவர் க. இராமச்சந்திரன்**
   பாடத்திட்டக்குழுத் தலைவர்
   இணைப் பேராசிரியர் & தமிழ்த் துறைத் தலைவர்
   திரு எஸ். இராமசாமி நாயுடு ஞாபகார்த்தக் கல்லூரி
   சாத்தூர் - 626 203.

2. **முனைவர் திருமதி ச. பாரிஜாதம்**
   இணைப் பேராசிரியர் & தமிழ்த் துறைத் தலைவர்
   வே.வ. வன்னியப் பெருமாள் பெண்கள் கல்லூரி
   விருதுநகர் - 626 001.

3. **முனைவர் க. அக்னிபுத்திரன்**
   இணைப் பேராசிரியர்
   தமிழ்த்துறை
   அருள்மிகு பழனியாண்டவர் கலை பண்பாட்டுக்கல்லூரி
   பழனி - 624 601.

4. **முனைவர் சு. ஜெயராம்**
   இணைப் பேராசிரியர்
   தமிழ்த்துறைத் தலைவர்
   வி.இ.நா.செ.நா. கல்லூரி
   விருதுநகர் - 626 001.

5. **முனைவர் சு. குருசாமி**
   இணைப் பேராசிரியர்
   தமிழ்த்துறைத் தலைவர்
   இராஜபாளையம் இராஜூக்கள் கல்லூரி
   இராஜபாளையம் - 626 117.

6. **முனைவர் பெர்னாட்ஷா**
தமிழ்த்துறைத் தலைவர்
எஸ். வெள்ளைச்சாமி நாடார் கல்லூரி
மதுரை - 625 019.

7. **முனைவர் கா. சாகுல் ஹமீது**
இணைப்பேராசிரியர்
தமிழ்த்துறை
வக்பு வாரியக் கல்லூரி
மதுரை - 625 020.

8. **த. அன்புமணி**
தேர்வுநிலை விரிவுரையாளர்
தமிழ்த்துறை
அருள்மிகு மீனாட்சி அரசினர் பெண்கள் க
மதுரை - 620 002.

9. **முனைவர் மு. மீனா**
முதுநிலை விரிவுரையாளர்
செந்தமிழ்க் கல்லூரி
மதுரை - 625 001.

10. **முனைவர் மு. மணிவேல்**
தமிழியற்புலத் தலைவர்
தமிழியற்புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை - 625 021.

0-0-0

# சிறுகதை

## உள்ளடக்கம்

ஒஒஒஒஒ

# 1. இது மிஷின் யுகம்!

**- புதுமைப்பித்தன்**

நான், அன்று ஒரு முழு நீளம் பெயர்கொண்ட - ஹோட்டல் காரர்களுக்கும் நாடகக்காரர்களுக்குந்தான் வாயில் நுழையாத பெயர் வைக்க நன்றாகத் தெரியுமே - ஹோட்டலுக்குச் சென்றேன்.

உள்ளே எப்பொழுதும்போல் அமளி; கிளாஸ், ப்ளேட் மோதும் சப்தங்கள். 'அதைக் கொண்டுவா, இதைக்கொண்டுவா!' என்ற அதிகாரங்கள்; இடையிலே உல்லாச சம்பாஷைனை; சிரிப்பு.

போய் உட்கார்ந்தேன்.

"ஸார், என்ன வேண்டும்?"

"என்ன இருக்கிறது?" என்று ஏதோ யோசனையில் கேட்டு விட்டேன்.

அவ்வளவுதான் கடல்மடை திறந்ததுபோல் பக்ஷணப் பெயர்கள் செவித் தொளைகளைத் தகர்த்தன.

"சரி, சரி, ஒரு ப்ளேட் பூரி கிழங்கு!" அது அவன் பட்டியலில் இல்லாதது. முகத்தில் ஏதாவது குறி தோன்ற வேண்டுமே? உள்ளே போகிறான்.

"ஒரு ஐஸ் வாட்டர்!"

"என்னப்பா, எவ்வளவு நேரம் காத்திருக்கிறது?"

"என்ன கிருஷ்ணா, அவர் எவ்வளவு நேரம் காத்திருக்கிறது?

"இதோ வந்துவிட்டது ஸார்!" என்று ஓர் அதிகாரக் குரல் கெஞ்சலில் முடிந்தது.

“காப்பி இரண்டு கப்!”

“இவ்வளவுக்கு இடையில் கிருஷ்ணன் ஒரு கையில் நான் கேட்டதும், மற்றதில் ஐஸ் வாட்டரும் எடுத்து வருகிறான்.

“ஸேவரி (கார பக்ஷண வகை) எதாகிலும் கொண்டா!”

“இதோ ஸார்!”

“பில்!”

உடனே கையிலிருந்து பில் புஸ்தகத்தில் லேசாக, எழுதி, மேஜையில் சிந்திய காப்பியில் ஒட்ட வைத்துவிட்டு, ஸேவரி எடுக்கப்போகிறான்.

“ஒரு கூல் டிரிங்க்!”

“ஐஸ்கிரீம்!”

பேசாமல் உள்ளே போகிறான். முகத்தில் ஒரே குறி

அதற்குள் இனனொரு கூட்டம் வருகிறது.

“ஹாட்டாக என்ன இருக்கிறது?”

“குஞ்சாலாடு, பாஸந்தி...”

“ஸேவரியில்?”

கொஞ்சமாவது கவலை வேண்டுமே! அதேபடி பட்டியல் ஒப்புவிக்கிறான். சிரிப்பா, பேச்சா? அதற்கு நேரம் எங்கே? அவன் மனிதனா? யந்திரமா?

“ஐஸ் வாட்டர்!”

“ஒரு கிரஷ்”

“நாலு பிளேட் ஜாங்கிரி!”

கொஞ்சம் அதிகாரமான குரல்கள்தான். அவன் முகத்தில் அதே குறி, அதே நடை.

நான் உள்பத்திற்குப் போகும் பாதையில் உட்கார்ந்திருந்தேன். என் மேஜையைக் கவனித்துக்கொண்டு உள்ளே போகிறான்.

மனதிற்குள் "ராம நீஸமாந மவரு" என்ற கீர்த்தனம்! உள்ளத்தை விட்டு வெளியேயும் சற்று உலாவியது. அப்பா!

திரும்பி வருகிறான் கையில் பண்டங்களுடன் பரிமாறியாகி விட்டது.

என்னிடம் வந்து பில் எழுதியாகிவிட்டது. எல்லாம் பழக்க வாசனை, யந்திரம் மாதிரி.

"ஸார் உங்கள் கைக்குட்டை கீழே விழுந்துவிட்டது, ஸார்!"

அவன் குனிகிறான் எடுக்க. நானே எடுத்துக்கொண்டேன்.

மனிதன்தான்!

"ஒரு ஐஸ்கிரீம்!"

திரும்பவும் மிஷினாகிவிட்டான்!

0-0-0

## 2. உண்மைக்கதை

**- கு.ப. இராஜகோபாலன்**

புரட்சிக்காரர்கள் ரயில் தண்டவாளங்களைப் பிடுங்கி விடுவார்கள் என்ற பயத்தாலோ, என்னவோ அன்று எக்ஸ்பிரஸில் கூட்டமே இல்லை. என் நண்பனும் நானும் ஏறிய வண்டியில் இருவர்தான் இருந்தார்கள்.

வயது சென்ற ஒருவர் பலகையில் ஒரு ஓரமாக ஜன்னலில் சாய்ந்து கொண்டு உட்கார்ந்திருந்தார். சுமார் இருபது வயதுள்ள பெண் பலகையின் பாக்கி இடத்தில் படுக்கயை விரித்துக்கொண்டு படுத்திருந்தாள்.

வண்டி புறப்படும் வரையில் அவர் ஒன்றுமே பேசவில்லை. நாங்களும் ரயிலுக்கு வந்த நண்பர்களுடன் பேசுவதில் ஈடுபட்டிருந்தோம். வண்டி நகர்ந்ததும், நாங்கள் இடத்தில் வந்து உட்கார்ந்தோம்.

"நீங்கள் எங்கே போகிறீர்கள்?" என்று கேட்டார் வயது சென்றவர்.

"நாங்கள் கும்பகோணம் போகிறோம்" என்றான் என் நண்பன்.

"நான் மாயவரம் போகிறேன், ஆகையால் பேசிக்கொண்டே போகலாம்!" என்றார் அவர்.

என் நண்பன் என்னைப் பார்த்து ஜாடையாகச் சிரித்தான் 'இதேதடா கஷ்டம்!' என்ற பாவனையாக, அதை அவர் கவனித்து விட்டார்.

"நான் சலிப்புத் தட்டும் படி பேசி உங்களை உபத்திரவப்படுத்தி விடுவேன் என்றா பயப்படுகிறீர்கள்?"

“இல்லை, இல்லை. உபத்திரவமென்ன? பொழுது போகிறது” என்று நான் மரியாதைக்காகச் சொன்னேன்.

நான் சொன்னதை அவர் நம்பவில்லை. என்றாலும், பேசுவதை நிறுத்தவில்லை. “அது என்ன பத்திரிகை ஸார்? கதைப் பத்திரிகையா; வேண்டாம். எல்லாம் காதல் சமாசாரம்தானே?” என்றார்.

“பின் வேறென்ன இருக்கிறது எழுத?” என்றேன் நான்.

“நிறைய இருக்கிறது. உண்மையான விஷயங்கள் இருக்கின்றன. நானும் பார்க்கிறேன், அவற்றைப் பற்றி எழுத ஒருவருக்காவது தைரியம் இல்லை. உங்கள் பத்திரிகையெல்லாம் நான் படிக்கிறேன்.”

“எந்த விஷயங்கள்?”

“உங்கள் காதல் விஷயங்கள்.”

அவர் அப்படிச் சொன்னதும் ஏனோ எங்கள் பார்வைகள் அந்தப் பெண் மேல் சென்றன. அவள் தூங்கிக் கொண்டிருந்தாள். அவரும் எங்கள் பார்வையைக் கவனித்தார்.

“என்னடா காதல் விஷயமாகப் பேசுகிறான் - வயது சென்றவனாக இருக்கிறானே - இந்தப் பெண் யாராக இருக்கக்கூடும் என்று யோசிக்கிறீர்கள் அல்லவா? இவள் என்னுடைய இரண்டாம் தாரம். இவளுக்கு வயது பதினெட்டாகிறது. எனக்கு நாற்பத்தெட்டு. இவள் கொஞ்சம் அழகானவள் என்பதைக் கவனித்திருப்பீர்கள். நான்அவ்வளவு சுந்தர புருஷன் அல்ல என்பதையும் பார்க்கிறீர்கள். என்றாலும், இவள் என்னுடன் சந்தோஷமாகவே இருக்கிறாள் என்று நான் உங்களுக்குச் சொல்லலாம்.

இந்த மனிதன் இப்படிப் பேச ஆரம்பிப்பார் என்று யார் தான் எதிர்பார்க்கக்கூடும்? நாங்கள் இருவரும், கொஞ்சம் கலவரமைடந்தோம். அவர் இவ்வளவு பேசின பிறகு ஏதாவது சொல்லியாக வேண்டுமென்று என் நண்பன் "வயதில் என்ன ஸார் இருக்கிறது?" என்றான்.

"பார்த்தீர்களா, மறுபடியும் நீங்கள், நான் இவ்வளவு பட்டவர்த்தனமாகப் பேசிய பிறகும், உள்ளதை மறைத்துப் பேசுகிறீர்கள். இவள் என்னுடன் சந்தோஷமாக இருக்க முடியாது என்பது உங்கள் தீர்மானம். அப்படி இருப்பதாக நான் ஏமாற்றமடைந்து கொண்டிருக்கிறேன் என்று எண்ணுகிறீர்கள். அல்லவா?" என்றார் அவர்.

"அதாவது....". என்று நான் ஆரம்பித்தேன்.

"அதாவது, இதாவது என்றெல்லாம் மழுப்பப் பார்க்காதீர்கள். நீங்கள் மனது விட்டுப் பேசினாலொழிய நான் விடமாட்டேன்" என்று அவர் குறிக்கிட்டார்.

"ஆம் என்றுதான் வைத்துக்கொள்ளுங்களேன்!" என்று என் நண்பன் சற்று ஆத்திரத்துடன் சொன்னான்.

"வைத்துக்கொள்ள மாட்டேன். ஆம் என்பதுதான் உண்மையல்லவா?"

"ஆமாம்!"

"சபாஷ், இப்பொழுது சரி, இவள் எனக்கு வாழ்க்கைப்பட்ட போது இவளுக்கு வயது - பதினைந்து. எனக்கு?" என்று குறுக்கு விசாரணை செய்தார்.

"நாற்பத்தைந்து!"

"கலியாணத்திற்கு முன்பே இவளைச் சந்தித்து, 'இதோ பார், நான் கிழவன் அழகனுமல்ல. என்னைக் கல்யாணம் செய்துகொள்ள உனக்கு இஷ்டமா, நிஜமாகச் சொல், வரதக்ஷிணை இல்லாமல் செய்து கொள்கிறேன் என்பதற்காக நீ சம்திக்க வேண்டாம். வரதக்ஷிணை கொடுத்து நான் உனக்கு நல்ல பையனாகப் பார்த்துத் தருகிறேன். நன்றாக யோசனை செய்து நாளைக்குச் சொல்லு என்றேன். மறுநாள் கேட்ட பொழுது 'சம்மதம்' என்றாள். நீ 'எதற்காக என்னைக் கல்யாணம் செய்து கொள்கிறேன் என்கிறாய்' என்று கேட்டேன் - அவள் தூங்குகிறாள். ஆகையால் சங்கடப்படாதீர்கள்; தூங்காவிட்டாலும் பாதகமில்லை - 'எனக்குத் தெரியவில்லை!' என்றுதான் திருப்பிச் சொன்னான். கல்யாணமாயிற்று. ஊர்வலத்தைப் பார்த்தவர்கள் எல்லோரும் 'ஐயோ, பாருட அரிசியும் எள்ளும் கலந்தாற்போல இருக்கு!' என்றார்கள். அவள் காதிலும் பட்டது. அவளும் புன்னகை செய்தாள்; நானும் சிரித்தேன். மறு மாதமே சாந்தி முகூர்த்தம் நடந்தது. பெண்ணை விட்டு விட்டுப் போகிறபோது தாயார் 'உன்னைப் பாழுங் கிணற்றில் தள்ளாமே...' என்று ஆரம்பித்தாள். அவள் கோபத்துடன் 'போதும்மா, போ நீபாட்டிற்கு!' என்றாள், மூன்று வருஷங்கள் ஆகிவிட்டன. நடுநடுவில் நான், அடியே என்னைக் கட்டிக் கொண்டாய் விட்டது. இனிமேல் என்ன செய்கிறது என்று யோசிக்காதே. என்னுடனிருப்பது உனக்கு பரிபூரணமாக திருப்தியில்லையென்றால் சொல்லு. நானே நிறையப் பணம் கொடுத்து வேறு கல்யாணம் செய்து வைக்கிறேன்' என்று சொல்லியிருக்கிறேன். அந்தச் சமயங்களில் தான் அவள் என்னுடன் பேசாமல் முகம் தூக்கிக் கொண்டு இருந்திருக்கிறாள். உம், இதென்ன சொல்லுங்கள், காதலா?"

எங்களைப் பேசவிடல்லை அவர்.

“கல்யாணமாகாமல் நின்ற அவளைக் கல்யாணம் செய்து கொண்டதற்காக அவள் நன்றி பாரட்டி எனக்குப் பணிந்திருக்கிறாள் என்று நீங்கள் நினைக்க வேண்டாம். பணியும் ஜாதியைச் சேர்ந்தவள் அல்ல இவள். தன் இஷ்டம் போல் தான் எதையும் செய்வாள், தலைபோகிற பிழையானாலும் பயந்து பொய் சொல்ல மாட்டாள். உதாரணங்கள் சொல்லச் சாவகாசமில்லை... தாம்பரமா? இங்கே கொஞ்சம் கூட்டம் ஏறும். ஆனால் இது முதல் வண்டி, ஜனங்கள் இதில் ஏற பயப்படுவார்கள் - ஆகையால் நாம் கவலைப்பட வேண்டியதில்லை. என்ன நீங்கள் ஒன்றுமே பேசவில்லை? என்ன சிரிக்கிறீர்கள்? பேச விடவில்லை என்கிறீர்களா? சரி, பேசுங்கள்! எங்கள் இருவருக்கும் இடையே இருப்பது காதலா? அது என்ன? சொல்லுங்கள். நீங்கள் எல்லோரும் மனோதத்துவ ஆராய்ச்சியில் ஈடுபட்டவர்களாச்சே வண்டி கிளம்புகிற வரையில் டயம் கொடுக்கிறேன். யோசியுங்கள்!” என்று இந்த விபரீத மனிதர், கொஞ்சம் தலையணையை விட்டுச் சரிந்து போயிருந்த மனைவியின் தலையைச் சரியாக எடுத்து வைத்தார்.

அவள் நன்றாகத் தூங்கிக் கொண்டிருந்தாள். தூக்கத்தில் வரும் சுவாசத்திற்கடையாளமாக ஒரே தினுசான கால அளவில் மார்பு மேலும் கீழுமாக உயர்ந்து விழுந்து கொண்டிருந்தது. இதழ்கள் லேசாக விரிந்திருந்தன. வரிசையான பற்கள் வெற்றிலைக் காவியுடன் தென்பட்டன. முகத்தில் ஒரு தெளிவும், இன்பக் கனவு காண்பது போன்ற பாவமும் தென்பட்டன.

வண்டி புறப்பட்டது.

இன்னுமொரு விஷயம் சொல்ல மறந்து விட்டேனே என் மனைவிக்கு எழுதப் படிக்கத் தெரியாது ஆனால் முட்டாள் என்று எண்ணி விடாதீர்கள். எண்ண மாட்டீர்கள். ஏனென்றால்

எழுதப்படிக்காதவர்கள் பலர் சரித்திரத்தில் பெயர் எடுத்திருக்கிறார்கள் என்று நீங்கள் படித்திருப்பீர்கள். எனவே என் மனைவிக்கு நாவலே என்ன என்று தெரியாது. நான் பேசியாகிவிட்டது. இனிமேல் நீங்கள் தான் பேச வேண்டும்.

என்ன சொல்வதென்று எங்களுக்குத் தெரியவில்லை. அவர் சங்கோசமில்லாமல், என்னவெல்லாமோ சொல்லி விட்டார். அவர் மனைவி சம்பந்தப்பட்ட அந்த அந்தரங்கமாமன விஷயத்தில் நாங்கள் எதை எப்படிச் சொல்வது?

வண்டி பிறகு சில ஸ்டேசன்களில் நின்று சிலவற்றில் நிற்காமலும் ஓட்டமும் நடையுமாகப் போய்க்கொண்டிருந்தது. நாங்கள் இருவரும் ஆழ்ந்த யோசனையில் ஈடுபட்டுவிட்டோம். இருபுறமும் ஸ்டேசன்களும், ஊர்களும், கிராமங்களும், வயல் வெளிகளும், தோப்புக்களும் சினிமாக் காட்சியில் தென்படும் வேகத்துடன் தோன்றி மறைந்துகொண்டிருந்தன. இந்த முடிவற்ற சூழலில் ஜால வித்தை போல தோன்றித் தோன்றி மறைந்த ஆண் பெண்கள் எல்லாம், எங்கள் கண்களில் கனவுத் தோற்றம் போலத்தான் பட்டன. எனக்குப் பட்டதால் என் நண்பனுக்கும் அதே மாதிரிதான் இருந்திருக்க வேண்டும் என்று நினைக்கிறேன்.

ஒரு பெண்ணை ஆணிடம் ஈடுபடச் செய்வது என்ன? அவனுடைய அழகா அல்லது யௌவனமா அல்லது அந்தஸ்தா அல்லது அவன் அளிக்கும் சுக சௌகரியங்களா? இந்த மனிதர் சொன்ன விஷயங்களை புருஷன் இல்லை. அப்படி அந்தஸ்து உடையவனாகவும் தென்படவில்லை சுகசௌகரியங்கள் மிகவும் அதிகம் அளிக்கும்

சக்தியுடையவராகவும் தெரியவில்லை. பின் எதனால் இந்த இளம்பெண் - அழகும் ஆடைகளும் நிறைந்தவள், இவரிடம் திருப்தியுடன் வாழ்ந்தாள்?

"செங்கல்பட்டில் வண்டி நின்றது.

காமு தூக்கமா? எழுந்திருக்கிறாயா?"

காமு உடனே எழுந்து உட்கார்ந்தாள். புருஷன் முகத்தைப் பார்த்தாள். எங்களையும் ஒரு தடவை பார்த்தாள்.

"இவர்கள் கும்பகோணம் போகிறார்கள். ஏதாவது கொஞ்சம் பக்ஷணம் எடேன், எல்லோரும் சாப்பிடலாம்."

உருக்கி வார்த்த விக்கிரகம் உயிர் பெற்று எழுந்திருப்பது போல அவள் எழுந்து, மேலே பலகையில் வைத்திருந்த தூக்குப் பெட்டி ஒன்றை எடுத்துக் கீழே வைத்துக்கொண்டு, சீருடை, முறுக்கு, தேன்குழல் - எல்லாம் ஒரு காகிதத்தில் வைத்துப் புருஷனிடம் கொடுத்துவிட்டுத் தன் இடத்தில் உட்கார்ந்தாள்.

"ஸார், கொஞ்சம் சாப்பிடுங்கோ, நேற்று கோகுலாஷ்டமி அல்லவா, பக்ஷணம் செய்தாள். வழிக்குச் சௌகரியமாக இருக்கிறது" என்று எங்களுக்குக் கொஞ்சம் கொடுத்தார்.

"இந்தா நீ கொஞ்சம் எடுத்தக்கொள்!" என்று காகிதத்தை அவளிடம் நீட்டினார்.

அவள் சிரித்துக்கொண்டே "இப்போ வேண்டாம்!" என்று சொல்லி விட்டு ஜன்னலுக்கு வெளியே வேடிக்கை பார்க்க ஆரம்பித்தாள். அடர்ந்து நீண்டு வளர்ந்திருந்த தலைமயிரை தொங்க விட்டுப் பின்னிக்கொண்டிருந்தாள் - பின்னல் சாட்டை போல் இருந்தது.

"எங்கள் வண்டிக்கு யாருமே வரவில்லை, வண்டி புறப்பட்டது.

இந்தா கண்ணில் கரித்துத்தூள் விழும். படுத்துக்கொள்!"

காமு அவர் முகத்தைப் பார்த்துப் புன்னகை செய்து விட்டுப் படுத்துக்கொண்டாள்.

"காமு! இளமையின் ஊறும் வனப்பு உனது உடலில் கால் முதல் தலை வரை ஓடி நிற்கிறது. உன் அழகுக்கேற்ற ஒரு ஆசை உன்னிடம் இருக்குமே - அதை என்ன செய்தாய்? அதை வதைத்து விட்டு இவர்தான் கதி என்று அமைதி பெற்று விட்டாயா? என்றாவது உன்னையறியாமல் உன் அழகும் யெவனமும் மற்றொரு அழகையும் யெளவனத்தையும் கண்டு பொங்கி எழ வில்லையா? இவரிடம் எதைக் கொண்டு நீ எழிலெனக் கொண்டாய்?

யோசித்து யோசித்து நாங்கள் அயர்ந்து போனோம். கண்ணயர்ந்து விட்டோம். தூக்கம்தான்; ஆனால் இரு குரல்கள் காதில் பட்டன. எப்படியோ - அது நாம் சகஜமாக அனுபவிக்கும் விஷயம்.

"ஏன் எழுந்து விட்டாய்? தூக்கம் வரவில்லையா?"

"இனிமேல் தூக்கம் வராது. நீங்கள் வேண்டுமனால் செத்தே படுத்துக்கொள்ளுங்களேன்."

"எனக்கும் வராது. அவா ரெண்டு பேரும் தூங்க்ரா. அவாளுக்கு ஒரு பெரிய புதிர் போட்டுவிட்டேன்.

"என்ன?"

"எல்லாம் உன் சமாச்சாரம்தான்!"

"ஐயையோ அவாகிட்டே போய் என்ன சொன்னேள்?"

"நான் கிழவனாக இருந்தபோதிலும் நீ என் பேரிலே...".

"ஐயையோ அவமானம்!"

"என்ன அவமானம்? கூஜாவை எடு. நீ பக்ஷணம் எடுத்துக் கொள்ளேன்."

"எடுத்துக்கிறேன். பக்ஷணம் எல்லாம் நன்னாயிருக்கா? அடுத்தாத்து குஞ்சுவுக்குக் கொஞ்சம் கொடுத்தேன்... அப்பா ரயிலுக்கு வந்திருப்பார்."

"வண்டி வந்திருக்குமோன்னோ?"

"கட்டாயம் வந்திருக்கும்!"

பிறகு எனக்குக் கேட்கவில்லை. அவர்கள் பேசியிருப்பார்கள். என் நண்பன் நல்ல தூக்கத்தில் முணுமுணுத்தான். அவ்வளவுதான் தெரியும்.

வண்டி மாயவரத்தை நெருங்கிக் கொண்டிருந்த சமயம். பாலத்தைத் தாண்டிவிட்டது.

"ஸார் நல்ல தூக்கம் போலிருக்கிறது!"

நாங்கள் இருவரும் கண் விழித்துப் பார்த்தோம்.

அவர்கள் இருவரும் வரும் ஸ்டேசனில் இறங்கத் தயாராக எல்லாவற்றையும் எடுத்து வைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார்கள்.

"மாயாவரமா வருவது?" என்று நான் கேட்டேன்.

"ஆமாம். தூக்கத்தில் நான் கேட்ட கேள்விக்கு ஏதாவது பதில் தென்பட்டதோ?" என்று கேட்டு அவர் சிரித்தார்.

காமு விழித்துக்கொண்டு உட்கார்ந்ததால் நாங்கள் சும்மா இருந்துவிட்டோம்.

சரி, நீங்கள் சொல்ல மாட்டீர்கள் போலிருக்கிறது. நான் சொல்லி விடுகிறேன். ஆணும் பெண்ணும் ஒருவர் மற்றொருவரிடம் ஈடுபடுவதற்கு காரணம் அந்த நினைப்பே இல்லாமல் இருப்பது தான். கிராமத்தில் போய்ப் பாருங்கள். முருகனும் நாகம்மாளும் காதலா புரிகிறார்கள்? அவர்களுக்குக் காதல் என்ன என்பது தெரியாது. ஆகவே அவர்களிடையேதான் உண்மையான காதல் இருக்கிறது. இன்னும் அதிகமறிந்தவர்களிடையேதான் காதலே கிடையாது. அசடுதான் இருக்கிறது.... அட, இந்தப் பிளாட்பாரத்துல நிறுத்துகிறான்? படியேறியாக வேண்டும். சரி, வரட்டுமா? நன்றாக யோசித்துப் பார்த்து கதை எழுதுங்கள். கண்டதை எழுதி ஊரைக் கெடுக்காதீர்கள். உங்களுக்குப் புண்ணியம் உண்டு.

“நாங்கள் எழுதுகிறவர்கள்....“

அவர் என்னைச் சுட்டிக்காட்டி, “நீங்கள் எழுதுகிறவர்கள் போல் இருக்கிறது!“ என்று சொல்லிவிட்டு வெளியே போய்க்கொண்டே “போர்ட்டர்“ என்றார்.

காமு முன்னால் இறங்கி பிளாட்பாரத்தில் நின்றாள்.

காமேசுவரி! உன்னைப் போலப் பெண்கள் இருந்தால் உலகம் இன்பம்தான்...

ஸ்வப்ன சுந்தரி போல அவள் மெல்ல நடந்து போனாள் புருஷன் பின்.

சற்று நேரத்திற்கெல்லாம் வண்டி மறுபடியும் ஓட ஆரம்பித்தது.

0-0-0

# 3. கடிதமும் கண்ணீரும்

**-கல்கி**

பிரசித்தி பெற்ற தேவி வித்யாலயத்தின் ஸ்தாபகரும் தலைவியுமான சகோதரி அன்னபூரணி தேவி ஒரு நாள் மாலை வழக்கம்போல் வித்யாலயத்தைச் சுற்றியிருந்த பெரிய தோட்டத்தில் உலாவிக்கொண்டிருந்தார். வித்யாலயத்துக்குக் கொஞ்ச தூரத்திலுள்ள ஒரு பங்களாவிலிருந்து வந்த நாதஸ்வரத்தின் கீதம் அவருக்கு ஏதேதோ பழைய நினைவுகளை உண்டாக்கியது. எப்போதும் சாந்தம் குடிகொண்டிருக்கும் அவருடைய முகத்திலே ஒரு நிமிஷம் கிளர்ச்சியின் அறிகுறி தோன்றி அடுத்த கணம் மறைந்தது. அக்காட்சி, அமைதியான சமுத்திரத்தில் திடீரென்று ஒரு பேரலை கிளம்பிக் கரையோரமிருந்த பாறைமீது மோதி அதை ஒரு நிமிடம் மூழ்க அடித்துவிட்டு மறுநிமிடம் திரும்பிச் செல்ல, மீண்டும் அக்கடலில் அமைதி குடிகொள்வது போலிருந்தது. அலை அடித்தது என்பதற்கு ஞாபகார்த்தமாய் அந்தப் பாறையிலே உள்ள பள்ளங்களில் தண்ணீர் தங்கியிருப்பது போல, அன்னபூரணியின் கண்களிலும் ஜலம் ததும்பி நின்றது.

அப்போது அந்தத் தோட்டப் பாதையில் எதிர்ப்புறமாக வித்யாலயத்தின் உதவி ஆசிரியை ஸ்ரீமதி சாவித்ரி எம்.ஏ, எல்.டி. வந்து கொண்டிருப்பதைப் பார்த்ததும், அன்னபூரணி தேவி கண்ணீரைச் சட்டென்று துடைத்துக்கொண்டு, புன்னகையுடன் சாவித்ரியை வரவேற்றார். இருவரும் சமீபத்தில் ஒரு வேப்ப மரத்தின் அடியில் இருந்த சிமெண்ட் மேடை மீது உட்கார்ந்தார்கள்.

பெண் குலத்தின் சேவையில் தலை நரைத்துப் போனவர் என்றால், அது சகோதரி அன்னபூரணிக்கு முற்றும் பொருத்தமாயிருக்கும். அவருடைய நெற்றியைக் கவிந்து கொண்டு

அடர்த்தியாய் வளர்ந்திருந்த வெள்ளிய கேசத்தைப் பார்க்கும்போது, மலைச் சிகரங்களின்மேல் அடுக்கடுக்காகத் தங்கி நிற்கும் வெண்ணிற மேகங்களின் காட்சி ஞாபகத்துக்கும் வரும். இவ்வாறு தலை நரைத்துப் போயிருந்தாலும், அவர் முகத்தைப் பார்க்கும் போது அவர் ஐம்பது வயதைத் தாண்டியவர் என்று யாராலும் சொல்ல முடியாது. மாறாத இளமையின் இரகசியத்தைக் கண்டு பிடித்தவரோ அவர் என்றுகூடத் தோன்றும். வெள்ளைக் கலையுடனும், வெண் மயிர் அடர்ந்த தலையுடனும், சாந்தம் குடிகொண்ட முகத்துடனும் தோன்றிய சகோதரி, அன்னபூரணியைப் பார்ப்பவர்கள். அவரைச் சரஸ்வதி தேவியின் அவதாரமென்றே நினைப்பார்கள்.

அன்னபூரணியின் வாழ்க்கை வரலாறோ, எல்லாரும் பிரசித்தமாக அறிந்த விஷயம். ஒன்பதாவது வயதில், நினைவு தெரியுமுன்பே வைதவ்யக் கொடுமைக்கு ஆளாகும் துர்ப்பாக்கியத்தைப் பெற்றவர் அவர். அவருடைய அந்தத் துர்ப்பாக்கியமே பெண் குலத்தின் நற்பாக்கியம் ஆயிற்று. பிற்காலத்தில் அவள் பள்ளிக்கூடத்தில் சேர்ந்து, முயற்சியுடன் படித்து, கடைசியாக பி.ஏ.,எல்.டி. பட்டமும் பெற்றார். அதுமுதல், இளம்பிராயத்தில் கணவனை இழந்தவர்கள். கணவன்மார்களால் புறக்கணிக்கப்பட்டவர்கள், அநாதைப் பெண்கள் முதலியோருக்குத் தொண்டு செய்வதிலேயே தமது வாணாளைச் செலவிட்டு வந்தார். அவருடைய இலட்சியத்தை நிறைவேற்றுவதற்கு ஒரு சாதனமாக இந்தத் தேவி வித்யாலயத்தை ஸ்தாபித்துத் தமது உடல் பொருள் ஆவி எல்லாவற்றையும் அதற்கே அர்ப்பணம் செய்திருந்தார்.

உதவி ஆசிரியை ஸ்ரீமதி சாவித்ரி இளம் பிராயத்தவள்; வயது சுமார் இருபத்தைந்து இருக்கும். இன்னும் கலியாணம் ஆகவில்லை. மூன்று வருஷத்துக்கு முன் அவள் எம்.ஏ.,எல்.டி. பரீக்ஷை தேறி, இந்த வித்யாலயத்தில் உதவி ஆசிரியையாக வந்தபோது, சம்பாத்யத்துக்காகவே வந்தாளென்றாலும் பின்னால் சகோதரி அன்னபூரணயின் சகவாசத்தினால் அவளுடைய மனோபாவமே மாறிப் போயிருந்தது. அன்னபூரணியைப் போல் தானும் பெண் குலத்தின் தொண்டுக்காவே வாணாளை அர்ப்பணம் செய்தாலென்ன என்றுகூடச் சில சமயம் அவள் எண்ணமிடுவதுண்டு.

சிமெண்ட் மேடையின்மீது உட்கார்ந்தும், சாவித்ரி, "அம்மா! இன்று கவிதைப் பாடம் சொல்லிக் கொடுக்கும் போது எனக்கு ரொம்பக் கஷ்டமாய்ப் போய்விட்டது. அன்பினால்தான் உலகமே இயங்குகின்றது என்பதாக அதில் ஒரு வரி வருகிறது. 'எந்த அன்பைச் சொல்கிறார் கவி?' என்று பத்மா கேட்டாள். ரொம்பப் பொல்லாத பெண் பத்மா...! அதோ அவள் சிரிக்கிற சப்தத்தைக் கேளுங்கள் என்றாள் சாவித்ரி.

தோட்டத்தின் இன்னொரு பகுதியில் சில பெண்கள் கையால் எறிந்து விளையாடும் பந்தாட்டம் ஆடிக்கொண்டிருந்தார்கள். அங்கிருந்து கிளம்பிய கலகலவென்ற சிரிப்பின் ஒலி தென்றல் காற்றில் தவழ்ந்து வந்து கொண்டிருந்தது.

"பத்மாவின் கேள்விக்குப் பதில் என்ன சொன்னாய்?" என்று அன்னபூரணி கேட்டாள்.

"பதில் சொல்லத் திணறிப் போய்விட்டேன் கவி இங்கே 'அன்பு' என்று சொல்லும்போது காதலைத்தான் குறிப்பிடுகிறார். ஆனால் இதை அந்தப் பெண்களுக்கு நான் எப்படிச் சொல்வது? சாதாரணப்

பெண்களுக்கு முன்னால் சொல்வதே கஷ்டம். நான் 'குவீன் மேரீஸ்' காலேஜில் படித்தபோது, எங்கள் ஆசிரியைகள் பட்ட அவஸ்தை நன்றாய் ஞாபகமிருக்கிறது. இங்கே, விதவைப் பெண்கள், புருஷர்களால் தள்ளிவைக்கப்பட்டவர்கள் - இப்படிப்பட்டவர்கள் முன்னால் காதலைப்பற்றி என்னமாய்ப் பேசுவது?

இப்படிச் சொல்லிவந்த சாவித்ரி சட்டென்று நிறுத்தினாள். சகோதரி அன்னபூரணியும் பால்யத்தில் கணவனை இழந்தவர் என்பது சாவித்ரிக்கு அச்சமயம் ஞாபகம் வரவே, தான் விரஸமாய்ப் பேசிவிட்டதாக அவளுக்குப் பயம் உண்டாயிற்று. அந்தத் தவறை நிவர்த்தி செய்யும் பொருட்டு அவள் மறுபடியும் கூறினாள்: உண்மையாகப் பார்த்தால் அம்மா, இதெல்லாம் சுத்தப் பைத்தியக்காரத்தனம் என்றுதான் தோன்றுகிறது காதல், கீதல் என்று சொல்வதெல்லாம் வெறும் பிரமையேயல்லவா? வேலையில்லாத கவிகளின் வீண் மனோராஜ்யத்தைத் தவிர வேறொன்றுமில்லை.

அப்போது, அன்னபூரணி, "அப்படியா சமாச்சாரம்? எல்லாம் பிரமையா? ரொம்ப சரி, அந்தப்படி டாக்டர் சீனிவாசனுக்கு நான் கடிதம் எழுதுகிறேன்" என்றார்.

சாவித்திரி டாக்டர் சீனிவாசனைக் கல்யாணம் செய்து கொள்ளப்போகிற விஷயத்தையே அன்னபூரணி அவ்வாறு குறிப்பிட்டார். சாவித்ரி ஒரு மழுப்பல் சிரிப்புச் சிரித்து விட்டு, "ஆமாம்; யார் கண்டார்கள்? இப்போது நிஜம் போல் இருக்கிறது. இரண்டு வருஷம் போனால் எப்படியிருக்குமோ, யாருக்குத் தெரியும்? அது - போனால் போகட்டும், அம்மா! உலகத்தில் சிறந்த காரியங்கள் எல்லாம் காதலினால்தான் நடக்கிறது என்று இந்தக் கவி சொல்வது

அபத்தந்தானே? அது எப்படிச் சரியாகும்? இருபத்தைந்து வருஷ காலமாக நடந்து வரும் இந்தத் தேவி வித்யாலயத்தையே எடுத்துக்கொள்லலாம். கன்னியா குமரியிலிருந்து ஹிமாலயம் வரையில் இந்த ஸ்தாபனத்தைப் புகழாதவர்கள் இல்லை. தங்களுடைய சேவையைப் பாராட்டாதவர்களும் இல்லை. இந்த ஸேவாலயத்தின் விஷயத்தில் கவி சொல்வது எப்படிப் பொருந்தும்?" என்றான்.

சாவித்ரி உலத்திலே நடக்கும் மற்ற சிறந்த காரியங்களைப் பற்றி எனக்குத் தெரியா. கவி சொல்வது அவற்றையெல்லாம் பொருந்துமோ, என்னவோ, அறியேன். ஆனால், என்னுடைய சேவையை ஒரு பெரிய காரியமாக் கருதும் பட்சத்தில், கவி சொல்வது அதற்கு முற்றிலும் பொருந்தும் என்னுடைய முயற்சிகளுக்கெல்லாம் மூலகாரணம் அன்புதான்...."

இல்லையென்று யார் சொன்னார்கள்? அநாதைகளிடத்திலும் தீனர்களிடத்திலும் தங்களுடைய அன்பு பிரசித்தமானதல்லவா?

"அந்த அன்பைச் சொல்லவில்லை நான். கவி சொல்லும் காதலைத்தான் சொல்கிறேன். நான் ஏதாவது சேவை செய்திருந்தால், அது அவ்வளவும் காதல் என்னும் விதையிலிருந்து முளைத்து எழுந்ததுதான்."

சாவித்ரி, இதைக் கேட்டு அளவிலா வியப்பு அடைந்தாள், "அம்மா! நிஜமாகவா அம்மா? ஐயோ! எனக்கு எல்லாம் சொல்லுங்கள்" என்று பரபரப்புடன் கேட்டாள்.

அன்னபூரணி சொல்லுகிறார் :

"அதோ அந்தக் கலியாண வீட்டிலிருந்து மேளச்சத்தம் காற்றில் மிதந்து வருகிறதே. கேட்கிறாயல்லவா? நாயனக்காரன் நாட்டைக் குறிஞ்சி ராகத்தை அற்புதமாய் வாசிக்கிறான். உன்னைப் பார்ப்பதற்கு ஒரு நிமிஷம் முன்னால், அது என் காதில் விழுந்த போது பழைய காலத்து ஞாபகம் எனக்கு உண்டாயிற்று. ஒரு நாளும் இல்லாதபடி கண்ணில் ஜலங்கூட வந்து விட்டது. பல வருஷங்களுக்கு முன்னால் ஒரு கல்யாணத்தின்போது இதே ராகத்தைச் செம்பொன்னார் கோவில் ராமசாமி வாசித்தான். அப்போதெல்லாம் நாயனக்காரர்களில் அவன்தான் பிரசித்தம்..."

"அதெல்லாம் உங்களுக்கு இன்னமா ஞாபகம் இருக்கிறது, அம்மா ரொம்பவும் பால்யத்தில் உங்களுக்குக் கலியாணம் ஆயிற்று என்று கேள்விப்பட்டிக்கிறேனே?"

"என்னுடைய கலியாணத்தை நான் சொல்லவில்லை. ஆறு வயதிலே எனக்குக் கலியாணம் பண்ணினார்களாம். ஒன்பது வயதிலே கைம்பெண் ஆனேன். அதெல்லாம் எனக்குக் கனவு மாதிரிகூட ஞாபகத்தில் இல்லை. அவ்வளவு இளம்வயதில் விதவையாயனதில் ஒரு சௌகரியம் இருந்தது. உனக்குச் சிரிப்பு வருகிறதல்லவா? ஆனாலும் உண்மை அப்படித்தான். நாலைந்து வருஷத்துக்குப் பிறகு அப்படி நேர்ந்திருந்தால், எல்லாரையும் போல் என்னையும் அலங்கோலம் செய்திருப்பார்கள். ரொம்பச் சிறு வயதானபடியால் அப்படி ஒன்றும் செய்யாமல் விட்டிருந்தார்கள்."

அன்னபூரணி சற்றுநேரம் சிந்தையில் ஆழ்ந்த வண்ணம் சும்மா இருந்துவிட்டு, மறுபடியும் கதையைத் தொடர்ந்தார்;

நான் குறிப்பிட்டது என்னுடைய சித்தி பெண்ணின் கலி யாணத்தை. அம்புஜம் எனக்கு இரண்டு வயது சின்னவள். அவளுக்குக் கலியாணம் ஆனபோது எனக்குப் பதினாறு வயதிருக்கும். அம்புஜம் என்னிடம் உயிராயிருந்தாள். நான் கைம்பெண் ஆனதிலிருந்து என் சித்தியின் வீட்டிலேயே வளர்ந்துவந்தேன். என்னுடைய துர்க்கதியை எண்ணி அந்த வீட்டில் எல்லாரும் என்னிடம் மிகவும் பிரியமாயிருந்தார்கள். நான் வைத்ததே எல்லாம் சட்டமாய் நடந்து வந்தது.

அம்புஜத்துக்குக் கல்யாணம் நிச்சயமான போது, என் இஷ்டப்படிதான் எல்லா ஏற்பாடுகளும் நடந்தன. மாப்பிள்ளைக்கு என்ன வேஷ்டி வாங்குவது, மேளக்காரன் யாரை அமர்த்துவது, நாலாம் நாள் விருந்துக்கு என்ன பட்சணம் போடுவது என்பதுமுதல் எல்லாம் நான்தான் தீர்மானித்தேன்.

கலியாணத்துக்கு முதல்நாள் இராத்திரி மாப்பிள்ளை அழைத்த பிறகு நிச்சயதார்த்தம் நடந்தது. பெண் வீட்டு ஸ்திரிகளுடன் நானும் கூட்டத்தில் நின்று கொண்டிருந்தேன். மனையில் உட்கார்ந்திருந்த அம்புஜத்தின் தலையிலிருந்து கல்லிழைத்த திருகுப்பூகழன்று விழுந்துவிடும்போல் இருந்தது. நான் அவளருகில் போய் அதைச் சரியாகத் திருகினேன். அப்படித் திருகிவிட்டுத் தலையை நிமிர்ந்த போது, மாப்பிள்ளைக்கு அருகில் உட்கார்ந்திருந்த ஓர் இளைஞர் என்னை உற்று நோக்குவதைக் கண்டேன். அந்தக் கணத்தில் என் தேகமெல்லாம் பதறிற்று. தலை சுழன்றது; ஸ்மரணையிழந்து கீழே விழுந்துவிடுவேனோ என்று பயந்து போனேன். பகவான் அருளால் அப்படி ஒன்றும் நேரவில்லை.

அவருடைய முகத்தை மறுபடி பார்க்க வேண்டுமென்ற ஆவல் என் மனத்தில் பொங்கி எழுந்தது. அப்படி ஓர் ஆசை இருக்கக் கூடுமென்றே நான் கனவிலும் கருதியதில்லை. எவ்வளவோ மனத்தை அடக்கி பார்த்தேன். பல்லைக் கடித்துக்கொண்டு பார்த்தேன். ஒன்றும் சாத்தியமில்லை. கடைசியில் அவர் இந்த பக்கம் திரும்பியபோது, அவர் அப்போதுதான் என்னைப் பார்த்துக் கொண்டிருந்துவிட்டு முகத்தைத் திருப்புவதைக் கண்டேன்.

அன்றிரவு நான் தூங்கவேயில்லை.

மறுநாள் அம்புஜத்தின் கலியாணம் சிறப்பாக நடந்தேறியது. வெளித்தோற்றத்திற்கு நான் எப்போதும் போல் காரியங்களைக் கவனித்துக்கொண்டுதான் இருந்தேன். ஆனால் என் மனம் என்னவோ வேறு தனி உலகம் ஒன்றில் சஞ்சரிக்கத் தொடங்கியது.

கொஞ்ச நஞ்சமிருந்த சந்தேகமும் கலியாணத்தன்று தீர்ந்து போயிற்று. அவர் என்னைப் பார்த்தது எல்லாம் தற்செயலாக அல்ல; வேண்டுமென்றுதான். என் மனநிலையும் எனக்கு நிச்சயமாயிற்று. ஏதோ ஒரு காந்த சக்தி அவர் பக்கம் என்னைக் கவர்ந்து இழுக்கிறது என்பதை அறிந்தேன். அதோ பூரணசந்திரன் கிளம்புகிறதே, பார்த்தாயா?" என்று அன்னபூரணி தேவி கேட்க, சாவித்ரி பக்கம் நோக்கினாள்.

பூரண சந்திரனை அதற்கு முன்னால் எவ்வளவோ தடவை நான் பார்த்துத்தானிருந்தேன். ஆனால் அம்புஜத்தின் கலியாணத்தன்று இரவு பூரண சந்திரனில் நான் கண்ட அழகை அதற்கு முன் கண்டதில்லை. நாதஸ்வரத்தின் இனியநாதம் அதற்கு முன்னால் என்னை அப்படிப் பரவசப்படுத்தியது கிடையாது. சந்தனத்தின் வாசனையும், மல்லிகைப் பூவின் மணமும் எனக்கு அவ்வளவு இன்பத்தை அதற்குமுன் எப்போதும் அளித்ததில்லை.

என் உள்ளத்தில் என்றைக்கும் தோன்றாத ஆசைகள் எல்லாம் தோன்றின. எல்லாப் பெண்களையும் போல் நாமும் ஏன் தலையை வாரிக்கொண்டு பூ வைத்துக்கொள்ளக்கூடாது? ஏன் குங்குமம் இட்டுக்கொள்ளக்கூடாது? ஏன் சந்தனம் பூசிக்கொள்ளக்கூடாது? என்றெல்லாம் எண்ணம் உண்டாயிற்று.

கலியாணம் நடந்த மூன்றாம் நாளன்று மத்தியானம் நான் அம்புஜத்தை அழைத்துக்கொண்டு சம்பந்திகளின் ஜாகைக்குப் போனேன். அம்புஜத்துக்கு அவளுடைய நாத்தனார் தலைவாரிப்பின்னிக் கொண்டிருந்தாள். அவளுக்கு என்னென்ன நகை இப்போதிருக்கிறது. இன்னும் என்னென்ன நகை பண்ணிப்போடப் போகிறார்கள் என்பது போன்ற அருமையான விஷயங்களைப் பற்றி அம்புஜத்தை அவளுடைய நாத்தனார் கேட்டுக்கொண்டிருந்தாள். எனக்கு ஞாபகம் அந்தப் பேச்சில் இல்லை. காமரா உள்ளில் யாரோ பேசிக்கொண்டிருந்தது, இங்கொரு வார்த்தையும் அங்கொரு வார்த்தையுமாக என் காதில் விழுந்தது. இவருடைய குரல் போலத் தோன்றவே, கவனமாய்க் கேட்கத் தொடங்கினேன். அந்தக் குரலில்தான் என்ன இனிமை! என்ன உருக்கம் பால்யத்தில் கைம்பெண் ஆகிறவர்களின் கதியைப் பற்றித்தான் அவர் பேசிக்கொண்டிருந்தார். அதன் கொடுமையைப் பற்றிச் சொல்லியிருக்கும் யாராரோ மகான்களுடைய வாக்கியங்களையெல்லாம் எடுத்துக்காட்டினார். பல புத்தகங்களின் பெயர்களையும் குறிப்பிட்டார். அவற்றில், 'மாதவய்யா எழுதியிருக்கும் முத்து மீனாட்சி கதையை வாசியுங்கள்' என்று அவர் சொன்னது மட்டும் இன்னும் என் ஞாபகத்தில் இருக்கிறது. 'சரிதானப்பா, பிரமாதமாகப் பேசுகிறாயே? அப்படியானால் நீதான் அன்னபூரணியைக் கலியாணம் செய்துகொள்ளேன்' என்று ஒருவன் சொன்னான். அதற்கு இவர் 'சீச்சி! சுத்த முட்டாள்கள் நீங்கள் உங்களுடன் பேசுவதைக் காட்டிலும் குட்டிச்சுவரோடு பேசலாம்' என்று பதில் சொன்னார். உடனே அந்த அறையினின்றும் ஒருவர் எழுந்து போனது போல் சப்தம் கேட்டது. அது இவராய்த்தான் இருக்க வேண்டும்.

அந்த இரண்டு மூன்று நாளைக்குள் அவரைப் பற்றிய விவரங்கள் எல்லாம் சம்பந்திகளின் பேச்சிலிருந்து தெரிந்துகொண்டிருந்தேன். அந்த வருஷம் அவர் சென்னை இராஜ தானியிலேயே பி.ஏ. பரீட்சையில் முதலாவதாகத் தேறியிருந்தாராம். 'ஐயாயிரம் ரூபாய் வரதட்சணையுடன் அவருக்கு வரன்கள் பல வந்து கொண்டிருந்ததாகவும் பேசிக்கொண்டார்கள். அப்படிப்பட்டவருடைய அன்புக்கோ நான் பாத்திரமானேன். என்னுடைய பாக்கியத்தை என்னால் நம்ப முடிவில்லை.

நாலாம் நாள் கலியாணத்தன்று காலையில் சம்பந்தி அம்மாளுக்கு உடம்பு சரியில்லையென்று தகவல் வந்தது. நான் பார்த்துவிட்டு வருகிறேனென்று சொல்லி, சம்பந்தி ஜாகைக்குப் போனேன். அங்கே ஒரு வேளை இவர் இருப்பாரோ என்று எண்ணமிட்டுக்கொண்டே சென்றேன். வாசற்படி தாண்டியதும், ரேழி ஹாலில் தனிமையாக உலாவிக்கொண்டிருந்த இவர், என்னைப் பார்த்ததும், 'யார் வேண்டும்?' என்று கேட்டுக்கொண்டே வந்தார். நான் பதில் சொல்லத் தெரியாமல் திகைத்து நிற்கையிலேயே, சட்டென்று என் கையில் ஒரு கடிதத்தை வைத்து அது வெளியில் தெரியாதபடி என் விரல்களால் மூடினார். உடனே திரும்பிச் சென்றார்.

புயற்காற்றிலே இலைகள் ஆடுவதுபோல் என் உடம்பு நடுங்கிற்று. ஆனாலும் நான் மிகுந்த மனோதிடத்துடன் அந்தக் கடிதத்தை என் இருதயத்தின் அருகில் பத்திரமாய் வைத்துக்கொண்டேன். பிறகு, உள்ளே போனேன். சம்பந்தியம்மாளுடன் பேசும்போதெல்லாம் என் புத்தி என் வசம் இல்லை. அந்த அம்மாள் என்னை உற்றுப் பார்த்து விட்டு எனக்கு என்ன உடம்பு என்று கேட்கிறாயேடி? உனக்கு என்னடியம்மா உடம்பு? கண்ணும் முகமும் நன்றாயில்லையே? என்று கேட்டாள். 'ஆமாம்' எனக்குக்கூடத் திடீரென்று தலையை வலிக்கிறது' என்று சொல்லிவிட்டு வீடு

திரும்பினேன். உடனே உள் அறை ஒன்றில் பாயை விரித்துப் படுத்துக்கொண்டேன். கேட்பவர்களுக்கு உடம்பு சரியில்லையென்று சொல்லிவிட்டு, விம்மி விம்மி அழுதுகொண்டிருந்தேன். அதற்குப் பிறகு அவரை-என் உள்ளத்தைக் கவர்ந்த தெய்வத்தை - நான் பார்க்கவேயில்லை."

ஐயோ! ஏன் அம்மா இப்படி? அந்தக் கடிதத்தில் என்னதான் எழுதியிருந்தது?

கடிதத்திலா? என்னிடம் அவருக்கிருந்த ஆசை அவ்வளவையும் அதில் கொட்டிருயிருந்தார். எனக்காக எந்த விதத் தியாகமும் செய்யத் தயாராயிருப்பதாயும், உலகம் முழுவதையும் எதிர்த்து நிற்கத் துணிந்திருப்பதாயும் எழுதியிருந்தார். ஆனால் என்னை வற்புறுத்தவோ கட்டாயப்படுத்தவோ விரும்பவில்லையென்றும், அவரிடம் எனக்கும் அன்பிருந்து, சமூகத்தின் ஏளனத்துக்கெல்லாம் துணிவதற்குத் தைரியமிருந்தால், அன்று சாயங்காலம் நலங்கின் போதாவது ஊர்வலத்தின்போதாவது நான் கையில் ஒரு மல்லிகைப்பூவை வைத்துக்கொண்டிக்க வேண்டுமென்றும், அந்த அடையாளத்தைக் கண்டதும் தாம் வேண்டிய ஏற்பாடு செய்வதாகவும் எழுதியிருந்தார்.."

"அப்படியானால் நீங்கள் ஏன் அழுதுகொண்டிருந்தீர்கள், அம்மா? அவர் சொன்னபடி செய்தீர்கள் அல்லவா?"

"பாவி, நான் அப்படிச் செய்யவில்லை. போதாதற்கு, உள்ளே போய்ப் படுத்து அழுது கொண்டிருக்கவே, தம் பேரில் எனக்கு இஷ்டமில்லை யென்றும், என்னுடைய மனத்தைத் தாம் புண்படுத்தி விட்டதாகவும் அவர் எண்ணியிருக்க வேண்டும். இவ்வாறு என் வாழ்க்கையின் நாலு நாள் இன்பக் கனவு முடிவு பெற்றது...!"

"ஆமாம், அம்மா! ஆனால் நீங்கள் ஏன் அவர் சொன்னபடி செய்யவில்லை? எனக்குப் புரியவில்லையே?

"அந்தக் காரணத்தை இப்போது சொல்லவும் எனக்கு வெட்கமாயிருக்கிறது. சாவித்ரி அவருடைய கடிதத்தை அன்றைய தினம் நான் படிக்கவில்லை. ஒரு வருஷத்திற்குப் பிற்பாடுதான் அதை நான் படித்தேன். அப்படிப் படிப்பதற்குள் எத்தனையோ நாள் அதைக் கையில் வைத்துக்கொண்டு கண்ணீர் சிந்தினேன். கடைசியில், அதை நான் படித்தபோது அதில் பாதிக்கும்மேல் கண்ணீரால் மறைந்து போயிருந்தது..."

"அம்மா, என்ன சொல்கிறீர்கள்? தங்களுக்கு அப்போது...."

"ஆமாம் சாவித்ரி! அவர் கடிதத்தைப் பெற்ற அன்று எனக்கு ஏற்பட்ட அவமானமும் மனவேதனையுந்தான் என்னை மேலும் மேலும் படிக்கும்படி தூண்டி, பி.ஏ.,எல்.டி. பட்டமும் அளித்து, பெண் குலத்துக்கு நான் செய்யும் இவ்வளவு தொண்டுக்கும் காரணமாயிற்று. அவர் என் கரத்தைத் தொட்டுக் கடிதத்தை கொடுத்த அந்நாள், எனக்குப் படிக்கத் தெரிந்திருக்கவில்லை!"

சாவித்ரியின் கண்களிலிருந்து கலகலவென்று உதிர்ந்த கண்ணீர்த் துளிகள் வெண்ணிலவின் ஒளியில் முத்துக்கள் போல் பிரகாசித்தன

அந்த நாதஸ்வரக்காரன் கேதாரகௌள ராகந்தான் வாசிக்கிறானா? அல்லது உலக மகா காவியங்களிலுள்ள சோக ரஸத்தையெல்லாம் பிழிந்து நாதஸ்வரக் குழாய் வழியாயப் பொழிகின்றானா?"

0-0-0

# 4. நாற்காலி

**- கி. இராஜநாராயணன்**

நாற்காலி இல்லாததும் ஒரு வீடா?

எங்கள் வீட்டில் இப்படித் திடீரென்று எல்லோர்க்கும் தோன்றிவிட்டது. அவ்வளவுதான்; குடும்ப 'அஜெண்டா'வில் வைக்கப்பட்டு இந்த விஷயத்தில் விவாதம் தொடங்கியது.

முதல்நாள் எங்க வீட்டுக்கு ஒரு குடும்ப நண்பர் விஜயம் செய்தார். அவர் ஒரு சப்ஜட்ஜ். வந்தவர் நம்மைப் போல் வேட்டி சட்டை போட்டுக்கொண்டு வரப்படாதோ, சூட்டும் பூட்டுமாக வந்து சேர்ந்தார். எங்கள் வீட்டில் முக்காலிதான் உண்டு. அதன் உயரமே முக்கால் அடிதான். எங்கள் பாட்டி தயிர் கடையும் போது அதிலேதான் உட்கார்ந்து கொள்வாள். அவளுக்குப் பாரியான உடம்பு. எங்கள் தாத்தா தச்சனிடம் சொல்லி அதைக் கொஞ்சம் அகலமாகவே செய்யச் சொல்லியிருந்தார்.

சப்ஜட்ஜுக்கும் கொஞ்சம் பாரியான உடம்புதான். வேறு ஆசனங்கள் எங்கள் வீட்டில் இல்லாததால் அதைத்தான் அவருக்குக் கொண்டுவந்து போட்டோம். அவர் அதன் விளிம்பில் ஒரு கையை ஊன்றிக்கொண்டு உட்காரப் போனார். இந்த முக்காலியில் ஒரு சனியன் என்னவென்றால் அதன் கால்களுக்கு நேராகயில்லாமல் பக்கத்தில் பாரம் அமுங்கினால் வாரித் தட்டிவிடும். நாங்கள் எத்தனையோதரம் உறியில் வைத்திருக்கும் நெய்யைத் திருட்டுத் தனமாக எடுத்துத் தின்பதற்கு முக்காலி போட்டு ஏறும்போது அஜாக்கிரதையினால் பலதரம் கீழே விழுந்திருக்கிறோம். பாவம் இந்த சப்ஜட்ஜும் இப்போது கீழே

விழப்போகிறாரோ என்று நினைத்து அவரை எச்சரிக்கை செய்ய நாங்கள் வாயைத் திறப்பதற்கும் அவர் தொபுகடீர் என்று கீழே விழுந்து உருளுவதற்கும் சரியாக இருந்தது. நான், என் தம்பி, கடைக்குட்டித் தங்கை எங்கள் மூவருக்கும் சிரிப்புத் தாங்க முடியாமல் புழக்கடைத் தோட்டத்தைப் பார்க்க ஓடினோம். சிரிப்பு அமரும் போதெல்லாம் என் தங்கை அந்த சப்ஜட்ஜ் மாதிரியே கையை ஊன்றிக் கீழே உருண்டு விழுந்து காண்பிப்பாள், பின்னும் கொஞ்சம் எங்கள் சிரிப்பு நீளும்,

எங்கள் சிரிப்புக்கெல்லாம் இன்னொரு முக்கிய காரணம் அவர் கீழே விழும்போது பார்த்தலும் எங்கள் பெற்றோர்கள், தாங்கள் விருந்தாளிக்கு முன்னால் சிரித்து விடக்கூடாதே என்று வந்த சிரிப்பை அடக்கிக் கொண்டதை நினைத்துத்தான்!

ஆக நாங்கள் எல்லார்க்கும் சேர்த்துச் சிரித்துவிட்டு வீட்டுக்குள் பூனைபோல் அடி எடுத்து வைத்து நுழைந்து பார்த்தபோது அந்தப் பாரியான உடம்புள்ள விருந்தாளியைக் காணவில்லை! அந்த முக்காலியையும் காணவில்லை. அதை அவர் கையோடு கொண்டு போயிருப்பாரோ? என்று என் தங்கை என்னிடம் கேட்டாள்!

இந்த நிகழ்ச்சிக்குப் பின்னரே, எங்கள் வீட்டில் எப்படியாவது ஒரு நாற்காலி செய்துவிடுவது என்ற முடிவு எடுக்கப்பட்டது. இந்த நாற்காலி செய்வதில் ஒரு நடைமுறைக் கஷ்டம் என்னவென்றால், முதலில் பார்வைக்கு எங்கள் ஊரில் ஒரு நாற்காலி கூடக்கிடையாது! அதோடு நாற்காலி செய்யத் தெரிந்த தச்சனும் கிடையாது.

'நகரத்தில் செய்து விற்கும் நாற்காலியை வாங்கிக் கொண்டுவந்து விட்டால் போச்சு' என்று எங்கள் பெத்தண்ணா ஒரு யோசனையை முன் வைத்தான். அது உறுதியாக இராது என்று நிராகரித்துவிட்டார் எங்கள் அப்பா.

பக்கத்தில் ஒரு ஊரில் கெட்டிக்காரத் தச்சன் ஒருவன் இருப்பதாகவும் அவன் செய்யாத நாற்காலிகளே கிடையாது என்றும், கவர்னரே வந்து அவன் செய்த நாற்காலிகளைப் பார்த்து மெச்சி இருக்கிறார் என்றும் எங்கள் அத்தை சொன்னாள்.

அத்தை சொன்னதிலுள்ள இரண்டாவது வாக்கியத்தை கேட்டதும் அம்மா அவளை, 'ஆமா இவ ரொம்பக் கண்டா' என்கிற மாதிரிப் பார்த்து முகத்தைத் திருப்பிக் கொண்டாள்!

அப்பா வேலையாளைக் கூப்பிட்டு, அந்தத் தச்சனுடைய ஊருக்கு அவனை அனுப்பிவிட்டு எங்களோடு வந்து உட்கார்ந்தார். இப்போது, நாற்காலியை எந்த மரத்தில் செய்யலாம் என்பது பற்றி விவாதம் நடந்து கொண்டிருந்தது.

தேக்கு மரத்தில்தான் செய்ய வேண்டும். அதுதான் தூக்க வைக்க லேசாகவும், அதே சமயத்தில் உறுதியாகவும் இருக்கும் என்றாள் பாட்டி. தன்னுடைய நீட்டிய கால்களைத் தடவிக்கொண்டே (பாட்டிக்கு தன்னுடைய கால்களின் மீது மிகுந்த பிரியம். சதா அவைகளைத் தடவி விட்டுக்கொண்டே இருப்பாள்!)

இந்தச் சமயத்தில் எங்கள் தாய் மாமனார் எங்கள் வீட்டுக்குள் வந்தார். எங்கள் பெத்தண்ணா ஓடிப்போய் அந்த முக்காலியைத் தூக்கிக்கொண்டு வந்தான். சிறிது நேரம் வீடே கொல்லென்று சிரித்து ஓய்ந்தது.

மாமனார் எங்கள் வீட்டுக்கு வந்தால் அவருக்கென்று உட்காருவதற்கு அவரே ஒரு இடத்தைத் தேர்ந்தெடுத்து வைத்திருக்கிறார். தலை போனாலும் அந்த இடத்தில் தான் அவர் உட்காருவார். பட்டகசாலையின் தெற்கு ஓரத்திலுள்ள சுவரை ஒட்டியுள்ள தூணில் சாய்ந்துதான் உட்காருவார். உட்கார்ந்ததும் முதல் காரியமாகத் தன் குடும்பியை அவிழ்த்து ஒருதரம் தட்டித் தலையைச் சொறிந்துகொடுத்துத் திரும்பவும் குடுமியை இறுக்கிக் கட்டிக்கொண்டு விடுவார். இது அவர் தவறாமல் செய்கிற காரியம். இப்படிச் செய்து விட்டு அவர் தன்னையொட்டியுள்ள தரையைச் சுற்றிலும் பார்ப்பார். 'தலையிலிருந்து துட்டு ஒன்றும் கீழே விழுந்ததாகத் தெரியவில்லை' என்று அண்ணா அவரைப் பார்த்து எக்கண்டமாகச் சொல்லிச் சிரிப்பான்.

அவர் எங்கள் வீட்டுக்கு வரும்போதெல்லாம் இப்படிக் காகித பாணங்களினால் துளைத்தெடுக்கப்படுவார்! 'சம்மந்தகாரர்கள் நீங்கள் பார்த்து என்னைக் கேலி செய்யா விட்டால் வேறு யார் செய்வார்கள்' என்கிற வாயே திறக்காமல் கல்லுப்பிள்ளையார் மாதிரி அவர் பாட்டுக்கு உட்கார்ந்து புன்னகையோடு இருப்பார். எங்களுடைய ஏடாசிப் பேச்சுக்களின் காரம் அதிகமாகும்போது மட்டும் அம்மா எங்களைப் பார்த்து ஒரு பொய் அதட்டுப் போடுவாள். அந்த அதட்டின் வாக்கியத்தின் கடேசி வார்த்தை 'கழுதைகளா...' என்று முடியும்.

மாமனார் வந்து உட்கார்ந்ததும், அம்மா எழுந்திருந்து, அடுப்புக்கு அவசரமாய்ப் போனாள். அவளைத் தொடர்ந்து ஆட்டுக்குட்டியைப்போல அப்பாவும் பின்னால் போனார். கொஞ்ச நேரத்துக்கெல்லாம் ஆளோடி வழியாக அம்மா கையில் வெள்ளித் தம்ளரில் காயமிட்ட மோரை எடுத்துக்கொண்டு நடந்துவர,

அம்மாவுக்குப்பின்னால் அப்பா, அவளுக்குத் தெரியாமல் எங்களுக்கு மட்டும் தெரியும் படி வலிப்புக் காட்டிக்கொண்டே அவள் நடந்து வருகிற மாதிரியே வெறுங்கையை தம்ளர் ஏந்துகிற மாதிரிப் பிடித்துக்கொண்டு நடந்து வந்தார்! அவர் அப்படி நடந்து வந்தது, 'அவ அண்ணா வந்திருக்கானாம்; ரொம்ப அக்கறையாய் மோர் கொண்டு போய்க் கொடுக்கிறதைப் பாரு' என்று சொல்லுகிறது மாதிரி இருக்கும்.

மோரும் பெருங்காயத்தின் மணமும், நாங்களும் இப்பொழுதே மோர் சாப்பிடனும்போல் இருந்தது.

மாமனார் பெரும்பாலும் எங்கள் வீட்டுக்கு வருகிறது மோர் சாப்பிடத்தான் என்று நினைப்போம். அந்தப் பசுமாட்டின் மோர் அவ்வளவு திவ்வியமாய் இருக்கும். அதோடு எங்கள் மாமனார் எங்கள் ஊரிலேயே பெரிய கஞ்சாம்பத்தி. அதாவது ஈயாத லோபி என்ற நினைப்பு எங்களுக்கு.

இந்தப் பசுவை அவர் தன்னுடைய தங்கைக்காக கன்னாவரம் போய் தானே நேராக வாங்கிக் கொண்டு வந்தார். இந்தக் கராம்பசுவின் கன்னுக்குட்டியின் பேரில் என் தம்பிக்கும் குட்டித் தங்கைக்கும் தணியாத ஆசை, வீட்டைவிட்டுப் போகும்போதும் வீட்டுக்குள் வரும் போதும் மாமனார் பசுவை ஒரு சுற்றுச் சுற்றி வந்து அதைத் தடவிக் கொடுத்து (தன் கண்ணே எங்கே பட்டுவிடுமோ என்ற பயம்!) இரண்டு இரண்டு வார்த்தை சிக்கனமாகப் புகழ்ந்துவிட்டுத்தான் போவார் பால் வற்றியதும் பசுவை அவர் தன்னுடைய வீட்டுக்குக் கொண்டுபோய் விடுவார், கன்னுக்குட்டியும் பசுவோடு போய்விடும் என்ற பெரிய்ய பயம் என் சிறிய உடம் பிறப்புகளுக்கு.

பின்னால் ஏற்படப்போகிற இந்தப் பிரிவு அவர்களுக்குக் கன்னுக்குட்டியின் மேல் மேலும் பிரீதியையும் மாமனாரின் பேரில் அதிகமான கசப்பையும் உண்டுபண்ணி விட்டது. அவர் ருசித்து மோரைச் சாப்பிடும்போது இந்தச் சின்னஞ் சிறுசுகள் தங்களுடைய பார்வையாலேயே அவரைக் குத்துவார்கள்; கிள்ளுவார்கள்!

நாற்காலி விவாதத்தில் மாமனாரும் அக்கறை காட்டினார். தனக்கும் ஒரு நாற்காலி செய்யவேண்டுமென்று பிரியம் இருப்பதாகத் தெரிவித்தார். எங்களுக்கும் ஒரு துணை கிடைத்தது மாதிரி ஆயிற்று.

வேப்ப மரத்தில் செய்வது நல்லது என்றும் அதில் உட்கார்ந்தால் உடம்புக்குக் குளிர்ச்சி என்றும், மூல வியாதி கிட்ட நாடாது என்றும் மாமனார் சொன்னார்.

வேப்ப மரத்தைப் பற்றி பிராஸ்தாபித்தும் அப்பா மாமனாரை ஆச்சரியத்தோடு கூடிய திருட்டு முழியால் கவனித்தார். எங்கள் மந்தைப் புஞ்சையில் நீண்ட நாள் நின்று வைரம் பாய்ந்த ஒரு வேப்ப மரத்தை வெட்டி ஆறப்போட வேண்டுமென்று முந்தாநாள் தான் எங்கள் பண்ணைக்காரனிடம் அப்பா சொல்லிக்கொண்டிருந்தார் பெத்தண்ணா சொன்னான், 'பூவரசங் கட்டையில் செய்தால் ரொம்ப நன்றாக இருக்கும். அது இறுக்கமுள்ள மரம். நுண்ணமாகவும் பளபளப்பாகவும் இருக்கும் உறுதியுங்கூட' என்றான்.

அக்கா சொன்னாள், 'இதுகளெல்லாம் வெளிர் நிறத்திலுள்ளவைகள். பார்க்கவே சகிக்காது. கொஞ்ச நாள் போனால் இதுகள்மேல் நமக்கு ஒரு வெறுப்பே உண்டாகிவிடும். நான் சொல்லுகிறேன், செங்கரும்பு நிறத்திலோ அல்லது எள்ளுப் பிண்ணாக்கு

மாதிரி கருப்பு நிறத்திலோ இருக்கிற மரத்தில்தான் செய்வது நல்லது; அப்புறம் உங்களிஷ்டம்' என்றாள். பளிச்சென்று எங்கள் கண்களுக்கு முன்னால் கண்ணாடிபோல் மின்னும் பளபளப்பான கருப்பு நிறத்தில், கடைந்தெடுத்த முன்னத்தங்கால்களுடனும் சாய்வுக்கு ஏற்ற வளைந்த சோம்பல் முறிப்பது போலுள்ள பின்னத்தங் கால்களுடனும் ஒரு சுகாசனம் தோன்றி மறைந்தது.

எல்லார்க்குமே அவள் சொன்னது சரி என்று பட்டது. ஆக எங்களுக்கு ஒன்றும் எங்கள் மாமனார் வீட்டுக்கு ஒன்றுமாக இரண்டு நாற்காலிகள் செய்ய உடனே ஏற்பாடு செய்யப்பட்டது.

இரண்டு நாற்காலிகளும் எங்கள் வீட்டில் வந்து இறங்கியபோது அதில் எந்த நாற்காலியை வைத்துக்கொண்டு எந்த நாற்காலியை மாமனார் வீட்டுக்கு கொடுத்தனுப்புவது என்று எங்களுக்குத் தெரியவில்லை. ஒன்றைப் பார்த்தால் மற்றதைப் பார்க்கவேண்டாம்; அப்படி 'ராமர், லெச்சுமணர் மாதிரி' இருந்தது ஒன்றை வைத்துக்கொண்டு மாமனார் வீட்டுக்கு ஒன்றைக் கொடுத்தனுப்பினோம். கொடுத்தனுப்பியதுதான் நல்ல நாற்காலியோ என்று ஒரு சந்தேகம்!

ஒவ்வொருத்தராய் உட்கார்ந்து பார்த்தோம். எழுந்திருக்க மனசே இல்லை. அடுத்தவர்களும் உட்கார்ந்து பார்க்கவேண்டுமே என்பதற்காக எழுந்திருக்கவேண்டியதிருந்தது. பெத்தண்ணா உட்கார்ந்து பார்த்தான். 'ஆ...ஹா என்று ரசித்துச் சொன்னான். இரண்டு கைகளாலும் நாற்காலியின் கைகளைத் தேய்த்தான். சப்பணம் போட்டு உட்கார்ந்து பார்த்தான். இதுக்கு ஒரு உறை தைத்துப் போட்டுவிடவேணும் இல்லையென்றால் அழுக்காகிவிடும்' என்று அத்தை சொன்னாள்.

குட்டித் தங்கைக்கும் தம்பிப் பயலுக்கும் அடிக்கடி சண்டைவரும். 'நீ அப்போப் பிடிச்சி உக்காந்துகிட்டே இருக்கியே எழுந்திருடா நான் உட்காரணும் இப்போ' என்று அவனைப் பார்த்துக்கத்துவாள். 'ஐயோ, இப்பத்தானே உட்கார்ந்தேன்; பாரம்மா இவளை என்று சொல்லுவான், அழ ஆரம்பிக்கப் போகும் முகத்தைப் போல் வைத்துக்கொண்டு.

தீ மாதிரி பரவி விட்டது ஊருக்குள், எங்கள் வீட்டிற்கு நாற்காலி வந்தும் விஷயம். குழந்தைகளும் பெரியவர்களும் பெருங்கொண்ட கூட்டம் வந்து பார்த்துவிட்டுப் போனார்கள். சிலர் தடவிப் பார்த்தார்கள். ஒரு கிழவனார் வந்து நாற்காலியைத் தூக்கிப் பார்த்தார். 'நல்ல கனம்; உறுதியாகச் செய்திருக்கிறான்' என்று தச்சனைப் பாராட்டினார்.

கொஞ்ச நாள் ஆயிற்று.

ஒரு நாள் ராத்திரி ரெண்டு மணி இருக்கும். யாரோ கதவைத் தட்டினார்கள். உள் திண்ணையில் படுத்திருந்த பெத்தண்ணா போய்க் கதவைத் திறந்தான். ஊருக்குள் யாரோ ஒரு முக்கியமான பிரமுகர் இப்பொழுது தான் இறந்துபோய் விட்டாரென்றும் நாற்காலி வேண்டுமென்றும் கேட்டு எடுத்துக்கொண்டு போனார்கள்.

இறந்துபோன ஆசாமி எங்களுக்கும் வேண்டியவர் ஆனதால் நாங்கள் யாவரும் குடும்பத்தோடு போய்த் துஷ்டியில் கலந்துகொண்டோம். துஷ்டி வீட்டில் போய்ப் பார்த்தால்... எங்கள் வீட்டு நாற்காலியில் தான் இறந்துபோன அந்தப் 'பிரமுகரை' உட்கார்த்தி வைத்திருந்தார்கள்!

இதற்கு முன் எங்கள் ஊரில் இறந்துபோனவர்களைத் தரையில்தான் உட்கார்த்தி வைப்பார்கள். உரலைப் படுக்க வைத்து அது உருண்டு விடாமல் அண்டை கொடுத்து, ஒரு கோணிச் சாக்கில் வரகு வைக்கோலைத் திணித்து அதைப் பாட்டுவசத்தில் உரலின்மேல் சாத்தி அந்தச் சாய்மானத் திண்டுவில் இறந்துபோனவரை, சாய்த்து உட்கார்ந்திருப்பது போல் வைப்பார்கள்.

இந்த நாற்காலியில் உட்காரவைக்கும் புது மோஸ்தரை எங்கள் ஊர்க்காரர்கள் எந்த ஊரில் போய்ப் பார்த்து விட்டு வந்தார்களோ, எங்கள் வீட்டு நாற்காலிக்குப் பிடித்தது வினை (தரை டிக்கட்டிலிருந்து நாற்காலிக்கு வந்து விட்டார்கள்!)

அந்த வீட்டு 'விசேஷம்' முடிந்து நாற்காலியை எங்கள் வீட்டு முன் தொழுவில் கொண்டுவந்து போட்டுவிட்டுப் போனார்கள். அந்த நாற்காலியைப் பார்க்கவே எங்கள் வீட்டுக் குழந்தைகள் பயப்பட்டன. வேலைக்காரனைக் கூப்பிட்டு அதைக் கிணற்றடிக்குக் கொண்டுபோய் வைக்கோலால் தேய்த்துத் தேய்த்துப் பெரிய வாளிக்கு ஒரு பதினைந்து வாளி தண்ணீர் விட்டுக் கழுவித் திரும்பவும் கொண்டுவந்து முன் தொழுவத்தில் போட்டோம். பலநாள் ஆகியும் அதில் உட்கார ஒருவருக்கும் தைரியம் இல்லை. அதை எப்படித் திரும்பவும் பழக்கத்திற்கு கொண்டுவருவது என்றும் தெரியவில்லை.

ஒருநாள் நல்ல வேளையாக எங்கள் வீட்டுக்கு ஒரு விருந்தாளி வந்தார். அந்த நாற்காலியை எடுத்துக் கொண்டுவந்து அவருக்குப் போடச் சொன்னோம். அவரோ 'பரவாயில்லை நான் சும்மா இப்படி உட்கார்ந்து கொள்கிறேன்' என்று ஜமக்காளத்தைப் பார்த்துப்போனார். எங்களுக்கு ஒரே பயம்; அவர் எங்கே கீழே உட்கார்ந்து விடுவாரோ என்று. குடும்பத்தோடு அவரை வற்புறுத்தி நாற்காலியில் உட்கார வைத்தோம். அவர் உட்கார்ந்த உடனே சின்னத் தம்பியும் குட்டித் தங்கையும் புழக்கடைத் தோட்டத்தைப் பார்த்து ஓடினார்கள். மத்தியில் வந்து நாற்காளியில் உட்கார்ந்தவருக்கு என்ன ஆச்சு என்று எட்டியும் பார்த்துக் கொள்வார்கள்!

மறுநாள் எங்கள் வீட்டுக்கு வந்த உள்ளூர்க் கிழவனார் தற்செயலாகவே வந்து நாற்காலியில் உட்கார்ந்து எங்களுக்கு மேலும் ஆறுதல் தந்தார். ('இப்பொழுதே அவர் அந்த நாற்காலியில் உட்கார்ந்து பார்த்துக்கொள்வார்!' என்று பெத்தண்ணா என் காதில் மட்டும் படும்படியாகச் சொன்னான்).

இப்படியாக, அந்த நாற்காலியைப் 'பழக்கி'னோம். முதலில் வீட்டிலுள்ள பெரியவர்கள் உட்கார்ந்தோம். குழந்தைகளுக்கு இன்னும் பயம் தெளியவில்லை. 'கொஞ்சம் உட்காரேண்டே நீ முதலில்' என்று கெஞ்சுவாள் குட்டித் தங்கை தம்பிப்பயலைப் பார்த்து, 'ஏன், நீ உட்காருவது தானே?' என்பான் அவன் வெடுக்கென்று.

எங்கள் வீட்டுக்கு வந்திருந்த பக்கத்துத் தெரு சுகந்தி தன்னுடைய ஒரு வயசுத் தம்பிப் பாப்பாவைக் கொண்டு வந்து உட்கார வைத்தாள். அந்த நாற்காலியில் அதிலிருந்துதான் எங்கள் வீட்டுக் குழந்தைகளும் பயமில்லாமல் உட்கார ஆரம்பித்தார்கள்.

திரும்பவும் ஒரு நாள் ராத்திரி, யாரோ இறந்து போய்விட்டார்கள் என்று நாற்காலியைத் தூக்கிக் கொண்டு போய்விட்டார்கள். இப்படி அடிக்கடி நடந்தது.

நாற்காலியை வருத்தத்தோடுதான் கொடுத்தனுப்புவோம். வந்து கேட்கும் இழவு வீட்டுக்காரர்கள் எங்கள் துக்கத்தை வேறு மாதிரி அர்த்தப்படுத்திக் கொள்வார்கள். தங்களவர்கள் இறந்துபோன செய்தியைக் கேட்டுத்தான் இவர்கள் வருத்தம் அடைகிறார்கள் போலிருக்கிறது என்று நினைத்துக் கொள்வார்கள்.

தூக்கம் கலைந்த எரிச்சல் வேறு 'செத்துத் தொலைகிறவர்கள் ஏன்தான் இப்படி அகாலத்தில் சாகிறார்களோ தெரியவில்லை' என்று அக்கா ஒருநாள் சொன்னாள்.

'நல்ல நாற்காலி செய்தோமடா நாம்; செத்துப்போன ஊர்க்காரன்கள் உட்காருவதற்காக, சை' என்று அலுத்துக்கொண்டான் அண்ணன்.

'நாற்காலி செய்யக் கொடுத்த நேரப் பலன்' என்றாள் அத்தை.

பெத்தண்ணா ஒரு நாள் யோசனை செய்தான். அதை நாங்கள் இருவர் மட்டிலும் தனியாக வைத்துக்கொண்டோம்.

ஒரு நாள் அம்மா என்னை ஏதோ காரியமாக மாமனாரின் வீட்டுக்குப் போய்வரும்படி சொன்னாள்.

நான் அவருடைய வீட்டுக்குள் நுழைந்தபோது மாமனார் நாற்காலியில் அமர்க்களமாய் உட்கார்ந்து வெற்றிலை போட்டுக்கொண்டிருந்தார். அவர் வெற்றிலை போடுவதை பார்த்துக்

கொண்டிருப்பதே ஒரு சுவராஸ்யமான பொழுதுபோக்கு. தினமும் தேய்த்துத் துடைத்த தங்க நிறத்தில் பளபளவென்றிருக்கும் சாண் அகலம், முழ நீளம், நாலு விரல் உயரம் கொண்ட வெற்றிலைச் செல்லத்தை நோகுமோ நோகாதோ என்று அவ்வளவு மெல்லப் பக்குவமாகத் திறந்து, பூஜைப் பெட்டியிலிருந்து சாமான்களை எடுத்து வைக்கிற பதனத்தில் ஒவ்வொன்றாக எடுத்து வெளியில் வைப்பார். வெற்றிலையை நன்றாகத் துடைப்பாரோ தவிரக் காம்புகளைக் கிள்ளும் வழக்கம் அவரிடம் கிடையாது. (அவ்வளவு சிக்கனம்!) சில சமயம் மொறசல் வெற்றிலை அகப்பட்டு விட்டால் மட்டும் இலையின் முதுகிலுள்ள நரம்புகளை உரிப்பார். அப்பொழுது நமக்கு, 'முத்தப்பனைப் பிடிச்சு முதுகுத்தோலை உறிச்சி பச்சை வெண்ணெயைத் தடவி...' என்ற வெற்றிலையைப் பற்றிய அழிப்பாங்கதைப் பாடல் ஞாபகத்துக்கு வரும்.

களிப்பாக்கை எடுத்து முதலில் முகர்ந்து பார்ப்பார். அப்படி முகர்ந்து பார்த்துவிட்டால் 'சொக்கு' ஏற்படாதாம். அடுத்து அந்தப் பாக்கை ஊதுவார்! அதிலுள்ள கண்ணுக்குத் தெரியாத பாக்குப் புழுக்கள் போகவேண்டாமா, அதற்காக, ஆரம்பத்தில் மெதுவாக ஆரம்பிக்கும் இந்த முகர்ந்து பார்த்தலும் ஊதலும் வரவர வேகமாகி ஒரு நாலைந்து தடவை மூக்குக்கும் வாய்க்குமாகக் கை மேலும் கீழும் உம் உஷ் உம் உஷ் என்ற சத்தத்துடன் சுத்தமாகி டபக்கென்று வாய்க்குள் சென்றுவிடும்!

ஒருவர் உபயோகிக்கும் அவருடைய சுண்ணாம்பு டப்பியைப் பார்த்தாலே அவருடைய சுத்தத்தைப் பற்றித் தெரிந்துவிடும். மாமனார் இதிலெல்லாம் மன்னன் விரலில் மிஞ்சிய சுண்ணாம்பைக் கூட வீணாக மற்றப் பொருள்களின்மேல் தடவ மாட்டார். அவருடைய சுண்ணாம்பு டப்பியை எடுத்துக் கண்ணில் ஒற்றிக் கொள்ளலாம். பதினைந்து வருஷத்துக்கு முன் வாங்கிய எவரெடி டார்ச்லைட் இன்னும் புத்தம்

புதுசாக இப்பொழுதுதான் கடையிலிருந்து வாங்கிக் கொண்டு வந்ததோ என்று நினைக்கும்படியாக உபயோகத்தில் இருக்கிறது அவரிடம் அதோடு சேர்த்து வாங்கிய எங்கள் வீட்டு டார்ச் லைட் சொட்டு விழுந்து நெளிவாகி மஞ்சள் கலரில் பார்க்கப் பரிதாபமாக ஒரு சாகப்போகும் நீண்டநாள் நோயாளியைப்போல் காட்சியளிக்கிறது.

நாற்காலியை அவர் தவிர அந்த வீட்டில் யாரும் உபயோகிக்கக்கூடாது. காலையில் எழுந்திருந்ததும் முதல் காரியமாக அதைத் துடைத்து வைப்பார். ஒரு இடத்திலிருந்து அதை இன்னொரு இடத்துக்குத் தானே மெதுவாக எடுத்துக்கொண்டு போய்ச் சத்தமில்லாமல் தண்ணீர் நிறைந்த மண்பானையை இறக்கி வைப்பது போல் அவ்வளவு மெதுவாக வைப்பார்.

மாமனார் என்னைக் கண்டதும் 'வரவேணும் மாப்பிள்ளைவாள்' என்று கூறி வரவேற்றார். 'கொஞ்சம் வெற்றிலை போடலாமா?' என்று என்னைக் கேட்டுவிட்டுப் பதிலும் அவரே சொன்னார், 'படிக்கிறபிள்ளை வெற்றிலை போட்டால் கோழி முட்டும்!'

அம்மா சொல்லியனுப்பிய தகவலை அவரிடம் சொல்லிவிட்டு வீடு திரும்பினேன்.

ராத்திரி அகாலத்தில் கதவு தட்டும் சத்தம் கேட்டது. வீட்டில் எல்லாம் அயர்ந்த தூக்கம். நான் பெத்தண்ணாவை எழுப்பினேன்.

நாற்காலிக்காக வந்த ஒரு இழவு வீட்டுக்காரர்கள் வெளியில் நின்று கொண்டிருந்தார்கள். பெத்தண்ணா அவர்களைத் தெருப்பக்கம் அழைத்துக்கொண்டு போனான். நானும் போனேன். வந்த விஷயத்தை அவர்கள் சொல்லி முடித்ததும் பெத்தண்ணா அவர்களிடம் நிதானமாகப் பதில் சொன்னான்.

'நாற்காலி தானே...? எங்கள் மாமனார் வீட்டில் இருக்கிறது. போய்க் கேளுங்கள் தருவார், அவர்களை அனுப்பிவிட்டு, வீட்டுக்குள் வந்து இருவரும் சத்தமில்லாமல் சிரித்தோம்!

அப்பா தூக்கச் சடைவோடு படுக்கையில் புரண்டு கொண்டே 'யார் வந்தது?' என்று கேட்டார்.

'வேலையென்ன... பிணையலுக்கு மாடுகள் வேணுமாம்' என்றான் பெத்தண்ணா.

துப்பட்டியை இழுத்துப் போர்த்திக்கொண்டு மறுபுறம் திரும்பிப் படுத்துக்கொண்டார் அப்பா.

இப்பொழுது மாமனார் காட்டில் பெய்துகொண்டிருந்தது மழை!

ரொம்ப நாள் கழித்து, நான் மாமனார் வீட்டுக்கு ஒரு நாள் போனபோது அவர் தரையில் உட்கார்ந்து வெற்றிலை போட்டுக்கொண்டிருந்தார். வழக்கமான சிரிப்புடனும் பேச்சுடனும் என்னை வரவேற்றார்.

'என்ன இப்படிக் கீழே நாற்காலி எங்கே?' சுற்று முற்றும் கவனித்தேன். வெற்றிலையின் முதுகில் சுண்ணாம்பைத் தடவிக் கொண்டே என்னை ஆழ்ந்து பார்த்துப் புன்னகை செய்தார். பின்பு அமைதியாக அந்தக் காரியத்துக்கே 'அந்த நாற்காலியை வைத்துக் கொள்ளும்படி நான் கொடுத்துவிட்டேன். அதுக்கும் ஒன்று வேண்டியதுதானே?' என்றார்.

எனக்கு என்ன சொல்வது? தெரியவில்லை. வீட்டுக்குத் திரும்பி வரும்போது இந்தச் செய்தியைச் சொல்லப் பெத்தண்ணாவிடம் வேகமாக விரைந்தேன். ஆனால் வரவர என்னுடைய வேகம் குறைந்து தன் நடையாயிற்று.

0-0-0

## 5. மானுடம் வெல்லும்

**- திலகவதி**

கேசவனுக்கு ரத்தம் கொதித்தது. பரிமளா மனக்கண்ணில் தோன்றி மறைந்தவாறிருந்தாள். அவளுடைய பதினேழு வயது அவனை பயமுறுத்தியது அவளைக் கண் சிவக்க சிவக்க பார்த்துக் கனவுகளை விதைத்து வந்த மாரி பதினான்கு வயதிலேயே கல்யாணமாகிப் போனது ஏனோ திடீரென்று வந்தது. அவள் மட்டுமென்ன பதினெழு வயசாகியும் கல்யாண மாகாத பெண்கள் யார்தான் அவன் வாழ்ந்த பகுதியில் இருந்தார்கள். பரிமளாவுக்கும் எல்லோரையும் போல பெற்றோர் இருந்திருந்தால் அவளுக்கும் இப்போது மாரியைப்போல இரண்டு குழந்தைகள் இருந்திருக்குமோ? "அண்ணா! கேசவண்ணா! என்ன இன்னிக்கு கம்பெனிக்கு புறப்படத்தயாராயில்லையா? இட்லி வாங்கியாந்திருக்கிறேன். ம், ம் கிளம்பு" என்ற தாயின் பரிவோடு அதட்டிய தங்கை பரிமளாவை ஊடுருவின அவன் கண்கள். இவளுக்குத் தான் என்ன குறைச்சல். நன்றாகத்தான் இருக்கிறாள். கெட்டிக்காரத்தனமாகத்தான் பேசுகிறாள். பின் இல்லாமலா சுரேந்தர் கம்பெனி நண்பன் என்று சொல்லிக்கொண்டு வீட்டை வளைய வந்தான். அவனது உணர்ச்சிகள் ஒரு உருவங்கொள்ளுமுன்பே மொணவூர் சம்பந்தம் வலிய வந்து அவனை தொத்திக்கொண்டு போனது. இல்லாவிட்டால் காதல் அது இது என்று பரிமளாவும்... அவனால் மேற்கொண்டு அந்தப் பாணியில் சிந்திக்க முடியவில்லை. பரிமளா அவனைப் பொறுத்தவரை அந்த மாதிரி 'துர்நடத்தைகள்' இல்லாத பதவிசான பெண்.

இன்றைக்கு என்னமோ திடீரென்று இவள் அப்படித்தான் ஏதாவது செய்து வச்சாளா என்று தோன்றியது. தன் கையாலாகதனத்தை எண்ணி நொந்து கொண்டான். தனிப்பட்ட முறையில் சிந்தித்தால் அவனே இளைஞன். பரிமளாவை விட ஐந்து வயதுதான் பெரியவன். இயற்கையின் நிர்ப்பந்தமும் அவர்களது நிராதரவான நிலையும் பரிமளத்தின் வாழ்வை அவனது பொறுப்பாக்கி இருந்தன.

பொய்கை சந்தையில் கடலை, பொரி வியாபாரம் முடிந்தது. கடை, ஞாயிறு நெருக்கமாதலால் சூடான வியாபாரத்தில் குவித்த காசை அள்ளிக்கொண்டு வீடு நோக்கி வந்த சுந்தரமும் அலமேலுவும் லாரி மோதி ரத்த வெள்ளத்தில் மிதந்தது நினைவுக்கு வந்து என்னவோ செய்தது.

பத்தாம் வகுப்பு படித்துக்கொண்டிருந்தான். கேசவன் அப்போது காடா விளக்கின் அடியில் உட்கார்ந்து தமிழாசிரியர் சொல்லிச் சொல்லி பதிந்து விட்ட தெரு விளக்கின் அடியில் படித்து மேதையானவரின் செய்தியை நெஞ்சம் அசை போட மார்க்குகள், மார்க்குகள், மார்க்குகள் என்ற வெறி மாநிலத்திலேயே முதலாவதாக வந்தால் மேற்கொண்டு படிக்க பணம் தந்தியில் தருவார்கள் என்ற பெட்டிக்கடை குப்பன் சொல்லியதை எண்ணி வெறி வந்தவன் போல கனவும் நினவும் படிப்பே என்று கிடந்தான்.

அலமேலு மட்டும் அவ்வப்போது மகனுக்குப் புத்தி சொல்வாள், “ஏண்டா பையா, சந்தைக்கு போறதும், சரக்கு போடறதும், கடையிலே யாவாரஞ் செய்யறதும் அந்த ஒரு மனுசந்தான் எத்தினி காலம் பார்க்கும்? அங்கங்கே புள்ளங்க பத்துப் பனிரெண்டு ஆவறதுள்ள என்னா சாமார்த்தியாக வேலை வெட்டி பண்ணி காசு பார்க்குது. நீ என்னடான்ன வெட்டி வேலை பண்ணிக்கிட்டே எந்நேரமும் பொஸ்தமுகம் பேனாவும்னு பொழுதை அழிக்கிறே” என்பாள்.

விவரம் தெரியாத பருவத்திலேயும் பரிமளா சொல்றதுண்டு. "ஏம்மா அண்ணனைத் திட்டுறே. யாவாரத்துக்கு என்ன கூட்டிம்போ. அத நெல்லா படிச்சி ஆப்பிசர் வேலைக்கு போவட்டுமே"

"ஆமா, இந்தூரு கலெக்டர் வேலைக்குத்தான் ஆள் அம்படலேன்னு கெடக்கறாங்க. பெரிய மனுஷி வந்துட்டா, போடி" என்று வார்த்தையில் சூடும், முகத்திலே சிரிப்புமாகச் சொல்லுவாள் அலமேலு.

அலமேலுவுக்கும் நப்பாசை உண்டுதான். 'அட ஆயிரம் தான் இருக்கட்டுமே. படிச்ச பிள்ளைன்னா அதும் மதிப்பே தனிதான். போன வருசம் பள்ளி தொறந்த சமயம் கடைக்குப் போயி பயலுக்க பொஸ்தகம், நோட்டுகள் வாங்க பெரிய மனுசங்களோட சமதையா நின்னு வாங்கினப்ப இந்த நெஞ்சுதான் என்ன துள்ளாட்டம் போட்டுது. பத்து படிக்கங்காட்டியந்தானே எல்லம்மா மவன் சின்னமுத்து கரண்டு ஆபிசிலே கிளார்க்கா போயிட்டான். ஆனா அதுக்குன்னு அப்பன் பாட்டன் தொழில் சட்டை பண்ணாம இருக்கறதை பார்த்து கிட்டு சும்மா இருந்தா, பய கண்றோல் இல்லாமலில்ல போயிடுவான் என்று எண்ணிக் கொண்டே அதனாலே அப்பப்ப இப்படி எதையாவது சொல்லி வைப்பாள்.

லாரி என்னும் அரக்கன் ஒரே நாளில் பெத்தவங்க ரெண்டு பேரையும் பறிச்சிக்கிட்டுப் போகவுந்தான் செய்தி தெரிந்து இவங்க இரண்டு பேரும் திருக்குழி பாலத்தண்டை போறதுக்குள்ளே அலமேலு சவமாய்ப் போனாள். அப்பனை வேலூரு ஆஸ்பத்திரிக்கு கொண்டு வந்தாங்க. காலை எடுத்துட்டா பொழைப்பான்னாங்க. சுந்தரத்துக்குத்தான் நம்பிக்கையில்லே. மகனையும் மகளையும் கண்சோர பார்ப்பான். கேசவனின் முகத்தைத் தடவிக்கொடுப்பான். மகளின் தலையைக் கோதுவான். கேசவனிடத்தில் சொன்னான்: "கேசவா என் பாட்டன் சொத்து பாகம் பிரியாத நிலம். நம்ப பாகத்தே

என் பெரியப்பன் மகன் பத்தாயிரத்துக்கு கேட்டுக்கிட்டிருந்தான். அதை வித்து பாங்கிலே போட்டுரு. சரக்கு முதல் ஐயாயிரம் வச்சிருக்கேன். அதையும் ரொக்கமாக்கிரு. பெரிய மனுசனா இருந்து தங்கச்சி பரிமளத்தே ஒரு நல்ல இடத்திலே கொடு. சிட்டுக் குருவித் தலையிலே பனங்காய வைக்கும்படி பண்ணிட்டானே பகவான்" என்பான். இவ்வளவு கனமான விஷமெல்லாம் பிஞ்சுகளுக்கு விளங்குமோ என்று தனக்குள்ளேயே கேட்டுக்கொள்வான். அடுத்த தெருவில் இருக்கும் மச்சானையும் வரச்சொல்லி, "சிதம்பரம்! இப்படி பண்ணிடு... விவரம் தெரியாத சிறுசுங்க. இருக்கிற வீடு ஒண்ணு தவிர வேறெதையும் நான் சேர்க்கல புள்ளங்களுக்கு தொணையுமில்லே. அத்தை இதுகளோடு வந்திருக்கட்டும். பாட்டி கூட இருக்கறாங்கன்னு சின்னவ ஒரு தெம்பா இருப்பா" என்றான்.

"ஏம் மச்சான் இந்த பேச்சு இப்ப. ஜம்முன்னு வந்து ரெட்டை வண்டியிலே சரக்கு எடுத்தும் போய் யாவாராஞ்செய்யத்தான் போறே நானும் பார்க்கத்தான் போறேன். ஓயாம ஒன்பது வயதுப் பொண்ணு கல்யாணத்தே எடுத்துக் கலங்கறியே, சொம்மா! பொறந்த அன்னிக்கே எங்க தங்கவேலுக்குன்னுதான் முடிச்சி போட்டிச்சே என் மருமவளே" என்று எவ்வளவோ பேசி உற்சாகத்தை ஊட்ட அவன் முயன்றான். ஆனாலும் நடந்ததென்னவோ வேறு. இந்தப் பேச்சு நடந்த இரண்டே நாளில் ஆபரேசன் பண்ணியதில் ஏதோ கோளாறு என்று சுந்திரத்தின் உடல் நிலை மேலும் சீர்குழிந்த போது, அவன் வாராவாரம் சந்தைகளுக்கு அலைவதைவிட நிரந்தரமான மளிகைக்கடை ஒன்று மொணவூரிலேயே போட்டு விட வேணடும் என்ற எண்ணத்துடன் சிறுகச் சிறுக சேர்த்த பணம் ஐயாயிரம் இருந்தது. அதைத் தன் தாயிடம் கொடுத்தான். பிள்ளைகள் எதிர்காலம் அவன் நெஞ்சை விசுவரூபமாகி கிழித்தது கண்களில் தெரிந்தது.

வாார்தைகளுக்காக தடுமாறியவன் நிரந்தரமான மௌனத்தில் மூழ்கினான்.

'நல்ல வேலை பெரிய பயலுக்கு பின்ன பொறந்தது ரண்டும். பொறந்ததும் போய்ச் சேர்ந்தது. இல்லாட்டி பாவம் இந்த சின்னஞ் சிறுசு என்னதான் செய்ஞ்சிக்கும்' என்றது ஊர். கேசவனை விட ஐந்து வயது சிறியவளான பரிமளா விவரம் தெரியாத நான்கு வயதில் வீடு நிறைய தான் இதுவரை கண்டேயிராத உறவினர்கள் நிற்பதில் 'அவ்ளாம் பெரிய்ய பூ மாலை' பெற்றோர் மீது கிடப்பதில் சந்தோஷமாகக் கூட இருந்தாள். காரியம் முடிந்த கையோடு நாட்டாமைதான் பிரச்சினையைத் துவக்கினார்.

"வேலாயி, ஒரே மவன் ஜாதி விட்டு கட்டிட்டான்னு இது நா வரை மவளோடயே இருந்தே. இப்ப ஒண்ணு இதுச ரெண்டையும் அங்க கூட்டிட்டுப் போயிரு. இல்ல, நீயாச்சும் வந்து அதுகளோட இரு". புதுச்சோகம் கூட வேலாயியின் இதயத்தை ஈரமாக்கவில்லை. அவளைப் பொறுத்தவரை மகனும் கூடப் போனதால் ஏற்பட்ட கட்டாய நிர்ப்பந்தத்தால்தான் அவள் சாவுக்கே வந்தாள். ஊர் முழுக்கப் பொருமியது. "ஆனா கெழவிக்கு இந்த ஆவணம் ஆகாது. ஆனாலும் இந்த கல் மனசுக்காரியிடம் கட்டாயப்படுத்தி பிள்ளைகளை விட்டு வைத்தாலும் அதுங்களுக்கு என்ன மாதிரி அன்பும் அரவணைப்பும் கிடைக்கும்?"

திடீர்னு இறந்தவளின் ஒன்றுபட்ட அத்தைப் பாட்டி பேசினாள். "நான் ஒரு வீணாய்ப் போனவ இருக்கேன் அவளை ஆளாக்கன மாதிரி என் ஆயுசு இருக்கறவரை இதுங்களுக்கு தொணையா இருக்கறேன் அப்புறம் ஆண்டவன் விட்ட வழி". கூட்டம் சலசலத்து, வேலாயி எழுந்தாள். அப்ப நா போயி அவன் கொடுத்த ரொக்கத்தை கொண்டாறேன். சபையிலே முடிச்சுக்கலாம்."

பாட்டி நாட்டாமையிடம் சொன்னாள்: "பெரிய கவுண்டரே! அந்தம்மா பணம் காசு ஏதாச்சும் தர்ரதுன்னா பையன் பெரியனவானதும் அவன்ட்ட தரச் சொல்லும். நான் இவங்க தர்ர காசுக்கு ஆசைப்பட்டு புள்ளங்களே வளர்க்கிறேன்னு வல்ல. மாப்பிள கடைசி மூச்சோடு சொன்ன சொல்லுபடி அந்தம்மா பரிமளா கல்யாணத்துக்கு செலவுக்கு வைச்சுக்கிடட்டும். அதை வுட்டுட்டு இப்ப காசு பணத்தை விட்டெறிஞ்சா அந்த மனுசன் ஆவி கூட அடங்காது. இதுக்கு மீறி அந்த பணத்தை வாங்கச் சொல்லி வற்புறுத்தனா நானும் கிளம்பி ஊரைப் பாக்க போயிட வேண்டியதுதான்."

நட்டாமை மௌனமாக வேலாயியை ஏறிட்டார். வேலாயி அப்படியே அடங்கி மடிந்தாற்போல உட்கார்ந்தாள்.

**"செடியேறிப் பூப்பறிச்சு, செண்டறிய மாலை கட்டி**

**சிவனார் கோவிலுக்குச் சிவப்படியும் கொண்டு போனேன்**

**சிவப்படியும் தவருச்சு; சேர்ந்த மவனுமில்லை**

**சிவனார் பக்கமில்லை"**

அவளது ஒப்பாரிச் சத்தம் ஊரெங்கும் எதிரொலித்தது. அதற்கப்புறமும் இந்த பனிரெண்டு வருடங்களும் அவள் ஒரு விருந்தாளியாகத்தான் வந்து போய்க்கொண்டிருந்தாள்.

கேவசன் மெடல் வாங்க வேண்டும் என்ற ஆசைகளையும், இஞ்சினியர் வேலைக்குப் போக வேண்டும் என்ற கனவையும் பத்தாம் வகுப்புப் புத்தகங்கள் நோட்டுகளுடனே இறுக்க கட்டினான். அவனுக்கு வேலை கொடுத்திருந்த பேக்டரி கதவடைப்பு செய்த ஒரு காலத்தில் அந்தக் கட்டு ஒரு நாள் உணவாக மாறியது. எப்படியோ அப்ரண்டிசாக

சேர்ந்த அவன் ஹாலந்த் - இந்திய கூட்டு முயற்சியால் உருவான தொழிற்சாலை ஒன்றில் மிகச் சிரமப்பட்டுக் கொண்டு உழைத்தான். அதனால் தங்கைக்கு கொஞ்சம் நகை நட்டுக்களையும் பாத்திரங்களையும் சேர்த்து வைத்திருந்தான். அவளை நன்றாக படிக்க வைத்து பெரிய டாக்டரம்மாவாக்கி விட வேண்டும் என்று ஓய்ந்த நேரங்களில் தனக்குத்தானே ஒரு உற்சாக ஊசியை போட்டுக்கொள்வான். வேணுகோபால் துவரங்குடியில் இருந்து பெண் கேட்டு வந்த போது அவனது இந்தக் கனவுகளையும் சிதைத்தது அத்தைப் பாட்டியின் யதார்த்தமான பேச்சுத்தான். பெண் பார்ப்பதற்கு சௌகரியமானதென்று வேண்டா வெறுப்பாக ஒரு நாளை குறித்துத் தந்தான். எப்படியாவது கல்யாணத்தை நடத்தி விட வேண்டும் என்ற வேகம் இல்லா நிலையில் இருந்ததால் ரொம்பவும் எடுத்தெறிந்தாற்போல இருந்தது அவன் பேச்சு.

"மாமா! பையன் நல்லாப் படிச்சவன், இலட்சணமானவன்னு நீ இவ்வளவு தூரம் சொல்றதாலே சம்மதிக்கறேன். என் தங்கச்சிய கட்டிட்டு போறதுக்கு லட்சம் கொடுத்தாலும் தகும். இங்க வந்த எல்லாரிட்டயும் பேசறாப்பல, காசு கணக்கு அது இதுன்னு பேசுனாங்களோ, நடக்கறதே வேற". வேணு கோபால் கண்களில் சிரிப்பு கொப்பளிக்க அவனைப் பெருமையுடன் பார்த்தார். "போடா சர்த்தான் பெரிய மனுசனாட்டம்" என்று துண்டை உதறிப் போட்டுக்கொண்டு கிளம்பினார். சொன்னாற்போல ஐந்தாவது நாள் மாலை தாய் தகப்பனோடு மாப்பிள்ளைப் பையனை அழைத்துக்கொண்டு வேணு மாமா வந்தார். பார்க்க பதவிசாக எளிமையாகவும் லட்சுமிகரமாகவும் இருந்த அந்த அம்மாவைத்தான் முதலாவது மனசுக்குப் பிடித்தது அவனுக்கு. பையனை நோட்டமிட்டான். வாட்டசாட்டமான உருவம். அநாகரீகப் போர்வையோ, வெளி வேஷமோ இல்லாத இயல்பான நடத்தை,

முதிர்ச்சியான அறிவு என்பவற்றைக் காட்டும் தோற்றம். பெண் பார்ப்பதை ஒரு மாட்டை விலைக்கு வாங்கும் அருவருப்பான சடங்காகச் செய்யாமல் ஏற்கனவே நிச்சயமான பெண்ணைக் குறித்து கல்யாணத்துக்கு நாள் குறிக்க வந்தவர்கள் பேச்சைப் போலிருந்தது அவர்கள் போக்கு.

அவனுக்கு மனது குளிர்ந்தது நிம்மதி வந்து மனசு பூராவும் நிறைந்தது போலிருந்தது. வீட்டுத் தாழ்வாரத்திலே நின்றிருந்த வேணுவைத் தேடிப்போய் மனிதன் சந்தோஷமெல்லாம் கண்களில் துளும்ப மாமா என்றபடி அவரது இரு கைகளையும் சேர்த்துப் பிடித்துக்கொண்டு உணர்ச்சி பிரவாகம் தொண்டையை அடைக்க பேச்சு எழாமல் தடுமாறினான்.

"சீச்சி! பைத்தியகாரா! உனக்குப் பிடிச்சிருந்தாப் போதுமா, பரிமளத்தைக் கேள்ரா. நெதனாமாக்கேளு. அவசரமே இல்லை. மாப்பிள்ளைதான் நிச்சயம் பண்ணி ஒரு வருசங்களிச்சு கல்யாணத்தை வச்சிரலாம்ங்காராரே!" கேசவன் புருவங்கள் கேள்விக்குறியாக வளைந்தன. மாப்பிள்ளைப் பையன் அருகே வந்தான். "ஆமாங்க சார்! நிச்சய தாம்பூலம் மாத்திடுவம் முதல்லே!"

"ஏன்! செய்யறதுன்னு ஆயிட்டா சீக்கிரமா முடிச்சுடறது நல்லதல்லே" - இது பாட்டி.

"வேண்டாம் தம்பி மாப்பிள்ளை இஷ்டத்துக்கு கல்யாணத்தை நெதானமாவே வச்சிக்கலாம்."

புதிராக இருந்தது கேசவனுக்கு.

தடையில்லனா காரணம் என்னனுன்னு நாங்க தெரிஞ்சுக்கலாமா? பவ்யமே வடிவானான் கேசவன்.

குழப்பம் இருளாய்ப் படர மாப்பிள்ளை தயங்க, "கேசவா! காசு பணம் வெவகாரம் வாய் வார்த்தையாகக் கூட வேண்டாம்னியே. இப்ப வற்புறுத்தினா பேசும்படியாயிருக்குமேனு பார்க்கிறாரு."

"பேசட்டுமே மாமா! ஆயிரங்காலத்துப் பயிரு! கொள்வினை கொடுப்பினை அறுத்து பேசாட்டா எப்பிடி முடிவாவும். இதிலே தப்பென்ன? ஒரு கல்யாணம்னா பல வேலங்க இருக்கிறதுதான். இன்னாரு இன்னது செய்யனும்னு ஒரு ஒப்புரவு உடைச்சுப் பேசனாத்தானே புரிபடும்."

கேசவன்தானா பேசுவது?

"ஒண்ணுமில்லிங்க சார்! ஏதோ டெம்பரரியா வேலை பார்க்றேன். கஷ்டம்னு இல்லாவிட்டாலும் பெர்மணன்ட் உத்தியோகம்னு இருந்தா அது கணக்கே வேறேல்ல! ஒரு மாதிரியா டி.வி.சியிலே ஏற்பாடு பண்ணியிருக்கிறேன். அதுக்கு ஒரு தொகை டிபாசிட்டா கட்டணும்கறாங்க. அதை சரிப்பண்ண எப்படியும் ஒரு ஆறேழுமாசம் ஆயிடும். அதுக்கப்புறம் கல்யாணத்தை வச்சிக்கலாமே.."

இதுக்காகத்தான் அந்தப் பேச்சு வேண்டான்னேன். இவ்வளவு சீர் வையுங்கன்னு வெளிப்படையா கேக்குறது மாதிரி ஆயிடும். நீங்க பொண்ணை கொடுத்தா போதும். அதுக்கும் மேலே நிச்சயம் பண்ண தேதிக்கு மேலே ஆறு மாதம் காத்திருந்தா போதும்."

"இது என்ன பேச்சு! அதுக்குன்னு இவ்வளவு தூரம் பேச்சு வந்தப்ப எங்க வீட்டு பெண்ணு பொழைக்க நாங்க செய்யறோம்! சரி வேணா, மனுசனுக்கு மனுசன் இதை செய்யாட்டா எப்படி?" வேண்டாம் என்று மாப்பிள்ளை வீட்டாரும் கொடுப்போம் என்று பெண் வீட்டாரும் ஏக ரகளை ஆகிக்கொண்டிருந்தது.

“சர்த்தான் ரூபாய் இரண்டாயிரம் போனாலும் போவுது. லைன் கிளியரானாத் தேவலைன்னு இருக்கு கேசவனுக்கு போகட்டும் விடுங்க! ஒத்துக்கிட்டு சட்டுப் புட்டுனு நாள் குறிங்க என்று முத்தாய்ப்பு வைத்தார் வேணு.

தோட்டப்பாளையம் ஜோசியரிடம் கேட்டு தெரிவிப்பதாக மாப்பிள்ளை வீட்டார் புறப்பட்டார்கள். சொல்லி விட்டானே தவிர ரூபாயை எப்படி சரிக்கட்டுவதென்று புரியவில்லை. யாரிடமாவது கடன் வாங்கி எப்படியும் புரட்டி விடலாம் என்ற தைரியம் இருந்தது.

நம்பிக்கையாய் கேட்ட நாலு பேரும் கை விரித்த பின்னர் நெஞ்சு கனக்க வீடு வந்து சேர்ந்தான். சோர்ந்த முகமும் தொய்ந்து போன உடலும் நடந்ததை சொல்லாமல் சொன்னது பரிமளத்துக்கும். பாட்டிக்கும் “ஏண்ணே கழுத்துக்குன்னு செஞ்சிருக்க செயினை வித்திட்டா?” மேற்கொண்டு பேச முடியாமல் அவனை சுட்டெரிக்கும் பார்வையில் மிச்ச வார்த்தைகள் தீய மௌனமானாள் பரிமளா. “ஏம்பா! சுப்பராமன் கிட்ட பத்திரம் போட்டு தரச் சொல்றதுதானே!”

“கேட்டேன் பாட்டி! அவரு புது பங்களா கட்டுமானத்திலே ரொக்கத்தை முடக்கிட்டேங்கிறாரு.” மேலும் பேச்சு வளருமுன் துவரங்குடி ஆள் வந்து கதவைத் தட்டி “எங்க பெரியம்மா சொன்னாங்க வர்ர தையி பதினோறாம் நாள் நல்லாருக்காம். பத்திரிகை போட கேட்டார சொல்லிச்சு” என்றான் இயந்திரமாக.

“நான் துவரங்குடி வர்ரேன்னு சொல்லு போ இந்தா நில்லு! ஒரு வா டிபன் சாப்டு காபி குடிச்சிட்டு போயிரு” என்றான். கேசவன் “அம்மாடியோவ்! பொண்ணு கட்டறதுக்கு. முன்னாடி போய் அங்க சொஜ்ஜியும் பஜ்ஜியும் திங்கற பழக்கமெல்லாம் கூடாதன்னு அண்ணன்

அடிச்சில்ல சொல்லி விடடிருக்கு" என்றது இயந்திரம். மாப்பிள்ளையை நினைத்தபோது கேசவனின் இதழ்க்கடையில் மீண்டும் ஒரு சிறு நகை பூத்தது. எப்பேர்க்கொத்த மாப்பிள்ளை. பரிமளத்துக்குன்னே பொறந்தாப்பலே. எப்பாடு பட்டாவது இதை முடிச்சுரணும்" என்று உறுதி செய்து கொண்டான். நாலெட்டு போய் விட்ட துவரங்குடியானின் தோளைப் பற்றி "போடச் சொல்லு போ பத்திரிகையை" என்றான்.

"என்னடா தம்பி! இன்னும் முழுசா இரண்டு மாசம் கூட இல்லே, ஒண்ணுலே ஒண்ணு ஏற்பாடு பண்ணலே!"

"நீ சொம்மாயிரு! பாட்டி எங்கியும் பெரளாட்டா ஏறாத வாசப்படி ஏறி எங்க அத்தை கிட்டபோயி கேட்டுர்றேன் எங்கப்பாரு உசிரு போகையிலே சொல்லிட்டுப்போன சொல்லு இருக்குல்லே" என்றான்.

கேசவனது பாக்டரிக்கு போய் லஞ்ச் டைமில் கிருஷ்ண மூர்த்தி மீண்டும் திருமணத்தை நிதானமாக வைத்துக்கொள்ளலாம் என்று வலியுறுத்தினான். "இல்லீங்க சார்! எவ்வளவோ செலவுங்களே மேலே போட்டுக்கிட்டிருக்கீங்க!. அன்னக்கி என்னமோ பெர்மனன்ட் வேலையில் இருந்தா எனக்கும் ஒரு தைரியம், பெருமை. பலான எடத்துலே பலான வேலையாயிருக்காரு பொண்ணைத் தர்ரோம்னு உங்களுக்குப் பெருமையாயிருக்கும்னு தோணிச்சு. இன்னிக்கு உங்களுக்கு செரமம் கொடுக்கிறமோன்னு நினைக்கும்போது அந்த வேலையே இல்லாட்டா என்னன்னு இருக்குது."

"இல்ல மாப்பிள்ளே! இதுல என்ன செரமம்? இன்னும் ஒரே வாரத்திலே பணத்தை சரி பண்ணி தந்துடறேன் டிபாசிட் கட்டிருங்க. வேலையிலே சேர்ந்த பின்னாலே அந்த வெவரத்தை வச்சே பத்திரிக்கை அடிச்சுடலாம்."

இருவரது கண்களிலும் நட்சத்திரங்கள் மின்னின.

சைக்கிளையும் ரேடியோவையும் விற்றால் என்ன? சைக்கிள் லோன் போட்டு வாங்கியது. லோன் தீருமுன் அதைத் தொட முடியாது. ரேடியோவை அநியாயமான விலைக்கு கேட்டார்கள். விற்றாலும் அந்தத் தொகையில் உபயோகமில்லை.

வேறு வழியேயில்லை என்று ஆன பின்னர் அத்தை வீட்டுக்கப் போனான். அத்தைதான் முதலில் எதிர்ப்பட்டாள். தயங்கித் தயங்கி விஷயத்தைச் சொன்னான். "இதென்னடி நாயம்! பொண்ணு கொடுக்கறவன், பொண்ணு மேலே இத்தினி பவுனு, இத்தினி சீரு, செலவுன்னு பேசாம கண்ணாலத்துக்கு மிந்தியே டிப்பாசீட்டு எழவுக்குன்னு இரண்டாயிரம் தரானாம். பெரிய மனுசன் பெரிய தலைன்ன மதிச்சி மாமனை மின்னாலே வச்சி பேசிரிந்தினா, இப்படி ஏச்சிருப்பாங்களா தொவரங்குடிக்காரங்க?" என்றாள்.

அவளது பேச்சை நிறுத்தத் திராணியற்றவனாகி எதையோ சொல்லத் துவங்கி சொல்லிப் பயனில்லை என்ற நிராசையாய் நின்றான். ஒரு விநாடி நிறுத்தியிருந்த அத்தை தொடர்ந்தாள் "சரி! அதுக்கு இப்ப இங்கே என்ன செய்யணும்?

கேசவன் சுருக்கென்று விழித்தான் "ம்...எங்கப்பாரு சாவையிலே தந்தாரில்லே ரொக்கம்... அதைத் தரணும். மாயாஜாலா வித்தை போல பலவித ஒலிகளை எழுப்பி கூச்சலிட்டு வைதுகொண்டு பல தெய்வங்களை சாட்சி வைத்து ஒப்பாரி என்றும் இல்லாமல் முறையீடு என்றும் இல்லாமல் பெருங்கூச்சல் இட்டாள் அத்தை இவ்வளவு ரகளைக்குப் பின் மெல்ல வெளி வந்தாள் பாட்டி

"என்னடா கலாட்டா? என்று அவள் வரவேற்றாள். அத்தையைப் போல கத்தாமல் பெரிய எவர்சில்வர் தாம்பாளத்தில் செக்கச் செவேலென்ற தர்பூசணியை அரிந்து பேத்தி குழந்தைகளுக்காக நறுக்கியவாறு தெளிவாகச் சொன்னாள் பாட்டி.

பெரிய மனுசங்கன்னு மதிக்காத நீயா போயி சம்பந்தங் கலந்தியாக்கும்! அழகுதான்! ஆமா தங்கவேலுக்கு என்னா கொறைன்னு இப்ப தொவரங்குடியாரு பேச்சு வந்திருச்சு!"

கேசவனுக்கு ஆத்திரத்தால் உடலே நடுங்கியது. புத்தி பேதலித்து அரைக் கிறுக்காய் கிடக்கும் தங்கவேலுவுக்கு முடிச்சுப் போட்டு பேச என்ன தைரியம் கிழவிக்கு! அம்மா உயிரோடு இருந்த நாளையிலும் சாதி கெட்டவ சாதி கெட்டவனு துரத்தி வச்ச கிழவி; பெத்தவங்க செத்து அநாதையா நின்னப்பவும் நெஞ்சிலே துளி ஈரமும் இல்லாத கிழவி இத்தினி பண்ணதும் பத்தாதுன்னு இப்ப... மிகவும் பொறுமையாக கேட்டான்.

"பாட்டி! அப்பாரு கொடுத்த அஞ்சாயிரத்தையும் கேக்கல்லே. இரண்டாயிரம் குடுங்க. உங்க வசதிக்கு இதொன்னும் பெரிய தொகையில்லே. கடனாகத் தந்ததா வச்சிக்குங்க. பத்திரம் கூட எழுதித் தாரேன். வட்டி வேணாலும் போட்டுக்கிங்க. கொடுத்த பேச்சுப்படி நாளை பணம் கை மாறணும். பத்திரிகை எழுதணும்." அவனது பணிவு பலகீனமாகப் பட்டிருக்க வேண்டும் பாட்டிக்கு. "இன்னிக்கு பூராவும் பேசினாலும் இரண்டு ரூபாய் பேராது இங்க. சோலியத்த தொவரங்குடியானுக்கு தங்கவேலு தொக்காப் போனானா?" வார்த்தைகளை அடுக்கியவாறு இருந்தாள்

பணம் வராது என்ற உண்மையைத் தவிர எதுவுமே கேசவனுக்கு உறைக்கவில்லை. அந்த உண்மை அவன் உடலெங்கும் மனமெங்கும் நிறைந்தது

பாட்டி! பாட்டி! தனது ஆயுசு பூராவுமே தங்கள் வாழ்வில் கசப்பையே தந்த பாட்டி.. பரிமளாவை ஒரு பைத்தியத்துக்கு மனைவியாக்கத் துடிக்கும் பாட்டி... மனுசத் தன்மை செத்துப்போன பாட்டி!

ஜிவ்வென்று கோபம் தலைக்கேற பாட்டியை நெருங்கினான். செக்கச் செவேலென்றிருந்த தர்பூசனியின் நடுவில் இருந்த கத்தியை எடுத்து நேரே தொண்டைக் குழியில் செருகினான். சிலீர் என்ற ரத்தம் கைகளில் உறைந்த பின்னர்தான் நிஜத்தை தரிசித்தவன் போல விழித்தான்.

"அய்யோ! பரிமளா! நானல்லவா பாட்டியை விட பெரிய கொடுமை உனக்கு செய்துவிட்டேன்" என்று கதறினான். "உன்னை உண்மையிலேலே அநாதையாக்கிவிட்டேனே" என்று அரற்றினான். குற்றத்தை ஒத்துக்கொண்டு தண்டனை அடைந்தான். உணர்ச்சி வசப்பட்டு செய்த கொலையே சொத்துக்காக திட்டமிட்டு செய்தது என்று பப்ளிக் ப்ராசிக்யூட்டர் திறமையால் வாதாடி ஆயுள் தண்டனை வாங்கித் தந்தார் செஷன்ஸில்.

மனுசத்தன்மை செத்துப்போன மனுசங்க. மனுசங்களே இல்லாத உலகம் என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டான் கேசவன். ஆனால் கேசவன் சிறையில் இருந்தபோது கிருஷ்ணமூர்த்தி குறித்த தேதியில் பரிமளாவை ரெஜ்ஸ்ட்ரார் ஆபிசில் திருமணம் செய்ததும், மிச்சமான கல்யாண செலவிலிருந்து விருந்து செலவுக்கான பணத்தில் டெபாசிட் கட்டி அவன் டிவிசியில் சேர்ந்ததும், கிருஷ்ணமூர்த்தியின் முயற்சியால் அப்பீலில் இவனுக்கு நீதிபதி தண்டனையை தள்ளப் போவதும் தெரியாது தெரிந்திருந்தால் உலகில் மானுடம் என்றும் வாழும் என்றும், அதுவே இறுதியாக வெல்லும் என்றும் சொல்லியிருப்பானோ?

ooo

## 6. பளிச்சி

-கொ.மா. கோதண்டம்

கல கல வென்ற அவர்களது சிரிப்பொலி அந்த அருவியின் ஒலியோடு கலந்து அந்தக் கானகமெங்கும் வியாபித்தன.

அருவி விழும் இடத்தில் தண்ணீர் தேங்கி நிறைந்து வழிந்து ஆற்றில் மெல்லப் பாய்ந்து சென்று கொண்டிருக்கின்றது. அந்த நீர்த்தேக்கத்தில் அவர்கள் குளித்துக்கொண்டிருந்தனர்.

தோழிகள் பூங்கூவின் மீது கைகளால் நீரை வீசியடித்து விளையாடிக் கொண்டிருந்தனர். நீர்த்துளிகள் அவளது உடம்போடு ஒட்டாமல் முத்துக்களாய் உருண்டு சரிந்து நீரில் கலந்தன. அவள் மூழ்கி எழும்போது முடிக்கற்றைகள் அவளின் பாதி உடம்பை மறைத்தன. அதைக் கையால் விலக்கிப் பின்புறம் ஒதுக்கியதும் அதிகாலையில் மஞ்சு விலகியதும் பளிச்சென ஒளி வீசும் விரிந்த மலர்போல அவள் முகம் பிரகாசித்தது கூர்ந்து தேடும் பெரிய விழிகள் கொய்யாப் பழக்கன்னங்கள், நாகவல்லி இதழ்கள் போன்ற உதடுகள், பப்பாளி மணிகளாய்ப் பற்கள், இள மஞ்சள் புதுநிறங்கலந்த திரண்ட புஜங்களும் உடைய பூ உடம்பு. மொத்தத்தில் அவள் ஒரு சௌந்தர்ய வன தேவதையாகவே காட்சியளித்தாள்.

அவள் தோழிகளும் அழகிகள் தான் என்றாலும் அல்லிக் கூட்டத்திற்கிடையே ஒரு அரவிந்த மலர்போல அவள் தோன்றினாள்.

ஆற்றுத் தண்ணீர் அந்த இடத்தின் அழகை வளமாக்க உதவிவிட்டு மேலும் பாய்ந்து கொண்டிருந்தது. தண்ணீர் உரசி ஓடிய கற்கள் மாங்கனிகாய், மான் முகங்களாய், நட்சத்திரங்களாய் இன்னும் பெரிய பாதி வெட்டிப் பதித்த உலக உருண்டைகளாய் நதி எங்கும்

காட்சியளித்துக்கொண்டிருந்தன. கரையெங்கும் மூங்கில் புதர்கள், தாழம் புதர்கள், பசுமையை அள்ளித் தெளித்து நதிப் பெண்ணுக்குச் சாமரங்கள் வீசிக்கொண்டிருந்தன. தாழம் பூக்களின் மணம் எங்கும் பரவி அங்கு ஒரு சுகானுபவத்தை ஊட்டிக்கொண்டிருந்தன.

வனக்கன்னி, செடிகொடிகள், குறு மரங்கள் பெருமரங்களால் தன்னைப் போர்த்திக் கொண்டிருந்தாள். வளமை வற்றாத இருப்பாக அங்கே வியாபித்திருந்தது.

மரங்களின் கிளைகள் வானவெளியை பனி நீர்த்துளிகளைத் தெளித்து அலசிவிட்டுக் கொண்டிருந்தன. குன்றுகளின் சிகரங்கள் வானத்தைத் தொட்டுவிட்டு துடித்துக்கொண்டிருக்க மேகக் கன்னிகள் அவற்றைத் தட்டி விட்டு ஓடி வேடிக்கை செய்து கொண்டிருந்தன.

மரங்களில் அலர்ந்த மலர்கள் கொள்ளை விருந்தளித்துக் கொண்டிருக்க தளிர் இலைகளும் பல வண்ணக் கோலங்களைத் தீட்டிக்கொண்டிருந்தன. மலர்கள் கிளைக்குக் கிளை தாவி விளையாடுவதைப் போன்று தேன் சிட்டுப் பறவைகள் பறந்து அமர்ந்து தன் சின்னக் குரலால் குறிஞ்சியின் அழகைக் கூவிக்கூவி வியந்து கொண்டிருந்தன.

மஞ்சுத்திரள்கள் குபுகுபுவென வந்து படிந்து அந்த இடத்தை மறைத்தது. அந்த நேரம் கண்களுக்கு ஒன்றும் புலப்படவில்லை மேகங்கள் மெல்ல மெல்ல விலகும் போது வானத்து மேக மண்டலத்தில் விளையாடும் தேவகன்னிகள் போல அவர்கள் தோன்றினர்.

“பூங்கூ அதோ பாரு நீலன்–மரத்து மறவுல ஒளிஞ்சுகிட்டு நம்மளைப்பாத்துக்கிட்டு இருக்கான்.”

தோழிகளில் ஒருத்தியான கூந்தலி கூறியதும் அவர்கள் சடாரென எழுந்து கரையேறி ஆடைகளை உடுத்திக்கொண்டனர்.

"இந்தப் பயலுக்கு வேற வேல இல்லே; பொட்ட நாயகுத்துற ஆண் நாயி மாதிரி எப்பவும் சுத்திகிட்டுருக்கான். த்தூ!" என்று அவனை ஏசிவிட்டு பூங்கூ வேகமாக நடந்தாள் தோழிகளும் திரும்பிப் பார்த்துக்கொண்டே அவளைப் பின் தொடர்ந்தனர்.

"போயிட்டான் போல ஆளக் காணோம்" என்று ஒருத்தி கூறியதும் அனைவரும் கொல் லென்று சிரித்தனர்.

செடிகளை விலக்கியவாறே, ஏதோ ஒரு பாட்டைப் பாடிக்கொண்டு பூங்கூ மானைப்போல ஓடினாள்.

"எங்களால ஓட முடியல்லே; மெல்லப் போ" என்றவாறே மற்றவர்களும் ஓடினர்.

"ஏய்! அங்கே பாருங்கடி! காட்டெருமை பாதையில வந்துகிட்டுருக்கு; எல்லாரும் பாறை மறைவுல ஒளிஞ்சுக் கோங்கடி."

பூங்கூ சொன்னதும் எல்லோரும் முன்னால் பார்த்தனர். ஒரு பெரிய காட்டெருமை மெல்ல அசைந்து அசைந்து வந்து கொண்டிருந்தது. அவர்கள் அனைவரும் பாறையின் மறைவில் ஒளிந்துகொண்டனர்.

அது அருகே வந்ததும் பூங்கூ ஒரு பெரிய கல்லை சிரமப்பட்த் தூக்கி அதன் முன்னர் வீசினாள்.

திடீரென்று முன்னால் விழுந்த கல்லைக் கண்டதும் காட்டெருமை அதிர்ந்து நின்றது. பின், கோபமுடன் முன்னங்காலால் தரையை உதைத்து எதிரேயிருந்த மரத்தை ஒரு முட்டு முட்டியது. மரத்தின் பட்டை பிய்ந்து தொங்கியதும் "ஊம்" என்று உறுமியவாறே திரும்பி ஓடியது.

அவள் சிரித்துக்கொண்டே வெளியே வந்தாள்.

"ஒனக்கு எல்லாமே விளையாட்டுத்தானா? காட்டெருமை நம்பளக் கண்டிருந்தா நெலமெ என்ன ஆகும்" என்று கூந்தலி கடிந்து கொண்டாள்.

"போங்கடி, எதையும் விளையாட்டாத்தான் பார்க்கணும். ஆபத்து வந்தா வரட்டுமே? அதுக்காக நம்ம பளியங்க பயந்து கிட்டே வாழணுமா?"

"ஆமா, அதுக்காக மிருகங்க முன்னே விழுந்து சாகணுமாக்கும்!"

அதற்கும் சிரித்துவிட்டு ஓடினாள் அவள்.

அவர்கள் 'மந்து'வை அடைந்தனர்.

வனத்தில் அந்த வெட்டவெளி பகுதியில் அவர்கள் குடியிருப்பான மந்து அமைந்திருந்தது. சுற்றிலும் மூங்கிலிலான குடிசைகள், மேலே ஈத்தை இலைகளால் வேயப்பட்டு இருந்தன.

நடுவில் ஒற்றை மரத்தின் மேலே ஒரு பரண் அமைந்திருந்தது. தொங்கிய கயிற்றேணியில் ஏறி பூங்கூ மேலே சென்று பரணை அடைந்தாள்.

பளியர் தலைவன் சாத்தானின் வீடுதான் மரத்தின் மேல் பரண். பூங்கூ சாத்தானின் செல்ல மகள், அந்த இனத்தின் இளவரசி. அழகோடு துடுக்கும் வீரமும் இணைந்தவள். அந்த வட்டார மலைகளில் வாழும் எந்த இனத்திலும் பூங்கூவிற்கு இணையான அழகி இல்லை என்பதே அனைவரின் கருத்தாகும். ஆகவே எல்லா இளைஞர்களும் அவளை மணக்கத் துடித்துக்கொண்டிருந்தனர்.

அடுத்த மலையில் வாழும் நீலன் நல்ல வீரன்தான். எப்படியும் அவளை அடைந்தே தீருவது என கங்கணம் கட்டிக்கொண்டிடு அவளின் கடைக்கண் பார்வையைப் பெற வேண்டும் என்று அவள் போகுமிடமெல்லம் பின் தொடந்து, ரசித்து ஏங்கித் வங்கிடந்தான்.

அவளுக்குத் திருமணத்தில் விருப்பமே இல்லை. தந்தை திருமணப் பேச்சை எடுத்த போதெல்லாம் தட்டிக் கழித்தாள்.

“நீ யாரை விரும்புறயோ சொல்லு, அவனையே உனக்கு மாப்பிள்யைா ஆக்குறேன்” என்று சாத்தான் எவ்வளவோ கெஞ்சினான்.

“எனக்கு கல்லாணமே வேண்டாம்பா” என்றாள் அவள்.

“இதோ பாரு, ஒனக்கும் வயசாயிடுச்சி. எங்ககாலத்துக்குள்ளே ஒரு நல்ல வீரனாப் பாத்துக் கையில் புடிச்சுக் கொடுத்தாதான் எனக்கு நிம்மதி. நம்ம காட்டு சாதிக்காரங்களும் அடுத்த மலை ஆளுகளும் நித்தம் நாலு பேரு ஒன்ன கேட்டு வாராங்க எனக்குப் பதிலு சொல்ல முடியல்லே.”

“அப்பா! அடுத்த பௌர்ணமிக்கு எல்லோரையும் வரச் சொல்லுங்க அதுல ஒரு முடிவு பண்ணி நான் யாரையாவது கெட்டிக்கிடுவேன்” பூங்கூ கூறியதும் சாத்தான் மிகவும் மகிழ்ந்து போனான்.

பௌர்ணமியன்று முன்னிரவு. அந்த மந்துவைச் சுற்றி எல்லா மலைவாழ் இனத்து இளைஞர்களும் உற்சாகமுடன் கூடியிருந்தனர். பெரியவர்கள் பாறையில் அமர்ந்திருந்தனர். மரங்களுக்கடியில் பெண்கள் குழுக்களாக நின்று பேசிக் கொண்டிருந்தனர். பூரண நிலாவொளி பாலாக ஒளியைப் பரப்பினாலும் அடர்ந்த மரங்களினுள் இடைவெளிகளில் மட்டுமே வெளிச்சம் தந்தது. மனதிற்கு இதமான ஒளியாக வெள்ளிச் சரங்கள் குத்திட்டு நின்றன. அவர்களைப் பொறுத்தவரையில் அந்த இரவும் பகல் நேரம் போலத்தான்.

சாத்தான் நடுவே ஒரு ஆசனத்தில் அமர்ந்திருந்தான். பூங்கூவும் தோழிகளும் அவளுக்குப் பின்னே நின்று கொண்டிருந்தனர். அனைவருக்கும் தேனும் தினைமாவும் வழங்குமாறு சாத்தான் உத்தரவிட்டதும் சிலர் எழுந்து தயாராக இருந்த பானைகளில் உள்ள தேனை தொன்னைகளில் முக்கி எடுத்து அதில் தினைமாவும் போட்டு அனைவருக்கும் அளித்தனர்.

விருந்து முடிந்ததும் தோழிகள் பூங்கூவைச் சுற்றிக் கும்மியடித்துப் பாட்டுக்களைப் பாடினர். அதற்கு இசைய இளைஞர்கள் கைதட்டித் தாளமிட்டனர்.

“மாசி நிலாவாய்
மருவில்லா வெள்ளிநிலா
பூசி உருக்கிட்ட
பொன்னுசிலை எங்க பூங்கூ
மாத்தூரான் அவ்வூரான்
மாவீரன் எவனிருக்கான்
பாத்துருவோம் அவன் வீரம்
பருவமக காத்திருக்க!”

பாடி முடிந்ததும் எல்லோரும் ஆரவாரம் செய்தனர்.

"சரி, அடுத்து நடக்குற காரியம் என்னன்னு சொல்லுங்க" என்றார் ஒரு பெரியவர்.

அனைவரும் சாத்தானின் முகத்தைப் பார்த்தனர். அவன் மகளின் முகத்தைப் பார்த்தான்.

"தோழிகள் சொல்லு பூங்கூ" என அவளை உற்சாகப்படுத்தினார்கள். சிறிது நேரம் அங்கே பேரமைதி நிலவியது.

"எல்லோரும் சாவுப் பாறைக்கி வாங்க சொல்றேன்."

பூங்கூ கூறியதும் அனைவரும் ஏதும் புரியாமல் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டனர்.

"ராவு நேரத்தில அங்கன எதுக்கம்மா?"

வாங்கப்பா, சொல்லுதேன்!"

அவளின் உறுதியைக் கண்ட இளைஞர்கள் சரி, அந்த இடத்தில் நமக்கு ஏதோ போட்டி நடத்தப் போகிறாள் என நினைத்து விரைந்து சென்றனர்.

மரங்கள் அதிகமில்லாத ஒரு வெளியாக அந்த இடம் காட்சியளித்தது. ஓரிடத்தில் மலை அப்படியே முடிந்து போனதுபோல் மிகப் பெரிய பள்ளம். அங்கே மூவாயிரம் அடி உயரத்திற்குக் கோட்டை போல மலையைச் செலுக்கி விட்டதைப் போன்ற வழு வழுப்பான பாறை சுவர் போலக் குத்திட்டு நின்றது.

எட்டிப் பார்த்தாலே மயக்கம் வந்து விழுந்து இறந்துவிடுகின்ற பெரும் பள்ளம். அதன் வழி யாரும் இறங்கவும் முடியாது, ஏழெட்டு மைல் சுற்றி வந்தால் பள்ளத்தை அடையலாம். ஆனால் அங்கிருந்து மேலே ஏற முடியாது. ஆகவே அந்த இடத்தை சாவுப் பாறை அல்லது சாவுப் பள்ளம் என அவர்கள் அழைத்து வந்தனர்.

அந்த கரைக்குப் பத்தடி தள்ளியே எல்லோரும் நின்றனர். "சரியம்மா, என்ன சொல்லப் போறே" எனக் கேட்டான். பூங்கூவின் வேண்டுகோளை எதிர்நோக்கி அனைவரும் அவளையே பார்த்துக்கொண்டிருந்தனர்.

"எல்லோம் கேட்டுக்கோங்க. எனக்கு வர்ர புருஷன் இந்த வட்டாரத்திலேயே பெரிய பெரிய வீரனா இருக்கனும்முன்னு நான் ஆசைப்படுதேன். அதனால, நான் சொல்றபடி யாரு செய்யிறாங்களோ, அவங்க கழுத்துல நான் மாலையைப் போடப் போறேன். இந்த சாவுப் பாற பள்ளத்துல எந்த மனுசனும் எறங்க முடியாது. கீலே கூடி ஏறி வரவும் முடியாது. இது நடுவுல ஒரு பெரிய தேனடை இருக்கு. அத யாரு எறங்கி எடுத்துட்டு வர்ராங்களோ அவனுக்குத்தான் நா மாலை போடுவேன்."

பூங்கூவின் சுயம்வரப் போட்டி அனைவருக்கும் திகிலையும் ஆத்திரத்தையும் ஊட்டின.

"என்னம்மா சொல்லுதே நீ. மனுசங்க எறங்க முடியாதுன்னு நீயேகூட சொல்லிட்டே அப்புறம் எறங்கி தேனடை எடுத்துட்டு வர்ரவனக் கெட்டிக்கிடுவேங்க. இது நடக்கற காரியமா?"

சாத்தான் சிறிது கோபத்தோடுதான் கூறினான்.

"இப்ப! நாந்தா சொல்லிட்டேனில்லே அப்படி செய்யிர வீரனைத்தான் நான் கெட்டிகிடுவேன். இல்லேன்னா எனக்குக் கண்ணாலமே வேண்டாம்."

"சரி, சரி! நீ கொஞ்சம் இரு. எல்லோரும் கேட்டுக்கோங்கப்பா, இது ஒரு கஷ்டமான காரியந்தா, ஆனா மனுசன் நெனச்சா முடியாத காரியமா இருக்கு? நான் எளவட்டமா இருக்கும்போது இதுல எறங்கியிருக்கேன். இதுவரக்கி யாரிட்டயும் நான் இதச் சொல்லல்லே ஏன்னா இது பெரிய ஆபத்தான காரியமுன்னுதா."

“இப்ப யாரு எறங்கப் போறவனோ அவனுக்கு எம்பொண்ணு மாலை போடுவா, அது மட்டுமில்லே அவந்தா இனிமே நம்ம எல்லோருக்கும் ராசா சொல்லியாச்சி, யாரு எறங்கப் போறீக? ஒங்க வீரத்தைக் காட்டுங்க பாப்போம்!”

அனைவரும் ஏதும் புரியாமல் நின்றனர். பல இளைஞர்கள் கூடி யோசித்தனர். சிலர் வேகமாகச் சென்று காட்டுக் கொடி வகைகளை நிறைய அறுத்துக் கொண்டு வந்தனர்.

அவற்றை வாங்கிக் கயிறாகத் திரித்து இடையில் முடிச்சுகளைப் போட்டு தூரத்தில் மரத்தில் ஒரு முனையைக் கட்டி அந்த கொடி வடத்தைப் பள்ளத்தில் விட்டான் சாத்தான்.

“சரி, இது வழியா எறங்கலாம். யாரு மொதல்ல எறங்கப் போறீக?” என்றதும் சில இளைஞர்கள் அதனைப் பிடிப்பதும் பின் விட்டு விட்டு வருவதுமாக இருந்தனர்.

நீலன் தனியான ஒரு பக்கம் நின்றவன் தீரயோசித்துக் கொண்டிருந்தான். அவன் மனதில் மகிழ்ச்சியும் பயமுமான சஞ்சலப் புயல் வீசி அவனைத் தத்தளிக்கச் செய்தது.

ஏதோ முடிவில் வேகமாக வந்து வடத்தைப் பிடித்தான். இளைஞர்கள் ‘ஹோ’ வென்று ஆராவாரம் செய்தனர். அவன் கையில் ஒரு பந்தத்தைக் கொடுத்தான் சாத்தான். அதனை நீலன் வாயில் கவ்வியபடி மெல்ல அதில் இறங்கினான்.

மெல்ல தலையைச் சாய்த்துக் கீழே பார்த்தான். நிலவொளியாக இருந்தாலும் பாறை மறைவில் ஒரே இருட்டாக இருந்ததனால் ஒன்றும் தெரியவில்லை.

அடேங்கப்பா நூறுயான ஒசரம் இருக்குமே நம்மால் முடியுமா? தேன் கூடு கூட தெரியலியே? ஒரு வேளை கூட்டுலேயே கால் வச்சிட்டாமுன்னக்கூட தேனீக்க கொட்டியே செத்துப்போயிடுவோமோ?

நீலனின் கைகால் கிடுகிடுவென நடுங்கியது. சிறிது நேரம் மிகக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு நின்றான். மேலே உள்ளவர்களும் பார்வைக்குத் தெரியவில்லை.

எல்லோரும் ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டிருந்தனர். கயிறு ஆடியது. அவன் மேலே வந்து கொண்டிருந்தான்.

கையில் தேன்கூடு இல்லாததைக் கண்ட அனைவருக்கும் ஏமாற்றமாக இருந்தது. ஏளன ஒலிகள் சிரிப்புகள் எங்கும் நிறைந்தது அவன் மேலே வந்து பந்தத்தைக் கீழே போட்டுவிட்டு ஓடி மறைந்தான்.

"சரி, நீலனால முடியல்லே. அடுத்து யாரு?"

அடுத்து ஒரு இளைஞன் விடுவிடு என்று வந்து கயிற்றைப் பிடித்து இறங்கினான். கூட்டம் அமைதியாக இருந்தது.

நேரம் ஆகிக் கொண்டிருந்தது. கீழே இறங்கினவன் மேலே வரவில்லை என்பதை அறிந்த சாத்தான் கயிற்றை மெல்ல இழுத்துப் பார்த்தான். அது லேசாக இருந்தது.

போனவன் கயித்துல இல்ல. விழுந்திட்டான் போலருக்கு வேற யாரு இறங்கப் போறீங்க?

சாத்தானின் அறைகூவலுக்கு யாரும் செவிசாய்ப்பதாகத் தெரியவில்லை. நேரமும் ஆகிக் கொண்டிருந்தது

"ஏய் பூங்கூ ஒன்னும் நடக்கல்லே. இனி என்னம்மா செய்யப்போறே?"

அவள் எல்லோரையும் ஒரு முறை பார்த்தாள்.

"அப்பா, நான் எறங்கப் போறேன்பா."

சாத்தானுக்கு அதிர்ச்சியாய் இருந்தது அவள் பேச்சு.

"நீ எதுக்கும்மா எறங்கணும்? ஒன்னால முடியாதும்மா."

"அப்பா! நம்ம காட்டு எளவட்டக்காரங்களுக்கு இல்லாத வீரம் எனக்கு இருக்குன்னு காட்டப் போறேன். நான் ஒங்க மகதானுட்டு காண்பிக்கப் போறேன்."

வேண்டாம்மா பூங்கூ! நம்ம போவோம் என்றவன் கூட்டத்தைப் பார்த்து "ஏய் எல்லோரும் கலஞ்சி போங்கப்பா" என்றான்.

"யாரும் போக வேண்டாம். என்னான்னு பாத்திட்டுத்தான் போங்களேன்" என்றவள் பந்தத்தை வாங்கிக் கொண்டு கீழே இறங்லானாள்.

எல்லோரும் திகிலடைந்துபோய் நின்றனர். சாத்தான் ஏதும் புரியாமல் தவித்துக்கொண்டிருந்தான்.

"பெரிய ராங்கிக்காரியா இருக்காளே! இவ எங்க மேலே வரப்போறா" என்று பலரும் முணுமுணுத்தனர்.

மரத்தில் கட்டியிருந்த கயிற்றருகே பூங்கூவின் தோழிகள் காவலாக நின்றனர். நேரம் ஆக ஆக அனைவரின் மனதும் 'திக் திக்' கென அடித்துக்கொண்டிருந்தது.

கயிறு மெல்ல அசைந்தது. எல்லோரின் பார்வையும் அங்கேயே இருந்தது.

பாறையில் அவள் தலை தெரிந்ததும் அனைவரும் ஹோ வென மகிழ்ச்சி ஆராவாரம் செய்தனர். சாத்தான் ஓடிச் சென்று ஒரு கையைக் கொடுத்தான். அவளின் ஒரு கையில் பெரிய தேனடை இருந்தது.

திமுதிமுவென்று சத்தம் வரவே எல்லோரும் திரும்பிப் பார்த்தனர். கையில் அரிவாளோடு ஓடிய நீலன் கயிற்றை ஒரே வெட்டாக வெட்டினான். சர்ரென்று கயிறு பள்ளத்தில் விழுந்தது.

"பூங்கூ! போயிட்டியா கண்ணே என்று அலறினான் சாத்தான். கண்ணிமைக்கும் நேரத்தில் அழுகைக் குரல்களும் அவனைப் பிடிங்கடா என்ற ஓசைகளும் அடங்குவதற்கு முன் நீலன் ஓடிச்சென்று சாவுப் பாறைப் பள்ளத்தில் திடீரென்று குதித்துவிட்டான்.

தன்னால் முடியாத காரியத்தை ஒரு பெண் செய்வதா என்ற ஆண்மைத் தனம் பலிவாங்கிவிட்டு காதலில் ஐக்கியமாகி மறைந்து இணைந்தது. ஒரு பெரியவர் எழுந்தார்.

"யாரும் அழக்கூடாது! நம்ம யாரையும் செய்ய முடியாத காரியத்தை ஒரு பளிச்சி பொண்ணு செஞ்சி காட்டிட்டா, பூங்கூ சாதாரணமானவ இல்லே. அவ நம்ம தெய்வம். எல்லோரும் அவளைக் கும்பிடுங்க என்று சொல்லி அந்தத் திசை நோக்கித் தொழுதார். அனைவரின் கைகளும் வணங்கின. அவர்களின் கண்ணீர் அந்தக் கைகளை நனைத்தது.

0-0-0

# மஜ்னூன்

**- மீரான் மைதீன்**

அன்புள்ள என்றோ, என் இதயமே என்றோ அல்லது என் உயிரே என்றோ எப்படி தொடங்குவது என்பதில் எனக்குள் நிறைய தடுமாற்றம் ஏற்படுகிறது. எல்லாவற்றையும் உன்னிடம் கொட்டித்தீர்த்துவிடும் உத்வேகத்துடனே எழுதுகிறேன். இது உனக்கு கிடைக்கலாம் அல்லது கிடைக்காமல் போகலாம். இதுபற்றி கவலை கொள்ளும் மனநிலையில் நான் எழுதவில்லை.

ஒருவேளை நான் சிறைச்சாலையில் இறந்துபோனால் என் சடலம் என்னவாகும் என்பதைக்குறித்து என்னால் இப்போது எதுவும் திட்டமிட்டு எழுதமுடியவில்லை. நான் கப்பலில் இறந்துபோனால் என் சடலம் கடலில் மூழ்கடிக்கப்படலாம். பசியோடு இருக்கிற ஒரு மீனோ அல்லது பல மீன்களோ என்னைத்தின்று தீர்க்கலாம். இதைத்தாண்டி நான் மனநிலை பாதிக்கப்படாமல் உயிரோடு வந்தால் உனது கரத்தைப் பிடித்தோ, உனது காலில் விழுந்தோ அல்லது உன்மார்பு வெளியில் முகம் புதைத்தோ ஒரு குழந்தையைப் போல விக்கிவிக்கி அழுவேன்.

இங்கே நிறைய அழுது விட்டேன். ஒரு நாளல்ல, இரண்டு நாளல்ல நான்கு வருடங்களுக்கு மேலாக அழுதுகொண்டிருக்கிறேன். .ஆனாலும் ஒருவேளை உன்னைப்பார்த்தால் கதறி அழுவதற்கான கண்ணீர் எனக்குள் இன்னும் மிச்சமிருப்பதாகவே நம்புகிறேன்.

நீ எப்படி இருக்கிறாய் என்றோ மகள் எப்படி இருக்கிறாள் என்றோ கேட்க விருப்பமில்லாதவனாக இருக்கிறேன் அல்லது தாங்கும் சக்தி அற்ற தன்மையோடு இருப்பதாவும் வைத்துக்கொள்ளலாம். பத்து

ரூபாய்க்கும் இருபது ரூபாய்க்கும் நீ பாய் கம்பெனியில் கூலி வேலை பார்ப்பதாகவும், சாப்பாட்டிற்கே கஷ்டப்படுவதாகவும் விடுமுறைக்கு ஊருக்கு வந்தவன் திரும்ப வந்து என்னிடம் சொன்னபோது உண்மையில் நான் செத்துப்போக விரும்பினேன். நான் சாவைத்தவிர்த்துக்கொண்டதற்கு இரண்டு காரணம் உண்டு. ஒன்று நான் 'இக்காமா' என்ற அடையாள அட்டை இல்லாதவன். மேலும் எனது பாஸ்போர்ட்டோடு எனது கபீல் தொலைந்து போனான். அல்லது எனது பாஸ்போர்ட்டை போலிஸில் ஒப்படைத்துவிட்டு புதிய விசாவுக்கு மனு செய்திருக்கலாம். எனவே நான் செத்துப் போக முடியாது. அப்படியே நான் செத்துப்போனால் என்னைப் பாவம் பார்த்து அறையில் தங்க வைத்துள்ளவர்களுக்கு நிறைய பிரச்சனைகள் ஏற்படும். ஒருவேளை அவர்கள் என்னைக்கொலை செய்துவிட்டார்கள் என போலீஸ் சந்தேகப்படலாம். நான் எந்த நாட்டைச்சார்ந்தவன். எப்படி இந்த நாட்டுக்குள் நுழைந்து இந்த அறைக்குள் வந்தேன் என ஆராய்ச்சியில் இறங்கினால் அவர்கள் வாழ்க்கை நிர்மூலமாகிவிடும். ஒருவேளை நான் இயற்கையாக இறந்தாலும் அவர்களுக்கு இதே சிக்கல் ஏற்படும் என்பது வேறுவிஷயம், இன்னொரு காரணம் உன் மார்பு வெளியில் முகம் புதைந்து ஒரு குழ்ந்தையைப்போல அழும் ஆசை.

அறையில் எங்களோடு இருந்த ஒரு உ.பி.காரன் இறந்து போனான். அந்த இரவில் எல்லோருக்கும் நான் சாப்பாடு பரிமாறினேன். நான் இங்கு சமையல்காரன். அதைப்பற்றிய விபரம் இன்னொரு பகுதியில் எழுதுகிறேன். இரவு சாப்பாட்டை நாங்கள் முடிக்கும்போது இரண்டுமணி இருக்கும். அறையில் என்னையும் சேர்த்து ஆறுபேர். அவர்களுக்கு கட்டிலும் படுக்கையும் உண்டு. நான் கார்பெட்டில் படுத்துக்கொள்வேன். அவர்கள் எனக்கொரு போர்வை மட்டும் தந்திருந்தார்கள். விளக்கை அணைத்த ஒரு மணிநேரத்திற்குள்

உ.பி.காரனின் படுக்கை ஆக்ரோசமாக அசைந்தது. பிறகு "பானி... பானி" என சத்தம் வந்தது பங்களாதேசிக்காரன் வேகமாக எழுந்து விளக்கைப் போட்டான். எல்லோரும் எழுந்து உ.பி.காரனின் படுக்கையைச் சுற்றி நின்றோம். அவன் கால்களை உதைத்து உதைத்து துடித்தான். "ஆயிஷா.... ஆயிஷா" என தொடர்ச்சியற்று ஈன சுரத்தில் அவனிடமிருந்து கடைசி சப்தம் எழுந்து அடங்கியது. ஆயிஷா அவனின் மனைவியின் பெயராக இருக்க வேண்டும். டெல்லி பரோ பார்த்துவிட்டு இறந்துபோனான் என்றான். டெல்லி பரோ முஸ்லீம் பெயரில் இங்கு வந்துள்ள ஒரு இந்து.

பங்களாதேசி அலறி அழுதான். உருது மொழியில் புலம்பினான். அறையில் அவன் ரொம்பவும் தைரியமானவன். முஜிபுர்ரகுமான் அரசியல் கட்சியைச் சார்ந்தவன். பலமுறை அரசியல் கைதியாக அவன் நாட்டில் சிறை சென்றவன். லாக்கப்பில் அடிவாங்கிய தழும்புகள் அவன் சரீரத்தில் உண்டு. ஒருமுறை அரபியை சிக்னலில் தைரியமாக விரட்டி அடித்தவன். தன்னை ஒரு மாவீரனாக சொல்லிக் கொண்டிருந்த அவன் ஒரு குழந்தையைப் போல அழுதான். மம்மலியும், பரோவும் குஞ்சாப்பும், உறைந்து நின்றார்கள். எமனி கலாஸ் என்றான் எனக்கு வியர்த்துக் கொட்டியது. இறந்த கிடந்த உ.பி.காரனின் படுக்கைக்கு கீழே அவன் கல்கத்தாவில் வாங்கிய ஆர்மோனிய பெட்டி சரிந்து கிடந்தது.

அந்த உ.பி.காரனோடு எனக்கு மறக்க முடியாத ஒரு நினைவு உண்டு. என் தலையில் ஒருபாடு தலைமுடி வளர்ந்து சடைபிடித்துக் கிடந்தது. நான் வெளியே போய் தைரியமாக முடிவெட்டிக் கொள்ளும் நிலையில்லாதவன் அப்படியே போனாலும் பத்து ரியால் கொடுக்க வேண்டும். அவன் ஒருமுறை அறையில் யாருமில்லாத நேரத்தில் என் தலையை உற்றுப் பார்த்துக்கொண்டே "நண்பா வா.."என உருதுமொழியில் அழைத்தான். கக்கூஸில் அழைத்துப்போய் என் தலைமுடியை அழகாக வெட்டித் தந்தான். என் வாழ்வில் ஒருபோதும் இதை மறக்க முடியாது.

உ.பிகாரனுக்கு கபீல் உண்டு. இக்காமா உண்டு நான் ஏதுமற்றவன். இனி போலிஸில் சொல்ல வேண்டும். ஒவ்வொருவரையும் விசாரிப்பார்கள். ஏன் எல்லோரும் சேர்ந்து உ.பி.காரனை கொலை செய்திருக்கக் கூடாது என சந்தேகம் வரும். அவர்கள் எல்லோரும் கூடி வேகமாக ஆலோசித்தார்கள். மலப்புறம் மம்மலி முதலில் என்னை அந்த இரவில் அறையைவிட்டு வெளியேறச்சொன்னான். அந்த இரவு உடுத்த துணியோடு வெளியேறும் முன்னால் உ.பி. காரனின் சடலத்தை ஒருமுறை பார்த்துக்கொண்டேன். ஒப்பாரி வைத்து அழும் அவகாசம் எனக்கு கிடைக்கவில்லை.

வீதியில் வந்து நின்று எனது விதியை நினைத்து ஆகாயத்தைப் பார்த்து கதறி கதறி அழுதேன். என் கன்னங்களில் வழிந்த கண்ணீரையெல்லாம் எனது நாவால் நக்கி நக்கி குடித்தேன்.

ஒரு போலீஸ் வாகனம் தூரத்தில் வந்து கொண்டிருந்தது. ஒரு பிரமாண்டமான குப்பைத் தொட்டியில் குதித்து மறைந்து கொண்டேன். குப்பைத்தொட்டி லாரியின் பாடியைவிட பெரியது. அழுகி நாறிய இறைச்சித்துண்டுகளில் என் முகம் புதைந்து கிடந்தது. கொஞ்சம் புழுக்கள் என் முகத்தில் ஊர்ந்தது. கைகளால் தட்டிவிட்டேன். அவை முகத்திலேயே மடிந்து பிசுபிசுத்தது. துடைத்து விடலாம் என துணிபோல் கிடந்த ஒன்றை ஆவேசமாக எடுத்து வேகவேகமாக முகத்தைத் துடைத்தேன். அந்த ஸானிட்டரி நாப்கினிலிருந்து வந்த துர்நாற்றம் என்னைக் கொன்றுவிடும் போல இருந்தது. நாற்றம் தாங்க முடியாமல் வாந்தி எடுத்தேன். நான் மரித்துக்கொண்டிருப்பதாக உணர்ந்தபோது உன் முகம் நினைவில் வந்தது. அப்போது மட்டுமல்ல எனக்கு மரணம் நிகழும் என்று நான் நினைக்கும் போதெல்லாம்

உன்முகம் தான் நினைவில் வருகிறது. எவ்வளவோ முயற்சித்தும் மகள் முகம் நினைவில் வரவில்லை. நான் வரும்போது மூன்று மாத சிசுவாக உன் வயிற்றிலிருந்தவள். நான் இதுவரை பார்த்திராத முகம் உன்னைப் போலவா, என்னைப்போலவா அல்லது நாம் இருவரின் கலவையா. நான் வரும்போது கதவுக்குப் பின்னால் கண்ணீரோடு நின்ற உன்முகம் என் நினைவில் வரும்பொழுதெல்லாம் என் இருதயம் அறுந்துவிழுந்து கொள்ளும். குப்பைத் தொட்டியிலும் அப்படித்தான்.

இரண்டு மூன்று பூனைகள் குப்பைத் தொட்டியில் சாடிய அதே வேகத்தில் மிரண்டு வெளியேறின. இங்கே தெரு நாய்கள் கிடையாது. நாய் நமக்கு ஹராம் ஆனாலும் பணக்காரர்கள் வீட்டில் இங்கேயும் நாய்கள் இருக்கிறது. அவர்கள் மடிமீது மார்பு மீது தவழ்கிற செல்லப்பிராணியாக இங்கே தெரு நாய்களுக்குப் பதிலாக தெருப் பூனைகள். இங்கே பூனைகளுக்கு எலி பிடிக்கத் தெரியாது. நமது நாட்டில் நாய்களைப் போல் பூனைகளை கல்லால் அடிக்கிறார்கள். கார்களில் அடிபட்டுச் சாகிறது. ஹோட்டலுக்கு முன்னால் வாய் பார்த்து நிற்கிறது. குப்பைத் தொட்டிக்குள் ஒரு பூனையின் பிணமும் கிடந்தது. இன்னும் அந்த குப்பைத் தொட்டிக்குள் கிடந்ததையெல்லாம் நான் வரிசைப்படுத்தினால் நீ தாங்கிக் கொள்ளமாட்டாய். எனக்குத் தலைவாரி, பவுடர் போட்டு மடிப்புமாறாத உடையில் அத்தர் தடவி அழகு பார்த்த உன்னால் அதைத்தாங்கிக்கொள்ளவே முடியாது.

மூன்று மணிநேரத்துக்கு மேலாக அந்த குப்பைத் தொட்டியில் நானும், மனித மலமும், புழுக்களும், செத்தபூனையும் அழுகிய இறைச்சியும் இத்துடன் நான் எடுத்த வாந்தியும் வேண்டாம் விட்டு விடுவிடுகிறேன். நான் இரண்டு ஆண்டுகளாக குடியிருந்த அந்த

நகரத்தைவிட்டு அல்லது நரகத்தை விட்டு எப்படி தப்பினேன்.. தப்பினேன் என்பது சரி அல்ல. இன்னொரு நகரத்துக்கு அல்லது நரகத்துக்கு எப்படி வந்து சேர்ந்தேன் என்பதை சொல்லிவிடுகிறேன். உனக்கு எல்லாவற்றையும் சொல்ல விரும்புகிறேன். ஆனாலும் எனக்கு வரிசைப்படுத்த தெரியவில்லை.

குப்பைத் தொட்டியிலிருந்து முன்னூறு அடி தூரத்தில் ஒரு லாரி நின்றது. நம் நாட்டு லாரிக்கு இரண்டு மடங்கு பெரியது. விடிந்ததும் குப்பைத் தொட்டியிலிருந்து வெளிச்சாடி ஒரு மனநோயாளியைப் போல அல்லது ஒரு திருடனைப்போல மறைந்து மறைந்து லாரிக்குள் ஏறினேன். லாரியில் நிறைய பொருட்கள் இருந்தன. ஒரு பெரிய சைஸ் பீரோவுக்குள் புகுந்து கதவைச் சாத்திக்கொண்டேன். அவர்கள் பேசிக் கொண்டதிலிருந்து பணியாட்கள் பாகிஸ்தானியர்கள் என்றும் லாரி ஜித்தா போவதாகவும் தெரிந்துகொண்டேன்.

நீண்டதூரம் பீரோவுக்குள் இருந்து யாத்திரை செய்தது உலகத்தில் நானாகத்தான் இருக்க வேண்டும். அந்த மூச்சுத் திணறலில் கண்கள் வெளிச்சாடி விடும்போல் இருந்தது. இருட்டும், காற்றுகளற்ற அந்த சூழலும் என் நாக்குகளை பிடுங்கி இழுத்துக் கொண்டிருந்தது. இன்னும் வேண்டாம் அந்த விவரிக்க முடியாத கொடுமையை எழுத்தில் கொண்டுவர இயலவில்லை. அல்லது நான் விரும்பவில்லை. கிட்டத்தட்ட 400 மைலில் பயணம். பீரோவுக்குள்ளேயே நான் இறந்துவிடுவேன் என நினைத்த போதும் உன் கண்ணீர் முகம்தான் என் நினைவுகளை ஆக்ரமித்திருந்தது. இதுதான் நான் ஜித்தா வந்த கதை.

நமக்கு திருணம் முடிந்த நாளாவது மாதம் உன்னைவிட்டு பிரிந்து இங்கு வந்தேன். அதற்கு முந்திய இரவில் நீ என்னை அழுதுகொண்டே அள்ளி அணைத்துக்கொண்டதையும், வழக்கமாக உன் வியர்வையில் நானும் என் வியர்வையில் நீயும் நனைவதற்கு மாறாக கண்ணீரால் பரஸ்பரம் தேகத்தை நனைத்துக் கொண்டதையுமான நினைவுகளோடு புறப்பட்டேன். அப்போது நீ மூன்றுமாத கர்ப்பிணி. இங்கே வந்து சேர்ந்த போதும் உன் சரீரவாசனை என் நாசிதுவாரத்தை விட்டு நீங்காமல் என்னை வதைத்துக்கொண்டிருந்தது. ஒரு அறையில் அடைபட்டுக் கிடந்தேன். நினைவுகளில் நீ என்னை கட்டியணைத்தாய். முத்தமிட்டாய். உன் மூச்சுக்காற்றின் உஷ்ணத்தோடு இதழ் சுவைத்து என்னையே நீ எடுத்துகொண்ட நினைவுகளின் பிடியில் துடிதுடித்து துவண்டு கிடந்தேன்.

எனது கபீல் பாஸ்போர்ட்டை வாங்கிக் கொண்டு போனான். மாலை வருவதாகவும் நாளை வேலை ரெடியாகிவிடும் என்று போனவன் அதன்பிறகு திரும்ப வரவே இல்லை. நாட்கள் போகப்போக நம்பிக்கை இழந்து நான் திக்கற்றவனானேன். இந்தியன் என்ற அடையாளத்தை இழந்து திருவிழா கூட்டத்தில் குடும்பத்தை தொலைத்த ஊமை குழந்தைபோல கதறி அழத்தொடங்கினேன். எனது முதல் கதறல் அப்போதுதான் துவங்கியது.

நான்கு மாதங்களுக்குப் பிறகு ஒரு அறையில் சமையல்காரனாக வேலை. இருநூறு ரியால் சம்பளம். வெளியே போக முடியாது. போலிஸ் பிடித்துக்கொள்ளும். ஆறுமாத காலமாக அந்த அறையில். பிறகுதான் உ.பி. காரன் இருந்த அறைக்கு வந்தேன். எட்டாயிரம் ரூபாய் உனக்கு கொடுத்துவிட்டேன். நீ எழுதிய எந்த

கடிதமும் எனக்கு கிடைக்கவில்லை. எனவே நான் எழுதுகிற கடிதம் உனக்கு கிடைக்கிறதா இல்லையா என்பதும் எனக்குத் தெரியவில்லை. நீ அழுது கடிதம் எழுதியிருக்கலாம். எனக்கு ஆறுதலாக எழுதியிருக்கலாம். உன் கடிதங்களில் ஒன்றையாவது நான் வாசித்தால் என் சுவாசம் சுகமாயிருக்கும். நீ குழந்தை பெற்ற விசயம்கூட நான்கு மாதங்களுக்குப் பிறகு என் அறைக்காரன் தொலைபேசியில் வீட்டில் கேட்டுச் சொன்ன போதுதான் அறிந்து கொள்ள முடிந்தது.

குழந்தையை குறித்து நான் எவ்வளவு கற்பனை பண்ணியிருந்தேன் தெரியுமா? அவைகள் என் வாழ்வில் இனி ஒருபோதும் கிடைக்காது. இன்னொரு குழந்தைப் பெற்றுக்கொள்ளும் சக்தி என்னிடமிருப்பதாகத் தெரியவில்லை. இதை எழுதும்போது உன்னை நினைத்து அழுது கொள்வதைத் தவிர எனக்கு வேறு எதுவும் தெரியவில்லை. நம் குழந்தை எனது மார்பில் மலம் கழிக்க வேண்டும் என விரும்பியிருந்தேன். என் முகத்தில் மூத்திரம் பெய்ய வேண்டும் என ஆசை வைத்திருந்தேன். இப்போது நான்கு வயதைத் தாண்டியிருப்பாள். ஒரு வேளை நான் உயிரோடு வந்தாலும் இனி அது சாத்தியப்படாது.

ஒரு மாலைப் பொழுது நான் ஜித்தா வந்தேன் அல்லது கொண்டு வரப்பட்டேன். அந்த பீரோவிலிருந்து யாருமறியாமல் வெளியேறுவது எனக்கு ரொம்பவும் சிரமமாக இருந்தது. ஏற்கனவே முந்திய இரவு குப்பைத் தொட்டியில் அழுகிய இறச்சியோடும், அந்த நாப்கினோடும் நான் உருண்டு புரண்டதால் என் சரீரத்திலிருந்து செத்த நாற்றம் பீரோவுக்குள் வியர்த்து வியர்த்து நனைந்து எந்த நாற்றத்தோடும் ஒப்பிடமுடியாத ஒருவித புதுநாற்றமாக இருந்தது.

பீரோவிலிருந்து பளிச்சென வெளியேறி வெறிபிடித்த ஒரு மிருகத்தைப்போல ரோட்டில் சாடினேன். பிரம்மாண்டமான மக்கள் கூட்டம் பெரிய பெரிய கட்டிடங்கள். கண்ணாடி மாளிகைகள். ஏதோ சொர்க்கத்தில் வந்து விட்டதைப் போல விளக்குகள் மின்னி மினிங்கின. நீண்ட இடைவெளிக்குப் பிறகு நான் பார்க்கும் வெளியுலகம். அந்த இடத்தின் பெயர் 'பலத்....' யாரும் எனனைப் பார்க்கவில்லை. நான் கால்கள் போன திக்கில் நடந்து போனேன். என்னை கடந்து போனவர்கள் மூக்கைப்பொத்தினார்கள். என்னிடமிருந்து கிளம்பிய விசித்திர நாற்றத்தில் சிலர் வினோதமாகப் பார்த்தனர். பெருங்கூட்டம் எனக்கு விலகி வழிவிட்டது. யாரும் என்னை எதுவும் கேட்கவில்லை. அந்தக் கூட்டங்களில் பலநாட்டினர் இருந்தனர். பிலிப்பைன்ஸ் நாட்டினர் நிறைய நின்றார்கள். ஒன்றிரண்டு சிறுவர்கள் மஜ்னூன் மஜ்னூன் என்று கத்தினார்கள். மஜ்னூன் என்றால் அரபி மொழியில் பைத்தியம் என்று அர்த்தம்.

அந்தக்கூட்டத்தில் நான் பிச்சை எடுக்கத் தொடங்கினேன். முதலில் ஒரு எகிப்து நாட்டுக்காரன் ஒரு ரியால் தந்தான். சிறுவர்கள் இப்போது மஜ்னூன் என்று கத்திக்கொண்டே காலி பெப்சி டின்னை என்மீது எறிந்தார்கள். நான் பிச்சை எடுப்பதில் தீவிரமாக இருந்தேன். பிறகு பலரும் ஒவ்வொருரியால் தந்தார்கள். ஒன்றிரண்டுபேர் வானத்தைப் பார்த்து கைதூக்கினார்கள். அதற்கு இறைவன் தருவான் என்று அர்த்தம். ஒரு தமிழன் அந்தக்கூட்டத்தில் உற்றுப்பார்த்து

"தமிழா"

தலையாட்டினேன்.

ஒரு ரியால் தந்தான் தந்துவிட்டு சொன்னான் நான் தமிழர்களை கேவலப்படுத்துவாக.

ஒரு அரபி கையில் வைத்து தின்று கொண்டிருந்த சேன்ட்விச்சை தந்தான். ஒரு தெருநாயைப் போல தின்றேன். பசியில் வயிறு எரிந்தது. ஒரு பிலிப்பைன்ஸ் பெண் குடித்துக்கொண்டிருந்த பெப்சியைக் கேட்டேன். அவள் அதைத் தராவிட்டால் நானே அதைத் தட்டிப்பறித்திருப்பேன். நல்ல வேளை பயந்து தந்துவிட்டாள். ஒரு மூச்சில் குடித்துவிட்டு நடந்தேன். அந்தக் கூட்டத்தில் யார் எதை தின்று கொண்டிருந்தாலும், குடித்துக்கொண்டிருந்தாலும் அவர்கள் முன்னால் பசி அடங்கும்வரை என் கரம் நீண்டுகொண்டே இருந்தது.

மக்புரிக்கு பாங்கு சொன்னார்கள் கொஞ்சம் கூட்டம் பள்ளிக்குள் போனது. நான் பள்ளி கக்கூசில் போய் உடைகளைக் களைந்துவிட்டு குளித்தேன். ஆடைகளை நனைத்துப் பிழிந்து இஷாவுக்குப் பிறகு அந்த பள்ளியை விட்டு வெளியேறினேன். அங்கிருந்து கந்தரா என்ற பகுதிக்கு வந்தேன். அது ஒரு கோல்ட் மார்க்கட் நூறு கடைகளுக்கு மேலாக இருக்கும். அத்தனையும் தங்க ஆபரண கடைகள். நான் முகம் பார்க்காத மகளின் காது குத்தும் ஆசையும் வந்தது. ஒரு மலையாளி கடையில் சாப்பிட்டேன். அந்த இரவில் எனக்கொரு எத்தியயோப்பியாக்காரன் உதவினான்.

அவன் ஒரு பாழடைந்த அரபி வீட்டில் காவலாளி. வீட்டில் யாரும் கிடையாது. எப்போதோ பிரான்சிலிருந்து கொண்டு வந்த ரெடிமேடு வீடுகள் மத்தியில் ஒரு நீச்சல்குளம். நான்கைந்து ரெடிமேடு வீடுகள் பாழடைந்து கிடந்தது. ஒன்றை சுத்தம் பண்ணி அவன் தங்கியிருந்தான். சுற்றிலும் மிக பிரம்மாண்டமான மதில்சுவர். அவன் அங்கேயே கிடப்பானாம். பேச்சுத் துணைக்கு கூட யாருமில்லையாம். நீச்சல்குளம் நாசமாகிக் கிடந்தது. அது முன்பு வசந்த மாளிகையாக இருந்த இடம்.

அவன் முதலில் என்னை நம்பவில்லை. பிறகு என்ன காரணமோ என்னை அவனுக்குப் பிடித்துப் போய்விட்டது. என்னை ஒன்றிரண்டு நாட்கள் அங்கே தங்கிக் கொள்ள அனுமதித்தான். இந்தியாவைப் பற்றி அவனுக்கு நிறைய சொன்னேன். அவன் எனக்கு பதிலாக எத்தியோப்பியாவை பற்றி நிறைய சொன்னான். இந்தியாவில் அவனுக்கு தெரிந்தவர்கள் இரண்டுபேர் ஒருவர் மகாத்மா காந்தி. இன்னொருவர் அமிதாப்பச்சன் இந்தியாவின் ஜனநாயகத்தைப் பாராட்டி பேசினான். அவர்கள் நாட்டு ஜனநாயகத்தைக் குறித்து கவலை தெரிவித்தான். எத்தியோப்பியா இரண்டாகப் பிரிந்து எரித்யா உருவான வரலாற்றையும் அடிக்கடி இரண்டு நாடுகளும் மோதிக்கொள்வதையும் சொன்னான். ஆப்பிரிக்கா கண்டத்திலுள்ள பல நாடுகளைப் பற்றிய அரசியல் விவகாரங்களையெல்லாம் பேசினான். சோமாலியா உள்நாட்டு யுத்தம் பற்றி ரொம்பவும் தெளிவாகச் சொன்னான். அவன் நல்ல விசய ஞானமுள்ளவனாக இருந்தான்.

அவனோடு இருந்த நாட்களும் எனக்கு நன்றாக சாப்பாடு போட்டான். குளிக்க தண்ணீர் தந்தான். ஆனால் அவன் ஒரு மக்கு தண்ணீரில் உடம்பை துடைத்துக்கொள்வான். இரவு பாகிஸ்தான் கடையிலிருந்து சுட்ட கோழியும் லெபனான் ரொட்டியும் வாங்கித் தந்தான். வெளுத்த ஆகாயத்துக்கு கீழே ஒரு மரப்பெட்டியில் உட்கார்ந்தும் டின்களும் குப்பைகளும் நிரம்பிக்கிடந்த அந்த பாழடைந்த நீச்சல்குளத்தின் உள்ளே இருட்டின் முகம் தரித்தும் நாங்கள் ஒருபாடு பேசிக்கொண்டோம். நான் அவனை விட்டு நாலாவது நாள் பிரியும்போது எனது இரண்டு கன்னங்களிலும் முத்தமிட்டான். வாய்ப்பு கிடைத்தால் சந்திக்கலாம் என்றான். அதன்பிறகு இதை எழுதிக்கொண்டிருக்கும் இந்த நிமிடம் வரை அவனை சந்திக்கவில்லை.

ஐந்தாறு மலையாளிகள் இருந்த அறையில் ஐந்தாவது நாள் சமையல்காரனாக சேர்ந்தேன். காலையில் கட்டன் சாயாப்போட்டுக்கொடுக்க வேண்டும். மதியமும் இரவும் சமையல் செய்ய வேண்டும். கக்கூஸ் கழுவ வேண்டும். ஒருவர் இருபத்தி ஐந்து ரியால் வீதம் ஆறுபேரும் சேர்ந்து மாதம் நூற்றி ஐம்பது ரியால் தருவார்கள்.

உனக்கு ஒரு கடிதம் எழுதிப் போட்டேன். நீ பதில் எழுத வேண்டாம் எனவும் எழுதியிருந்தேன். மீண்டும் ஒரு விசித்திரமான அறைக்குள் வாழ்க்கை. அறையில் ஜன்னல் கிடையாது. ஒரு வாசல் கதவு மட்டும்தான். இங்கே வாசல் கதவை யாரும் திறந்து வைப்பதில்லை. இந்த அறைக்கு வந்தபிறகு நான் ஆகாயம் பார்க்கவில்லை. இரவு பகலின் வித்தியாசத்தை அவ்வளவு துல்லியமாக உணர்ந்ததில்லை. நான் அறையைவிட்டு வெளியே போகக்கூடாது, போனால் அப்படியே போய்விட வேண்டும் என அவர்கள் கடுமையாக சொன்னார்கள். ஆகாயம் பார்க்கும் ஆசைவந்தால் யாருமில்லாத நேரத்தில் வாசல்கதவை லேசாக திறந்து கொண்டு அந்த இடுக்கு வழியாக தெரியும் வெண்மையை பார்ப்பேன். இரவில் இடுக்குவழியாக ஒரு நட்சத்திரம் கூட தெரியாது. நிலவைப் பார்த்து நீண்ட காலமாகி விட்டது. அவர்கள் இல்லாத நேரத்தில் நான் ஏசியும் போடக்கூடாது. என் சரீரம் எப்போதும் வியர்த்துக்கொண்டே இருக்கும். வியர்வை ஊத்த ஊத்த நீ எனக்கு மணவறையில் வேலைப்பாடுகளோடு கூடிய அந்த பனை ஓலை விசிறியால் வீசிவிட்டதும் உன் சேலைத்தும்பால் துடைத்துவிட்டதுமான அந்த நினைவு வந்துவிடும்.

தலைமுடி ஒருபாடு வளர்ந்து விட்டது. தாடியும் அப்படித்தான். கண்ணாடியில் முகம் பார்க்கும் போதெல்லாம் சிறுவர்கள் மஜ்னூன்...

நாள் கக்கூசில் புகுந்து கத்திரியால் நானே எனது தலைமுடியை வெட்டினேன். எனக்கு முடிவெட்டி தந்த அந்த உ.பி. காரனை நினைத்து அழுது கொண்டேன். அவன் சடலம் என்னவானது. அந்த அறையிலிருந்து பங்களாதேசியும். டெல்லிபரோவும், மமல்லியும். குஞ்சாப்பும் எமனியும் என்னவானார்கள் என்பதும் எனக்கு தெரியாது. ஒன்றை செய்கிறபோது அது தொடர்பான இன்னொன்று நினைவில் வருகிறது. கக்கூசில் என்னோடு உ.பி. காரனும் நிற்பதுபோல் தோன்றியது. மறுநிமிடம் பயந்துவெளியே வந்தேன். அறைவாசிகள் என் தலையைப் பார்த்து சிரித்தார்கள். என்னையும் ஒட்டுமொத்த தமிழர்களையுயும் கேலி செய்தார்கள். இப்படித்தான் இந்த அறையில் பதினாறுமாதங்கள் உருட்டியுள்ளேன்.

ஒரு இரவு சாமத்தில் வாசல்கதவு பயங்கரமாக தட்டப்படும் ஓசை கேட்டது. மம்மாக்கா லென்ஸ் வழியாக பார்த்துவிட்டு பதறினார். வெளியே ஐந்தாறு போலீஸ். கக்கூசில் கிடந்த மரப்பெட்டிக்குள் வேகமாக பதுங்கினேன். அந்த பெட்டி இத்துப்போன கபர் குழியை விட மோசமானது. கரப்பான் பூச்சியும் எலியும் கிடந்தது. வாசலை மிதித்து உதைத்துவிடும் ஆக்ரோஷமான தாக்குதல் வெளியே. யார் செய்த புண்ணியமோ நான் தப்பித்துக்கொண்டது. அன்று நான் அவர்கள் பிடியில் சிக்கியிருந்தால் இதை நான் இப்போது எழுதிக்கொண்டிருக்க முடியாது. இங்கே உள்ள போலீஸ் மார்பிலும், முகத்திலும்தான் அடிக்கிறார்கள். எல்லா போலிசிடமும் கைத்துப்பாக்கி உண்டு. ஆனாலும் இதுவரையிலும் அவர்கள் யாரையும் சுட்டதில்லை.

இங்கே மக்காவில் உம்ரா செய்ய வருபவர்கள் பலரும் திரும்பிப் போவதில்லை. அல்லது இங்கே தங்கிவிடும் நோக்கத்தில் உம்ரா செய்ய வருகிறார்கள். இந்தியாவின் மலப்புரம்வாசிகளும், லக்னோகாரர்களும்

அதிகம். பங்களாதேசிகளும், பாகிஸ்தானிகளும் மற்றும் ஆப்ரிக்கா கண்டத்திலுள்ள அனேக நாடுகளைச் சார்ந்தவர்களும் அதிகமாக வருகிறார்கள். இந்தோனேசியர்களும் எமனிகளும் நிறைய உண்டு. நம் தமிழர்கள் விரல் விட்டு எண்ணிவிடும் அளவில்தான். மற்றபடி என்னைப் போன்று கபீலை தொலைத்தவர்களும் நிறைய உண்டு.

அரசாங்கம் ஆணை போட்டது. உம்ராவில் வந்தவர்களும், மற்றும் கபீலிடமிருந்து வெளியேறி நிற்பவர்களும். குறிப்பிட்ட தேதிக்குள் நாட்டைவிட்டு வெளியேற வேண்டும். இல்லையென்றால் கடுமையான சிறைத்தண்டனை வழங்கப்படும் என்றார்கள். டிவியில் பத்திரிகையில் விளம்பரம் வந்தது. இப்படிப்பட்டவர்களுக்கு அடைக்கலம் கொடுப்பது குற்றமாக அறிவிக்கப்பட்டது. அறிவிப்பு வந்த உடனே போலிஸ் வேட்டை தீவிரமானது. மறைந்து வீடுகளில் வேலைபார்த்தவர்கள், அறைகளிலிருந்தவர்கள் என அனைவரும் இருப்பிடத்தை விட்டு வெளியேற நிர்ப்பந்திக்கப்பட்டனர். விடிவதற்கு முன்னால் நான் அறையை விட்டு வெளியேற வேண்டும். இதை எழுதி முடித்துவிட்டு நான் சிறைச்சாலைக்கு போக இருக்கிறேன்.

இங்குள்ள சிறைச்சாலை மிகவும் கொடுமையானது. ஏ.சி. கிடையாது. தண்ணீர் தேவைக்கு கிடைக்காது. உணவு என்று எப்போதாவது ரொட்டித்துண்டுகளை வீசுவார்கள். சுட்ட கோழியும் கூடவே. வலிமையானவர்கள் மட்டுமே அடித்துப்பிடித்து எடுத்து தின்று கொள்ள முடியும். தக்ரோனிகள் வலிமையானவர்கள்.

ஆப்ரிக்கா கண்டத்தில் உள்ள கருப்பர்கள் தக்ரோனியர்கள் என்று அழைக்கப்படுகிறார்கள். தக்ரோனி பெண்கள் ரொம்பவும் பாவம். குழந்தைகளை முதுகிலோ வயித்திலோ துணியால் சுற்றி கட்டி

வைத்துக்கொண்டே சுட்டெரிக்கும் வெயிலில் குப்பைத் தொட்டிகளில் காலி டின்கள் மற்றும் காய்ந்த ரொட்டிகளை பொறுக்குவது ரொம்பவும் கொடுமையானது. ஒவ்வொரு கடைகடையாக சென்று அவர்கள் ஸ்தீக்ரியால்... என்று கைநீட்டும் போது இருட்டைப்போன்ற அந்த கருப்பு முகங்களில் சோகம் செவத்துக்கிடக்கும். ஸ்தீக் என்றால் அரபு மொழியில் நண்பன் என்று அர்த்தம். அவர்களின் பத்து வயது பதினைந்து வயது தகப்பனற்ற ஆண்மக்கள் இங்கே வண்டி கழுவுகிறார்கள். போலிஸ் அவர்களை விரட்டுவதும் அவர்கள் சிதறி ஓடுவதும் ஆத்திரத்தில் சோப்புநுரை இருக்கும் அவர்களின் டப்பாக்களை மிதித்து உடைத்து குப்பைத் தொட்டியில் வீசிவிட்டு போவதையும் அறைவாசிகள் சொல்லுவார்கள்.

இங்கே சிறைச் சாலைக்குள் மரணம் சர்வசாதாரணமானது. எப்படியும் தினசரி ஒன்றிரண்டு பேராவது செத்துப்போவார்கள். என்னைப்போன்ற பலவீனமானவர்கள் உயிர்பிழைப்பது கடினம்தான். இங்குள்ள சிறையில் வெளிநாட்டுக் காரர்களே அதிகம். ஒரு மாதமோ இரண்டு மாதமோ சிறையில் கிடந்தால் நம்முடைய எம்பஸியிருந்து அதிகாரிகள் வருவார்கள். விசாரிப்பார்கள். இவன் இந்தியன் தானா என சந்தேகம் வந்தால் சிக்கல்தான் தமிழர்கள் மலையாளிகளை பளிச்சென அடையாளம் கண்டுகொள்ளலாம். பாவம் உ.பி.காரர்கள் நடை. உடை, பாவனை, மொழி எல்லாம் பாகிஸ்தான்காரனைப் போல இருப்பதால் அவன் துளைக்கப்படுவான் இதைப்போலவே பாகிஸ்தானியரும் அவர்கள் எம்பஸிசியில் அதிகாரிகளால் துளைக்கப்படுவார்களாம். தமிழர்கள் மீது குறிப்பாக குமரி மாவட்ட தமிழர்கள் மீது இலங்கைக்காரனோ என்ற சந்தேகம் கொண்டு விசாரிப்பார்கள். விசாரணையில் திருப்தி அடைந்தால் போட்டோ எடுப்பார்கள். அதற்குரிய கட்டணத்தை அரபி போலிஸ்

வாங்கிவிடுவான். பணம் இல்லையென்றால் அடிப்பார்கள். பிறகு அவசர பாஸ்போர்டு கிடைத்து விட்டால் கப்பலிலோ விமானத்திலோ மும்பைக்கு அனுப்பிவைப்பார்கள். இது போன்றவர்கள் பயணம் செய்யும் கப்பல் பயணத்தில் சரியான உணவு தண்ணீர் இல்லாமல் கொஞ்சம்பேர் மரணம் அடைவார்கள். இந்திய எம்பசியிலிந்து வருகிற அதிகாரிகள் நம்மவர்களை நாயைவிட கேவலமாக நடத்துவார்கள். அதில் நானும் ஒரு நாயாக நிற்பேன்.

கும்பல் கும்பலாக போலிஸ் பிடித்துக்கொண்டு போனது. நடுச்சாமத்தில்அறைகளை தட்டியும். உடைத்தும் இக்காமா இல்லாதவர்களை தெருநாய்களை இழுத்துக்கொண்டு போவதைப் போல இழுத்து லாரிகளில் அடைத்தார்கள். பயந்து மிரண்ட ஜனம் சரபியா பாலத்துக்கு கீழே ஆயிரக்கணக்கில் சரணடைகிறோம் என குவிந்தார்கள். நிறைய பெண்கள் இருந்தனர். இந்திய பெண்கள், பாகிஸ்தானிய பெண்கள், இந்தோனேசிய பெண்கள் மற்றும் தக்ரோனி பெண்கள் எக்கச்சக்கமாக இருந்தனர். நிறைய தக்ரோனி சிறுவர், சிறுமியர் கைக்குழந்தைகள் இருந்தன. அவர்கள் எப்படி வந்தார்கள் என்பது சற்று விசித்திரமானது

தாய்நாட்டில் உள்நாட்டு யுத்தங்கள் மற்றும் வறுமையை தாக்குப்பிடிக்க முடியாமல் வாழ வழிதேடி இந்த நாட்டுக்குள் உம்ரா என்ற பெயரில் நுழைந்திருக்கிறார்கள். இதில் பெயரை மாற்றிக்கொண்டு இஸ்லாமியர் வேடத்தில் வந்த பல கிறிஸ்வர்களும் உண்டு. இப்படி இந்த நாட்டுக்குள் நுழைந்த தக்ரோனிப்பெண்கள் விபச்சாரத்தில் ஈடுபட்டும் அரபிகளின் வீட்டு வேலைக்கு என்று அங்கே உள்ள அத்தனை ஆண்களின் காமப்பசிக்கு மேய்ச்சல் நிலமாக மாறி யார் குழந்தையை சுமக்கிறோம் என தெரியாமலேயே பெத்துப்போட்ட

தகப்பனற்ற குழந்தைகள். இன்று சிறுவர் சிறுமிகளாக காலி பெப்சிடின் பொறுக்கியும், நான் பலதில் பிச்சை எடுத்ததைப்போல பிச்சை எடுத்தும் சிறுசிறு வேலை செய்தும் வாழ்கிறார்கள். இந்த சிறுசுகளின் எண்ணிக்கை ஆயிரக்கணக்கிலிருந்தது, அரசாங்கம் இரும்புக்கரம் கொண்டு இவர்களை ஒடுக்கும் எண்ணத்தில் தக்ரோனி சிறுவர் சிறுகளை வேட்டையாடி ஒரு கப்பலில் நிறைத்து ஒரு குறிப்பிட்ட நாட்டுக்கு அனுப்பி வைத்துள்ளது. வறுமையின் கோரப்பிடியில் சிக்கிக் கிடந்த அந்த நாடு இது எங்கள் நாட்டுக் குழந்தைகள் அல்ல எனக்கூறி திருப்பி அனுப்பிவிட்டது. அரசாங்கம் மீண்டும் அவர்களை திரும்பக் கொண்டு வந்து இங்கேயே விட்டுவிட்டது. எது தாய்நாடு என தெரியாமல் தெரு நாய்களைப் போல சுத்திக் கொண்டிருக்கும் அவர்கள் அனேகமாக பிற்காலத்தில் உரிமைக்காக போராடலாம் என நினைக்கிறேன். சோமாலியர்கள் பொங்கி எழுந்து அமெரிக்கா எம்பசியில் கல் எறிந்ததை அதன் ஆரம்பமாக குறிப்பிடுகிறேன். அவர்கள் இப்போது புரைமான் சிறைச் சாலையில் கிடக்கிறார்கள்.

சிறைச்சாலையில் இடமில்லை. ஒரு அறையில் ஆறு எகிப்தியர்கள் இறந்து போனார்கள். எகிப்து நாடு அதற்குக் கண்டனம் தெரிவித்திருப்பதாகவும், எகிப்தியர்களை பெற்றுக்கொள்ள அது தனியாக ஒரு கப்பல் அனுப்பி இருப்பதாவும் பேசிக்கொண்டார்கள். தக்ரோனிகள் சாவைப்பற்றி யாரும் கவலை தெரிவிக்கவில்லை. இந்தியர்களின் சாவும் அப்படியே.

சரபியா பாலத்துக்கு கீழே திடீரென லாரிகளை கொண்டு வந்து நிறுத்துவார்கள். அரபி போலிஸ் சத்தம் போடுவான். முண்டியடித்துக்கொண்டு லாரியில் மக்கள் குதிப்பார்கள். ஒருவரை ஒருவர் இடித்துக்கொள்வதும் அடித்துக்கொள்வதுமாக லாரி நிரம்பியதும்

போலிஸ் மற்றவர்களை அடித்து பாலத்துக்கு விரட்டும். மீண்டும் லாரி வரும். நாளை நானும் இப்படித்தான் லாரியில் அடித்துப் பிடித்து ஏற வேண்டும். அல்லது போலிஸ் அடிக்கும் முன்னால் பாலத்துக்கு கீழே ஓடவேண்டும்.

அறையிலுள்ள மலையாளிகள் என்னைத் தும்பில்லாதவன் என்றே அழைத்தனர். தும்பில்லாதவன் என்றால் எவ்வித அடையாளமும் இல்லாதவன் என்று அர்த்தம். அவர்கள் ஊரில் பெரிய பெரிய வீடுகள் கட்டி இருந்தார்கள். வயலும், தோப்புமாக வாங்கி பணமும் எக்கச்சக்கமாக குவித்திருந்தார்கள். லாவகமாகத் திருடத் தெரிந்தவர்கள். ஒருவன் ஒரு கடையில் வேலை பார்க்கிறான். குப்பைகளை அள்ளி குப்பைத் தொட்டியில் தட்டும்போதே விலையுர்ந்த ஒரு பொருளையும் கொண்டு கொட்டி விடுவான். அவனுக்கு வேண்டப்பட்ட நபர் அதை தொழுகை நேரத்தில் எடுத்துப்போய்விடுவான். இதற்கு குப்பைத் தொட்டி கொள்ளை என்று பெயர். குப்பைத் தொட்டியைப் பற்றி பல செய்திகள் என்னிடமிருக்கிறது.

சரபியா பாலத்துக்கு கீழே கிடந்தவர்களில் ஒரு தக்ரோனிப்பெண் குழந்தையைப் பெற்று அங்கேயே இறந்துபோனாள். பிறந்த குழந்தையும் அழுது கொண்டே மரணமடைந்திருக்கிறது. அவள் பிரசவ வேதனையில் துடித்தபோது யாரும் எதுவும் செய்யவில்லை. போலிஸ் வந்து அவளையும் அவளின் தகப்பனற்ற குழந்தையையும் சடலமாக வண்டியில் ஏற்றிக்கொண்டு போனார்களாம். மூவாயிரத்துக்கும் மேற்பட்ட ஜனம் அந்தப் பகுதியில் மலம், ஜலம்கழித்து நாற்றம் சகிக்கவில்லையாம். எந்த நாற்றமும் என்னை எதுவும்

செய்துவிடமுடியாது. என்ற நம்பிக்கை எனக்குண்டு. என்சடலம் அழுகுவதை நான் உணர முடியாதவனாக இருந்தால், அந்த குப்பைத் தொட்டியில் நான் அனுபவித்ததை விட பெரிய துர்நாற்றம் எதுவும் எனக்கு இனி ஏற்படாது. துர்நாற்றங்களை நான் சகித்துக்கொள்வேன். ஆனால் சிறைச்சாலையும், கப்பல் பயணமும் என்னை அச்சுறுத்திக் கொண்டே இருக்கிறது.

எழுதிக்கொண்டிருக்கிற நான் மணியைப் பார்க்கிறேன் அதிகாலை நான்கு. அங்கே விடிந்திருக்கலாம். நேற்றிரவு பானையில் கிடந்த கஞ்சி வெள்ளத்தில் உப்பு போட்டு குடித்துவிட்டு பாய் கம்பெனிக்கு புறப்பட்டுக் கொண்டிருப்பாய்.. அழுகிற மகளுக்கு ஐம்பது பைசாவுக்கு ஒரு தோசை. எனக்கு மீண்டும் அழுகை வருகிறது.

நாற்பதாயிரம் ரூபாய் எனது சேமிப்பில் உள்ளது. அதை உண்டியல் மூலமாக உனக்கு கிடைக்க ஏற்பாடு செய்துள்ளேன். பணம் பெற்றுக்கொண்டதும் மகளுக்கு காது குத்தி விடு. இன்னும் ஒரு மணி நேரத்தில் உடுத்த துணியோடு பாலத்துக்குப் போய்விடலாம் என்று இருக்கிறேன். போகும் வழியிலேயே உனக்கு இந்த கடிதத்தை சரபியா தபால் நிலையத்தில் சேர்த்துவிடுவேன்.

பாலத்துக்குக் கீழே காத்துக்கிடப்பேன். தீ வெக்கையைப் போல சுட்டுக்கொதிக்கும் சாலையோரம் சாகாமல் தப்பினால் முதல் தத்து கழிந்ததாக நினைத்துக் கொள்வேன். ஆனாலும் சூரியனை உற்றுப் பார்ப்பேன். கண்கள் கூசினாலும் ஆசை தீர பார்ப்பேன். லாரி வந்து நிற்கும் போது வலிமையானவர்கள் என்னை இடித்துத்தள்ளி இரவு

வரும் இருண்ட வானத்தில் சிதறிக்கிடக்கும் நட்சத்திரங்களை முடிந்த மட்டும் எண்ணுவேன் ஒரு மஜ்னூனைப் போல. சிறைச் சாலையில் எத்தனை நாளோ தெரியவில்லை. அந்த வெக்கையில் உணவும் தண்ணீருமற்று எப்படி உயிர்ப்பிழைக்கப் போகிறேனோ புரியவில்லை. கப்பல் பயணமும் ஆயிரம்பேர் பயணம் செய்யுமிடத்தில் அதைவிட கூடுதலாக ஆடுமாடுகளைப் போல அடைத்துவிடுகிறார்களாம். நான் தப்புவேனா... தெரியவில்லை. என் எழுத்தில் தடுமாற்றம் ஏற்படுகிறது. கரம் நடுங்குகிறது. அதைத்தாண்டி உனக்கு எழுதிக்கொண்டே இருக்க வேண்டும் போல இருக்கிறது. நேரமில்லை. விடியும் முன்னால் நான் அடைபட்டுக் கிடக்கும் இந்த அறையை விட்டு வெளியேற வேண்டும். ஆகவே நான் கடிதத்தை நிறைவு செய்கிறேன்.

குறிப்பு : நான் உயிரோடு வந்தால் உன் மார்பு வெளியில் முகம் புதைத்து அழுவேன். கதறிக் கதறி அலறி அலறி அழுவேன். மஜ்னூனாக வந்தாலோ அல்லது வராவிட்டாலோ... எதுவும் தீர்க்கமாக சொல்வற்கு இல்லை.

0-0-0

# 8. கனவுப்பறவை

**- பூ. சொல் விளங்கும் பெருமாள்**

"ஹேய்!" ஏரோப்ளேன் பார்க்கப்றோம் டோய்" அந்த நான்காம் வகுப்பு மாணவர்கள் எல்லோரும் ஒரே ஆரவாராயமாகத் துள்ளித்துள்ளி குதித்தனர்.

பாலுவும் துள்ளிக்குதித்திருப்பான். அவனது கல்விச்சுமை தாங்காமல் பையின் கயிறு அறுந்து விட்டதால் ஒரு கையால் பையைத் தாங்க வேண்டியிருந்தது. பட்டன் அறுந்துபோன கால் சட்டையிலிருந்து கையை எடுத்தால் அது கால்வழியாகக் கீழே இறங்கி மானம் போய்விடும். 'இடுக்கண் களைவதாம் நட்பு' என்ற திருக்குறளை கை செயல்படுத்திக்கொண்டிருந்தது. ஆதலால் மற்ற சிறுவர்களைப் போல் அவனால் துள்ள முடியவில்லை. தூரத்தில் வரும்போதே தெருவுக்கே கேட்குமாறு கத்தினான். எம்மோவ், நாங்க நாளைக்கு ஏரோப்ளேன் பாக்கப்போறோம்.

"என்னடா?"

"ஆமா, சார் சொல்லிட்டாரு நாளைக்குப் பள்ளிக்கூடம் போகாண்டாம் காலம்பறே விமான நிலையம் போறோம்." கையிலிருந்த பையை மூலையில் விட்டெறிந்தான் பாலு. அரைஞாண் கயிற்றை வெளியிலெடுத்துக் கால்சட்டைப் பட்டியால் ஒரு சுருட்டு சுருட்டி இறுக்கினான். அம்மாவை ஒரு பார்வை கருப்புகட்டிக் கடுங்காப்பி கிடைத்தது.

"எம்மா ரெண்டு ரூபாயும் கட்டுச் சோறும் கொண்டாருணுமாம்"

“இந்த வாத்தியாங்களுக்கு வேறே வேலையே கிடையாதாடா? ரெண்டக்குடு!, மூணக்குடு! இங்க என்ன பணங்காச்சி மரமா வச்சிருக்கோம்.”

பாலுவின் முகம் வாடியது. “ஒரு வேளை அம்மா காசு தரமாட்டாளோ? ஏரோப்ளேன் பார்க்க முடியாதோ? ஆனால், எல்லாப் பையன்களும் போவான்களே...” அந்தத் தாய் இவனது வாட்டத்தைக் கண்டுவிட்டாள்.

“போலாண்டா”

பாலு அப்படியே தாயைக் கட்டிப்பிடித்துக்கொண்டான். அவள், அவன் முதுகில் தட்டிதட்டிச் செல்லம் கொஞ்சி “என் ராசா, என் கண்ணு” என்று கூறிக்கொண்டே அலாக்காத் தூக்கி முத்தமிட்டாள்.

சரி சரி ஒன் சட்டையைக் கொடு தொவச்சிப் போடறேன்.

எம்மா எம்மா இந்த சட்டை வேண்டாம்மா இதைப் பார்த்தாலே பச்சைச் சட்டை பாலுண்ணு கேலி செய்றானுவம்மா.

மனத்திற்குள் அம்மா வருந்தினாள். பாலுவின் அப்பாவை எதிர் பார்த்துக்கொண்டே இருந்தாள். அவரும் வந்தார். பாலு அம்மாவைப் பார்த்தான். அம்மா, அப்பாவுக்குச் சோறு போடத் தயாரானாள். செய்திகளும் பரிமாறப்பட்டன.

இந்தப்பாரு வீட்டு நெலம தெரியாம காலைத் தூக்கி அடாதெ. அவன் சின்னப் பய அப்படித்தான் சொல்லுவான்.

அவன் கேட்கலிங்க, புதுச்சட்டை எடுத்தா என்னன்னு நான் தாங்க நெனச்சேன்.

நெனச்சே இல்லே காசக்குடு கண்ணை முழுச்சு மூடறதுக்கெடயில வாங்கிட்டு வந்துடறேன்.

உங்களுக்குத் தெரியாம எங்கிட்டே ஏதுங்க.

உனக்குத் தெரியாமே எங்கிட்ட ஏது? மந்திரக்கோலத்தான் கொண்டாந்து தட்டணும்

அவன் இப்போது பேசவில்லை.

சரி சரி பார்ப்போம்.

பாலு தூங்கிவிட்டான். காரியாபட்டியிலிருந்து விமான நிலையம் போய் வரவேண்டுமே? புளிச்சாறு உள்ளே தேங்காய்த்துவையல், ஈரத்துணியில் சோற்று உருண்டையைக் கட்டி உரியில் தொங்கவிட்டாள். பாலு எழுந்தான். சார் காலையிலே போவ ஆறு மணிக்குப் பேருந்து நிறுத்தத்தில் வரச்சொன்னாரே இவர்கள் எல்லாம் தூங்குகிறார்களே எழுந்து தாயை எழுப்பினான்.

எம்மா? விடிஞ்சிடுச்சா?

அட கிறுக்குப்புள்ளே நடுசாமண்டா

கோழி கூவிற்றாம்மா

படுத்துத் தூங்குடா, கோழியும் கூவல காக்காயும் கூப்பிடல

நம்பிக்கையில்லாமல் கண்ணை இறுக மூடிக்கொண்டான். மூன்றாவது வீட்டுக்கடிகாரம் ஒவ்வொருமுறை மணியடிக்கும்போதும் ஒன்று இரண்டு, மூன்று என எண்ணினான். நன்றாகக் குறட்டை விடும் அப்பா அம்மா மீது எரிச்சல் வந்தது.

மூன்று மணிக்குத் தூங்கிப்போய்விட்டான். காலை 5 மணிக்கு அம்மா எழுப்பி விட்டதும் துள்ளிப் பறங்க பக்க [illegible]க்கில்

கட்டுச்சோறு, இரண்டு ரூபாய், கோடிச்சட்டை, புதுக்கால்சட்டை ஆகா பாலு புது உலக உயிராகிவிட்டான்.

அருப்புக்கோட்டையிலிருந்து வரும் பேருந்து நாற்பது மாணவர்களையும் கணபதி சாரையும், சரளா டீச்சரையும் ஏற்றிக்கொண்டு காரியாபட்டியைவிட்டு விமானநிலையம் போகும் திருப்பத்தில் இறக்கி விட்டுவிட்டுச் சென்றது.

அட்டென்சன் மானிட்டர் கத்தினான். நாற்பது மாணவர்களும் எறும்புக்கூட்டம் போல் நின்றனர்.

டேய், இன்னும் ஒரு கிலோ மீட்டர் இருக்கும். ஒழுங்கா நடக்கணும். சும்மா அங்கே இங்கே ஓடினீங்க தோலை உரிச்சுப்புடுவேன். கணபதி சார் மிகவும் கண்டிப்பாகக் கூறினார்.

ஏண்டா அந்தச் செல்வன் பய எங்கடா?

சார் அவன் அப்பா ரெண்டு ரூவா தர முடியாதுன்னுட்டாராம் சார். அழுதுகிட்டே இருந்தான் சார் கையைக் கட்டிக்கொண்டு நேர்நிலையில் நின்று செல்வனின் துயரத்தில் பங்கு கொண்டான் ஒருவன்.

சரி சரி சர்க்கரை?

அவுங்கம்மா கஞ்சி காய்ச்சல சார். எங்க வீட்டுலெ வந்த சோறு கடன் கேட்டாங்க. எங்கம்மா இல்லைன்னு சொல்லிடுச்சு சார்.

நான்கைந்து மாணவர்கள் மிக அழகாக உடுத்தியிருந்தார்கள். எவர்சில்வர் மூன்றடுக்குப் பாத்திரங்கள் சூரியனில் மின்னிப் பிரகாசித்தன. கணபதி அவர்களை நன்றாகவே விசாரித்தார். சரளா டீச்சர் அந்தப் பையனுகளுக்கு மட்டும் ஆயா போல வந்தாள்.

"சார் பாலு நடுரோட்டுக்குப் போறான் சார் " மானிட்டர் கத்தினான். உடனே பாலு பறந்து வந்து வரிசையில் சேர்ந்து கொண்டான்.

"போடா பெரிய மானிட்டர். கோடிச்சட்டையைப் பாருடா"

"தீபாவளிக்கே நர்ங்க போட்டோம்ல"

"டேய் ஏரோப்ளேனுக்குள்ளே நாம் ஏறிப்போவோமில்ல?"

"போடா சார் மட்டும் தாண்டா போவார்"

"சார் போனார்னா நானும் ஒட்டிக்குவேன்."

"உன்னை மண்ணாங்கட்டி தான் கூட்டிப்போவாரு. அவனுக நாலுபேரை தானடா கூட்டிப்போவாரு."

"நெட்டையன் ஏண்டா வரலை"

"அவங்கப்பாவோட அவன் சென்னைக்குப் பிளேன்லேயே போயிருக்கானாம்டா, அவங்கம்மா வேண்டாம்னுட்டாங்க."

"சார் சார்! சாரைக் கூப்டுடா,அழகு விழுந்துவிட்டான் சார்!

கணபதி சரளாவை விட்டுவிட்டு ஓடோடி வந்தார். அழகு வெயில் தாங்கமால் சோர்ந்து விழுந்துவிட்டான். மயக்கம். பித்த மயக்கம். நன்றாகச் சாப்பிட்டால் வராத மயக்கம். சபித்துக் கொண்டே உதவினார் ஆசிரியர்.

டேய், அதோ விமான நிலையம்டா, ஹாய் உற்சாகமான ஊர்வலம், விமான நியைத்திற்கு வெளியே வந்துவிட்டது.

ஒரு சிறிய வேப்பமர நிழலில் நண்டும் சிண்டுமாக வந்து ஆராவாரமாக உட்கார்ந்தார்கள்.

விமான நியைலத்திற்குள் ஒரு சத்தமும் காணோம். அங்கும் இங்கும் ஒரிருவர் நடமாடிக்கொண்டிருந்தனர்! மானிட்டரின் அதிகாரம்

கொடிகட்டிப் பறந்தது. ஒரு வேப்பங்குச்சியை ஒடித்துக் கையில் வைத்துக்கொண்டான்.

எப்படா ஏரோப்ளேன் பாக்கப்போறோம்?

நான் சாரைப் போய்க் கேட்டுக்கிட்டு வரேன். சத்தம் போடாதீங்க என்று கூறிய மானிட்டர், பக்கத்து நிழலில் நின்று பேசிக்கொண்டிருந்த ஆசிரியர்களை அணுகினான்.

சார் பயலுவல்லாம் உள்ளே எப்போ போறதுண்ணு கேக்றானுக சார்

"பின்னிப்புடுவேன் ராஸ்கல். எல்லாம் பிளேன் வரட்டும் நான் சொல்லுவேன். போடா அங்கிட்டு" ஆசிரியர் அவ்வளவு கோபப்படும்படியாக என்ன தவறாகப் பேசிவிட்டோம் என்று மானிட்டருக்குப் புரியவில்லை.

"பையன்கள் வியர்த்து வடிந்தனர். சாரும் டீச்சரும் சுவராசியமாகப் பேசிக்கொண்டிருந்தனர். மானிட்டர் கூறினான், டேய் சத்தம் போடாதீங்க. இப்போ கேட்டைத் திறப்பாங்க சார் போய் ஆபீசரைக் கண்டு பேசுவார். பிளேன் வந்த உடனே நம்மெல்லாம் போய் பார்ப்போம். அப்புறம் பிளேன்ல ஏறி ஒரு சுத்துசுத்தி விடுவாங்க. டேய் உள்ளே போன உடனே, 'குட்மார்னிங்' சார்' னு சொல்லணும்."

பையன்கள் வாயைப் பிளந்து கேட்டுக்கொண்டிருந்தார்கள். பாலுவுக்கு ஒரு ஆசை, அண்ணே மீனாட்சியம்மன் கோவிலுக்குமேலேயும் நம்ம பள்ளிக்கூடத்துக்கு மேலேயும் பறக்கச் சொல்லுண்ணே.

சூரியன், நிழலைக் கிழக்கே சாய்த்தான்.

பெரிய கேட் திறக்கப்பட்டது. காக்கிச் சட்டை போட்ட ஒருவர் வந்து, "யோவ் இங்க என்னய்யா கூட்டம்? ஐயய்ய.... கண்ட கண்ட இடத்திலேல்லாம் அசிங்கம் பண்ணிட்டு.. யோவ் நீர்தான் வாத்தியாரா?"

கணபதி அந்த ஆளின் பக்கத்தில் நகர்ந்து மெதுவாக ஏதோ கூறினார். இடது கையால்தன் தலையில் இரண்டு தட்டுத்தட்டிக் கொண்டு எரிச்சலில் போய்விட்டார் அந்த ஆள்.

மாணவர்களிடையே அமைதி. கார்கள் சர்சர் என்று வரத் தொடங்கின. ஒரு காரில் ஒரு அழகிய சிறுநாய் இருந்தது.

"காரிலே நாய்டோய்" - மாணவர்கள்.

'டேய் சத்தம், பின்னிப்புடுவேன்' - ஆசிரியர்

கம்பி கேட்டுக்கு வெளியே நின்று பையன்கள், இந்தக் கார்கள் எங்கு போகின்றன என்று எழும்பிக் குதித்துப்பார்த்தனர்.

பிளேன் வருகிறது. சத்தம் புள்ளி பறவையாகி, காராகி, பஸ்ஸாகி அடேங்கப்பா சுத்திசுத்தி என்னாப்பெரிசு.

"சிப்புக் கோடுடோய்"

"றெக்கை டோய்"

பையன்கள் வளைந்துவளைந்து டாட்டா காட்டினர். எங்கே தூரத்தில் இறங்குவது போல் தெரிந்தது. அவ்வளவுதான் அப்புறம் சத்தம் சத்தம் தான்.

"சார் உள்ளே போவோம் சார்"

“போலாம் போலாம். ”

”சார்,உடனே போகாட்டி ரைட் சொல்லி எடுத்துடுவாங்க சார்”

கணபதி உள்ளே நுழைந்தார். கட்டித்தை எட்டுவதற்கு முன்னே ஒருவர் வந்து வேட்டை நாய் போல விழுந்தார். கணபதி முகத்தைத் தொங்கப்போட்டபடி திரும்பிவிட்டார்.

“அதோ லேசா தெரியுதடா”

“எங்கடா..... ஆமா கொஞ்சம் தெரியுது”

எரிக்கும் வெயில் செருப்புப்போடாத கால்களைக் கரித்தது. உள்ளே இருந்து கார்களும் அழகிய பேருந்தும் நகரத் தொடங்கின.

சார் பாக்கமுடியாதா சார்

அதுதான் பார்த்தோமேடா

மானிட்டருக்குக் கிட்டத்தட்ட அழுகையே வந்துவிட்டது.

பெரிய இரும்பு கேட் மூடப்பட்டது.

கணபதி பக்கத்தில் சென்று கேட்டை மூடிய ஆளிடம் ஏதோ கூறினார். அவர் துவண்டுபோய்க் கிடந்த வியர்வைப் பூக்களைப் பார்த்தார். தெற்கே கையைக் காட்டி ஒரு அரைவட்டத்தை ஆகாயத்தில் இழுத்தார்.

தெற்கு நோக்கி மாணவர்கள் சோற்றுச் சுமையுடன் ஓடினர். சுவர் முடிகிற இடத்தில் கம்பி வேலி தொடங்கியது. முள்ளும் பீங்கானும் குவித்த அந்த இடத்திலிருந்து உள்ளே பார்த்தனர். தூரத்தில் மிகத் தூரத்தில் விமானம் நின்றது.

கணபதி பையன்களுக்கு அதன் பாகங்களை விளக்கிக்கொண்டிருந்தார். நல்ல ஆசிரியர், உலகத்தையே படத்தைப் போட்டு விளக்கிறதில்லையா?

பத்து நிமிடத்துக்குப் பின் திரும்பினர்.

பாலு கேட்டான் "சார், நீங்க ஏரோப்பிளேன்ல எந்த ஊருக்கு எல்லாம் போயிருக்கீங்க சார்? "

போயிருக்கேன் - ஒப்புக்குச் சொல்கிற மாதிரி ஆசிரியர் கூறிய சுவாரசியத்தில் அடுத்த கேள்வி வரவில்லை. அரை மணி நேரம் சென்றது. அவர்கள் கையில் சோற்று மூட்டைகளைக் காணோம். மீண்டும் விமானத்தில் சத்தம் கேட்டது. ஒரு சில பையன்கள் திரும்பிப் பார்த்தனர்.

சிறிது நேரத்தில் விமானம் அவர்கள் தலைக்குமேல் கிறிச்சிட்டுச் சென்றது.

யாரும் ஆராவாரம் செய்யவில்லை. டாட்டா காட்டவில்லை.

ஒரு நிம்மதி, இந்தப் புண்ணியத்தில் பாலுவுக்குக் கோடிச்சட்டை கிடைத்தது. கணபதி சார் பள்ளிக்கூடத்திற்குப் போன உடனே, விமான நிலையப் பயணம் என்று கட்டுரை எழுத யாரையும் கட்டாயப்படுத்த மாட்டார்.

0-0-0

# 9. பிஞ்சுகளும் போரிடும்

**-மேலாண்மை பொன்னுச்சாமி**

வழக்கம்போல் அந்த நேரத்தில் தான் பரிமளம் பாட்டி விழித்துக்கெண்டாள். பக்கத்தில் ராஜி படுத்திருந்தான். வீடு பூராவும் ஈரமாகி சுவரெல்லாம் - தரையெல்லாம் குளிர்ந்து கிடந்ததால், கிழிந்த சாக்குகள் இரண்டை கீழே போட்டு, அதன் மேல் கால்களையும் கைகளையும் உள்ளுக்குள் மடக்கிக் கொண்டு சுருண்டு ஒடுங்கிப் படுத்திருந்தாள்.

வாயில் கோழை வடிய, குழந்தைபோல் அமைதியாக உறங்கும் இவள்தான் - இந்தச் சிறுமிதான். தன்னைக் காப்பாற்றுகிறாள் என்பதை நினைத்து, ஒரு சோகப் பெருமூச்சுடன் எழுந்து நெட்டி முறித்துக் கொண்டாள் பாட்டி.

ரொம்பத் தொலை தூதரத்தில் ஊதப்படும் ஏதோ ஓர் ஆலையிள் சங்கு சப்தம் கேட்டது. மூன்று மணிச் சங்கு. கதவை இழுத்தான்.

வாடைக் காற்று ஓர் ஆளைப்போல வந்து மோதியது. உடலெல்லாம் குளிரால் ரோமாஞ்சலி செய்தது. இருள் கும்மென்றிருந்து மிரட்டுகிறது.

இன்னும் தூறல் விடுகிறது. இரவெல்லாம் மழை பாட்டம் பாட்டமாக வந்து பெய்தும்... அதன் ஆங்காரம் தீராமல் இன்னும் தூறுகிறது. இன்று மட்டுமா, மழை? இந்த இரு நாட்களாக விடாமல் பெய்கிறது. ஆறுகளில் வெள்ளம், ஒடைகளில் எல்லாம் முழங்கிக் கொண்டு நீர்ப்பெருக்கு.

இந்த இழவெடுத்த மழை, எதுக்குத்தான் இப்படிப் பெஞ்சு தொலையுதோ..... எதை எதை பலி கொண்டு நிக்கப் போகுதோ... என்று பரிமளம் பாட்டி, உள்ளார்ந்த பீதியுடன் முணுமுணுத்தாள்.

அவள் வயசில் பார்த்த மழையின் அனுபவங்கள் நினைவுக்கு வந்தன. இடிந்த குடிசைகள்... இறந்த மனிதர்கள்.. மனித உழைப்பால் செழிப்படைந்த எத்தனையோ நிலங்கள் வெள்ளத்தால் பிரட்டியடிக்கப்பட்டு, வெறும் மணல் காடாக மாறிப்போன கொடுமைகள்.

அட, மனுஷன் வம்பாடு பட்டு பூமியிலே எத்தனையோ ஆக்கிவைச்சாலும் வெள்ளமோ, நெருப்போ, வறட்சியோ வந்து அத்தனையையும் மொத்தமாய்ச் சீர்குலைத்து சின்னாபின்னப்படுத்தி சர்வ நாசப்படுத்தி விட்டுப் போய் விடுகிறதே... ஆனாலும் மனுஷன் ஓய்றதில்லை. சலிக்கிறதில்லை மறுபடியும் அத்தனையையும் உருவாக்குகிறான். அதைவிட அழகா - உயர்வா

பரிமளம் பாட்டி நினைவுகளை உலுப்பி உதறிவிட்டு, நரைத்துப் போன குட்டை ரோமங்களை, அடித்து உதறி முடிந்துகொண்டு அடுப்பை மூட்டினாள் பாத்திரங்களை விளக்கினாள். பேத்திக்குத் தேவையான சாதத்தை அலுமினிய தூக்குச் சட்டியில் வைத்து மூடினாள்.

.... இன்னும் கொஞ்ச நேரத்தில் பஸ் வந்து விடும். வந்தவுடன் ஹாரன் அடிப்பான். இப்பப்போற பேத்தி.... பெறகு சாயங்காலம் அஞ்சு மணிக்குத்தான் வந்து சேரும், பாவம் சின்னப்புள்ளை மகள் வவுத்துப் புள்ளை வர்ர மார்கழி வந்தா பதினொரு வயசாகப் போகுது. சின்னஞ் சிறுசு பூமொட்டுப் போல, ஆனா.... இந்த வயசுலேயும் இந்தப் புள்ளை உழைக்க வேண்டியிருக்கு. அதுவும்.. கோழி கூப்பிடப்போய்... கோழி அடையிற நேரத்துக்குத் திரும்பி வரணும். அவ்வளவு பொழுதும் உழைக்க வேண்டியிருக்கு.

நினைவுகள், நெஞ்சுக்குள் பின்னலாடிக் கொண்டிருந்தன.

நேரமாயிடுச்சு என்ற நினைப்புடன், பேத்தியை உசுப்பினாள்.

எம்மா.... கண்ணு.... ஏய் கண்ணு...

ராஜி மெல்ல நெளிந்தாள். சிணுங்கினாள்.

என்ன ஆச்சி.... போ அங்கிட்டு என்று சிணுங்கி-சீறிவிட்டு மறுபடியும் ஒடுங்கிக் கொண்டாள்.

கண்ணு நேரமாயிடுச்சும்மா.... எந்தி கண்ணு... பஸ் வர்ரதுக்குள்ளே பல்லை விளக்கி சாப்பிட்டுக்கோம்மா... எந்திம்மா கண்ணு..

பரிமளம் பாட்டிக்கு இவள் என்றும் கண்ணுதான். குழந்தையாக இருந்த நாளில் கொஞ்சிய கொஞ்சல் வார்த்தைகளே, இன்றும் அவளுக்குப் பெயர் ஆகிவிட்டது. ராஜி என்ற வார்த்தை, பரிமளம் பாட்டியின் உதடுகளைத் தாண்டியதே கிடையாது

கண்ணு நீண்ட மறுப்புக்கள், சிணுங்கல்களுக்குப் பிறகு கண் விழித்தாள்.

என்ன ஆச்சி, நேரமாயிடுச்சா? அலங்க மலங்க விழித்துக் கொண்டு கேட்டாள்.

ஆமாண்டிக் கண்ணு.

ரொம்ப கூதலடிக்குது ஆச்சி...

என்ன செய்றது? ஆண்டவன் நம்பள அப்படி வைச்சுட்டானே. கூதல்லேயும், மழைக் கொடுமையிலேயும் சின்னஞ்சிறு குருத்து நீ போய் உழைச்சு... நாமெ பொழைக்கணும்னு எத்தாணி பிடிச்சு எழுதிட்டானே....

சரி ஆச்சி... சாம்பலெடு

பல்லை விளக்கி, முகம் கழுவினாள். தலைக்கு எண்ணெய் வைத்து சீவி, சடை போட்டுக்கொண்டாள். எண்ணெய் மின்னும் முகத்தைப் பாவாடையால் அழுந்தத் துடைத்துக்கொண்டாள்.

வேறு பாவாடையும், சட்டையும் போட்டுக்கொண்டாள். ஒரு மஞ்சள் நிறத்துணியை தாவணியாகப் போட்டுக்கொண்டாள். தாவணி தேவையில்லைதான். அதற்கான வயசோ, உடலோ இன்னும் வரவில்லைதான் - ஆயினும் அவளைவிட சிறிய வயதுப் பிளைகளெல்லாம் தாவணி போடுவதால், இவளும் போட வேண்டியிருக்கிறது.

இவள் தாவணி சுற்றி ஆழகு பார்ப்பதைப் பார்க்கும்போதெல்லாம் பாட்டி பொக்கை வாயில் பூ பூத்ததுபோல குறுநகை வெடிக்கும்.

தாவணியும் இவளும் மரப்பொம்மைக்கு துணி சுத்தி வைச்சது மாதிரி என்று மனதுக்குள் நினைத்துக் கொள்வாள். என்னென்னவோ பழைய நினைவுகள்.

சோறு வை ஆச்சி

வைச்சிருக்கேன் கண்ணு....சாப்பிடு

வட்டில் முன் ராஜி அமர்ந்தாள். அவள் சாப்பிடுவதையே பார்த்துக்கொண்டிருந்த பாட்டி, தனது மகளை நினைத்துக்கொண்டாள்.

அவளும் இப்படித்தான் ஆம்பளை மாதிரி சம்மணம் கூட்டி உட்கார்ந்துதான் சாப்பிடுவாள்... அடியே எல்லா பொம்பளைக மாதிரி உக்காந்து சாப்பிடு என்று எத்தனை தடவை கண்டித்துச் சொன்னாலும்...

ஊஹும்...... எப்பவும் இப்படித்தான். ஒரு காலை மடக்கி உள்ளுக்குள் வைத்து, ஒரு காலை குத்துக்காலாக நிற்க வைத்துச் சாப்பிடச் சொன்னால்..... கால் வலிக்கும் என்பாள். சாப்பிட்டாப்புலேயேயில்லே என்பாள்.

அவளைப்போலவே இவளும்.... இவளை இருந்து பார்க்க குடுத்து வைக்காமெ நீ போய்ட்டியே.... எம் மகளே.

நான் இன்னும் கிடக்கிறேன். அவள், வாழ்ந்து எல்லாவற்றையும் அனுபவித்து முடிச்சவள் போலப் போய்விட்டாள்.

புருஷன் செத்த பிறகும் - காட்டு வேலையா செய்து அவளை எப்படியெல்லாம் வளர்த்தேன். அருமையா பெருமையா வளர்த்தேன். ஊர்மெய்ச்ச ஒருத்தன் கையிலே பிடிச்சுக் குடுத்துடணும்னு எவ்வளவு ஆசைப்பட்டேன். என்ன அரும்பாடுபட்டு அரைக் காசும் முழுக்காசுமா சித்தெறும்பு சேர்த்தாப்புலே சேர்த்து வைச்சேன்...

அவளுக்குக் கொடுத்து வைக்கல. எவனோ ஒருத்தனோட ஒரு நா திடுதிப்புனு ஓடிப்போயிட்டாள். என்னதான் அவன் மேலே ஆசைப்பட்டாலும், பெத்து வளர்த்த ஒரு கிழவியை தவிக்க விட்டுட்டுப் போக, அவளுக்கு எப்படித்தான் மனசு வந்துச்சோ.

போனது போனாளே... இருந்து வாழக்கூடாதா? என்னதான் எளிய சாதியாயிருக்கட்டுமே... அவனும் ஆம்பளைதானே. ஆசைப்படுறதுக்கு முந்தியில்லே அதைப்பத்தியெல்லாம் தெரிஞ்சிருக்கணும்.

அவனோட பழகும்போது, ஒரு ஆம்பளையா மட்டும் தோணிருக்கு, ஜாதி தோணலே. ஆசைபட்டா ஓடிப்போயிட்டா. ரெண்டு வருஷம் கழிச்சு அவன், கிராமத்திலேயிருக்கிற அம்மா வீட்டுக்குப் போனப்போ..

அங்கேதான் காலமெல்லாம் இருக்கணும்னு சொன்னப்போ. அந்த அரிஜனச் சேரி... சுற்றிலும் பன்றிகளின் உறுமல்கள், அவர்களின் அடிமைத்தனம்... நாலாந்திர மனிதர்களாக நடத்தப்படும் நிலைமை.

அந்த மாதிரியான குடும்பத்தில், ஒரு மருகளாக இவளால் வாழ முடியவில்லை. மனமெல்லாம் அருவருப்பு, சண்டை..... கசகசப்பு ... அடி.....அழுகை...

மூன்றாம் மாசமே ஓடி வந்து மடியில் விழுந்து அழுதாள். அப்போது அவளுக்கு வயிற்றில் மூன்று மாதம். சமாதானப்படுத்தி அழைத்துப்போக வந்த கணவனை... சாதியைச் சொல்லி வைது அனுப்பிவிட்டாள்.

போனவன்.... போன ஏழாம் மாதம், ஒரு விபத்தில் போயே போய்விட்டான்.

இவளும் குழந்தையைப் பெற்றுப் போட்டுவிட்டு, அத்தோடு தன் கடமை முடிந்த மாதிரி பொசுக்கென்று போய்விட்டாள்.

நாதியத்த கிழவியாய்க் கிடந்த என் கையிலே, என் பேத்தி ஒரு பூவைப்போல.... எனக்கொரு கடமையாக - எனக்கொரு பற்றுக்கோலாக...

ஆச்சி.... என்ன தூங்குதியா?

ஆ.... ஆங் திடும்மென்று நினைவுகளிலிருந்து அறுபட்டு வெளிப்பட்டாள். இல்லேம்மா கண்ணு என்ற பாட்டி, காய்ந்த உதடுகளை ஈரப்படுத்திக் கொண்டாள். சுருக்கங்களுக்குள் இடுங்கிக் கிடந்த விழிகளில் நீர்க் கசிவு மனசின் சோகங்களை பெருமூச்சாக்கி வெளியிட்டாள்.

வெளியே வந்து எட்டிப் பார்த்தாள். மேலே இருண்டு கிடந்தது. மேகங்கள் பூதங்களாக அடர்ந்து நின்று ஒரு வெள்ளி யைக்கூட கண்ணில் காட்ட மறுத்தன. லேசாக ஒரு காற்று ஈரத்துடன் வீசியது.

சிவகாசி நரகத்தின் மின் விளக்குகள், நட்சத்திரங்களாகத் தெரிந்தன.

சற்று நேரத்திற்கெல்லாம் சடசட வென்று மழை பெய்ய ஆரம்பித்தது. பூமியின் மீது பழி தீர்ப்பது போல ஆக்ரோஷமாக மழை சடசடத்தது. ராத்திரி பூராவும் பெய்த மழை போதாதென்று... இந்தப் பாட்டம் சற்று பெரிதாக நீண்டது.

மழை நிற்கவும், பஸ் வரவும் சரியாக இருந்தது. ஒரு ராட்ஸச தீப்பெட்டித் தொழிற்சாலைக்கு சொந்தமான பஸ்.

குழந்தைகளின் உழைப்பையெல்லாம் மலிவான விலைக்கு வாங்கி, லாபமடைவதற்காகப் பஸ்ஸை அனுப்பி வைப்பார்கள். குழந்தைகளைப் பிடிக்க.

பஸ் நிறைய குழந்தைகளை புளிச்சிப்பம் போல அடைத்துச் செல்வார்கள். மிருகங்களைப்போல வேலை வாங்குவார்கள். வாரச் சம்பளம் அற்பச் சம்பளம்.

காலை ஐந்து மணி முதல் மாலை நான்கு மணி வரை வேலை செய்தால் வாரத்திற்கு ஒரு குழந்தைக்கு 7 ரூபாய் 10 ரூபாய்.... அதிகபட்சம் 15 ரூபாய்தான்.

குழந்தை பிடிப்பவனைப்போலவே, பஸ் கிராமத்திற்குள் நுழைந்தது. சகதியை வாரியடித்தது. டிரைவர் ஹார்னை அழுத்தினார். ஊரெல்லாம் அலறியது.

குழந்தைகள் குதூகலமாக ஓடி வந்து ஏறினர். உட்கார இடம் பிடிக்க – ஜன்னலோரத்தில் இடம்பிடிக்கவென்று முண்டியடித்துக் கொண்டு ஏறினர்.

ஆச்சி நா வரட்டுமா...?

போய்ட்டுவா.... கண்ணு என்றாள். ராஜி தூக்குச் சட்டியுடன் விரைந்தாள். பாட்டியும் பின்னாலேயே சென்றாள்.

சாக்கிரதையா போய்ட்டு வாம்மா.... யார்கூடவும் சண்டை போடாதேம்மா.... பத்திரமா போய்விட்டு வாம்மா. ஆளுக்கு முந்தி எங்கயும் ஓடாதம்மா.... நல்லபடியா போயிட்டு வாம்மா.... நா இருக்குறதே ஒன்னை நம்பித்தான் கண்ணு.... சாக்கிரதையா போய்ட்டு வாம்மா....

வாய் வலிக்காமல் ஓயாமல் சொல்லிக் கொண்டே, பின்னாலேயே வந்தாள். சரியாச்சி.... ஆட்டும் ஆச்சி என்று எந்திரமாக எதிரொலித்தவாறே, முன்னே ஒரு முயலைப்போல் ஓடினாள்

பஸ்சுக்குள் ஏறிக்கொண்டாள். பூமியைப் புண்ணாக்கிக் கொண்டு சகதியில் தடம் பதித்துக்கொண்டு பஸ் கிராமத்தைக் கடந்தது.

பாட்டி வீட்டுக்குத் திரும்பினாள். சகதி காலுக்கடியில் நெளிந்தது, குளிர்ந்தது. பேத்தியை அனுப்பிவிட்டு வீட்டுக்கு வரும்போது அவள் மனதில் ஒரு இழப்பின் சோகம் தோன்றியது. குற்ற உணர்வும் நெஞ்சில் முள்ளாக உறுத்தியது.

பேத்தி-சின்னஞ்சிறுசு.... படிச்சிக்கிட்டு கவலையறியாமல் வளர வேண்டிய வயசு.... இந்த வயசில் சூரியனைப் பாராத உழைப்பு உழைச்சு உயிர் வாழவேண்டிய அவலம்...

வாழ்க்கைன்னாலே போராட்டம்தானே ஒவ்வொரு நாளும் பேராட்டம், வாழ்க்கைங்கிறது எவ்வளவு சிரமமா - போராட்டமா நமக்கு மட்டும் வாய்க்கிறதே..... இதென்ன கொடுமை....

பணமும், வசதியும் வாழ்கிற மகாராஜாமார்கள், எவ்வளவு சந்தோஷமாக-சாதாரணமாக வாழ்கிறார்கள். அவர்கள் வீட்டுக் குழந்தைகளெல்லாம், அன்றலர்ந்த ரோஜாக்களாகத் திரிகிறார்களே... அவர்களின் பளபளப்பான உடைகளும், பள்ளிக்குச் செல்லும் அழகும்.... அவர்களின் குதூகலப் பேச்சின் இனிய குரல்களும்.... உல்லாசமும்...

நம்ம வீட்டுக் குழந்தைகளுக்கு மட்டும் ஏன் இப்படி? தள்ளித் திரிய வேண்டிய பிஞ்சுப் பருவத்தில்கூட வாழ்க்கைப் பிரச்சனைகளைத் சுமந்து திரிய வேண்டியர்வகளாக - மாடாக உழைக்க வேண்டியவர்களாக - வாழ்க்கையின் அற்ப சுகங்களைவிட அனுபவிக்க முடியாதவர்களாக, சே

என்ன பொழப்பு இது.... ஆண்டவனுக்கு எதுக்கு இந்த ஓரவஞ்சம்.

கிழவி சிந்தனைகள் நெஞ்சத்தை அழுத்த, வீட்டுக்குள் நுழைந்த வளுக்கு, என்னவோ அழ வேண்டும்போல மனதெல்லாம் குமுறியது...

நொந்துபோன இருதயத்திற்குள்ளிருந்து பதுங்கிக் கிடந்த நினைவுகள் புலம்பலாக - அழுகையாக வெளிப்பட்டது. அது, நெஞ்சைப் பிளக்கும் சோகத்துடன் கவிதையாக - இலக்கியமாக ஒலித்தது.

தம் வாழக்கையை - அதன் இயக்கத்தை - சிரமத்தை - துயரத்தை - இன்பத்தை நம்பிக்கையை எல்லாம் சுமந்த, அர்த்தங்கள் பொதிந்த எளிய வாசகக் கோர்வைகளாக - இசையெடுத்து, குரலெடுத்துப் பாடும்போது, இயல்பாக, நேர்த்தியான கோர்வைகளாக-கவிதைகளாக - மாறிய அந்தப் புலம்பல் ஓய்ந்து - அவளும் ஓய்ந்து....

ஆண்டவனே எனக்கின்னு இருக்கிற ஒரே பாசத்தை - ஆதரவை - நீ தான் எந்தக் குறைவுமில்லாமெ காப்பாத்தணும் என்ற பிரார்த்தனையுடன் படுத்துக்கொண்டாள்.

கண்களின் ஓரத்தில் நீர் வழிந்தது.

அந்தப் பஸ் விரைந்தது. அதன் வெளிச்சம் ஈரமாகிக் கிடந்த தார்ச்சாலையின் கறுப்பின் மினு மினுப்பைக் காட்டிக்கொண்டே சென்றது. ஈசல்கள் வெளிச்சத்தில் பறந்தன.

பஸ்ஸூக்குள் குழந்தைகள், சீட்டுகளில் நெரிசலாக அமர்ந்திருந்தனர். சீட்டுகளின் இடைவெளிகளிலும் குழந்தைகள் காற்று நுழைய இடமின்றி அடைக்கப்பட்டிருந்தனர். 10 வயதிலிருந்து 16,17 வயசு வரை முழுக்க சிறுவர் - சிறுமிகள்.

அந்த நகரத்தை நெருங்க, இன்னும் ஓரிரு மைல்கள்தான், இருட்டு கருப்பாக அப்பிக் கொண்டிருந்தது. மழை நின்றுவிட்டது. தார்ச்சாலையின் குண்டு குழிக்குள் பஸ் விழுந்து எழும்போதெல்லாம் ஏற்படும் குலுங்கலில், குழந்தைகள் அலறினர், சிரித்தனர், கூச்சலிட்டனர்.

ஓர் ஓடை குறுக்கிட்டது. அது ஒரு கிராமத்தின் கரையாக இருந்தது அந்த ஓடையில் வெள்ளம், பத்து இருபது நாட்களாக, அடை மழை பிடித்த நாளிலிருந்து அந்த ஓடையில் தண்ணீர் ஓடத்தான் செய்யும்.

ரொம்பக் கொஞ்சமாக வேகமின்றி ஓடும்.

ஆனால் இன்று -

தண்ணீர் ரொம்பப் பெரிய வெள்ளமாக ஓடியது.

அக்கரைக்கும் - இக்கரைக்கும் கொள்ளாமல் - செம்மண்ணில் நனைந்த நீராக - பெருத்த சுழல்களும், வேகமும் கொண்ட பெரு வெள்ளமாக ஓடியது. குழந்தைகள் சிரித்தனர். கூச்சலிட்டனர். ஏதோ ஒரு புதிதைக் கண்ட அதிசயத்தில் குதூகலித்தனர்.

ராஜி பயந்தாள். அடேயப்பா, எம்புட்டு பெரிய வெள்ளம், டிரைவர், திகைத்தார். ஓடு பாலம்தான். இறங்கலாமா கூடாதா யோசித்தார்.

ராத்திரி பூராவும் பெய்த மழையைச் சுட்டிக்காட்டி இன்னிக்கு பஸ் எடுக்கவா என்று, தான் தயங்கிதையும் - ஆர்டர்களுக்கு சரக்கு அனுப்பியாகணும். என்ன ஆனாலும் சரி, எவ்வளவு சிரமப்பட்டாலும் சரி, வண்டியை எடுத்துப்போய் ஆள்களை கூட்டிவிட்டு வரணும். இது முதலாளியோட கடுமையான உத்தரவு என்று மேனேஜர் கடுமையுடன் அடித்துக் கூறியதையும் நினைத்துக் கொண்டார் டிரைவர்.

ஓடையில், எந்தக் காலமில்லாத அளவில் ஓடும் வெள்ளத்தின் நிலைமையைப் பார்க்க எழுந்த கிராமத்தினர் சிலர், டிரைவரிடம் எச்சரித்தனர்.

ரொம்ப ஆபத்து. இறங்க வேண்டாம், 150க்கு மேலே குழந்தை இருக்கு. விளையாடக்கூடாது. என்று எச்சரித்தனர்.

ஆனால் டிரைவருக்கு மேனேஜரின் கண்டிப்பு மனசுக்குள் பெரிதாக ஒலித்தது. இப்ப தயங்கினா... வேலை போனாலும் போயிடுமே என்கிற உதைப்பு கண்டக்டருக்கு அதே நிலை.

பஸ்ஸை ஸ்டார்ட் செய்து விட்டார். ஓடைக்குள் ஒரு பாலத்தில் வண்டியை இறக்கினார். ஒரு தடவைக்கு மூன்று தடவை மாரியம்மாளை வணங்கிக்கொண்டார்.

ஹெட்லைட்டின் வெளிச்சம் வெள்ளத்தில் பாய்ந்தது. இழுப்பு அதிக வலுவுள்ளதாக இருந்தது. வெள்ளத்தின் இரைச்சலும், அச்சுறுத்தும்படி பெரிதாகி-மனசில் பீதி ஏற்படுத்தும்படி இருந்தது.

பஸ் உறுமலுடன் நீருக்குள் இறங்கியது. ஓடுபாலம் எது. ஒன்றும் புரியவில்லை. பத்து வருஷமாக இந்தப் பாலத்தில் போய் வந்த அனுபவத்தில்-ஒரு உத்தேசமாக ஓடினார். நீருக்குள், பாலத்தின் பாதையைத் தீர்மானிப்பது, கஷ்டமாகத்தான் இருந்தது.

வண்டி மெதுவாக நகர்ந்தது. நீருக்குள் சன்னஞ் சன்னமாக-குழந்தைகள் பயத்தில் உறைந்து போய்-மயான அமைதியை ஏற்படுத்தி இருந்தனர். வண்டிக்குள் தண்ணீர் புக ஆரம்பித்தது.

சக்கரம், தடக்கென்று ஏதோ ஒரு கிடங்குக்குள் விழுந்ததைப் போலிருந்தது.

டிரைவர் பதறிப்போய், பிரேக் போட்டார்.

வண்டியை பின்னுக்கு எடுக்க முயன்றார். ஊஹூம்.... முடியவில்லை. முதல் தடவை, 2வது 3வது தடவை, முடியவில்லை. டிரைவருக்கு உடலெல்லாம் வியர்த்துக் கொட்டியது.

என்னண்ணே.... என்ன ஆச்சு...

முன்வீல் பாலத்தைக் கடந்து போய் நின்னுக்கிச்சு

லெப்ட்டா, ரைட்டா?

ரைட்தான்.

பேக்லே எடேன்.

முடியலே. வீல் வசமாகப் போய் சிக்கிக்கிச்சு.

அய்யய்யோ, இப்ப என்ன செய்றது? பின்னாடியும், முன்னாடியும் வெள்ளம், பஸ்ஸை ஆழத்துலே கொண்ணாந்து நிப்பாட்டிட்டியே. பஸ்ஸூக்குள்ளேயெல்லாம் தண்ணி வர்ரதே....

நா என்ன செய்ய....?
வண்டிக்குள்ளே தண்ணி ரொம்ப வருதே...

அடக்கடவுளே இப்ப என்ன செய்றது? சண்டாளனுங்க முதலாளிமார் அவுங்க பெண்டாட்டி புள்ளைகளோட ஏர்க்கண்டிஷன்லே படுத்துக்கிடப்பான். அவங்களுக்கு உழைச்ச நம்ம குடும்பங்கள்தான் தெருவிலே நிக்கும். அஞ்சு பைசாகூட குடுக்க மாட்டான். படுபாவி டிரைவரின் பயம், குருட்டுக் கோபமாக வெளிப்பட்டது.

குழந்தைகள், பயத்தால் நெஞ்சடைத்துக் கிடந்தார்கள், நீர் வண்டிக்குள் பெருகப் பெருக பயத்துடன் அழுக ஆரம்பித்தனர். அலறினர். ஒருவரை ஒருவர் கட்டிப் பிடித்துக்கொண்டனர். மரண பீதி அவர்கள் முகத்தில் ஒரு கொடிய நிழலாகப் பதிந்தது.

ஓரிரு வெடிப்பான சிறுவர்கள், பஸ்ஸை விட்டு வெளியில் வெள்ளத்தில் பாய்ந்தனர். பஸ்ஸூக்குள் கிடந்து சாவதைவிட, வெள்ளத்தில் போராடிச் சாகலாமே என்கிற அசுரத் துணிச்சல், மரண எல்லையில் எந்த உயிர்ப் பிராணிக்கும் ஏற்படும் பேராவேசம்.

டிரைவர், கண்டக்டரைத் திட்டினான்.

எலே... எவனையும் வெளியே விடாதே. போக விடாதேடா, தடிமாடு

ஏன்

பஸ்ஸூக்குள்ளே லோடு குறைஞ்சா.... வெள்ளம் பஸ்ஸையும் இழுத்துட்டு ஓட ஆரம்பிக்கும்.... நாமும் அரோகராதான். முட்டாள் முண்டம்.

போகாதீங்க யாரும் போகாதீங்க. போனீங்கன்னா... வெள்ளத்திலே செத்து மிதந்து போவீக...

போகாதீக என்ற அபாயக் குரலே, அவர்களைப் போக வைத்தது. தடுத்த கண்டக்டரை அடித்துத் தள்ளிவிட்டு, ஒவ்வொரு குழந்தையும் சாவின் விளிம்பில் விளையும் அபாரத் துணிச்சலில் நீருக்குள் - உயிர்ப்பசி கொண்ட வெள்ளத்தில் பாய்ந்தனர்.

அவர்கள் இந்த வயதில் எத்தனை சண்டை போட வேண்டியிருக்கிறது. உயிர் வளர்க்க- வயிறு வளர்க்க-பிழைப்பு இடத்தில் சண்டைகள். வாழ்க்கையுடன் இந்தப் பிஞ்சுகளின் மல்லுக்கட்டு, இந்தச் சமுதாயத்தின் புல்லுருவிகளுடன் போர் நடத்த வேண்டிய நிலைமை.

இதோ... அதன் தொடர்ச்சியாக, உயிருக்காக வெள்ளத்துடன் மல்லுக்கட்டு, உக்ரமமான மல்லுக்கட்டு, மனித இனமே வெட்கப்பட்டுத் தலை கவிழச் செய்யும் மல்லுக்கட்டு.

ராஜியும் நீருக்குள் குதித்தாள். குதிக்கும்போது, பஸ் தலையில் அடித்துவிட்டது. யாருடைய கையையோ பற்றியிருந்தாள். நீருக்குள் விழவும் அந்தக் கையும் ஒரு வேகத்துடன் உருவிக் கொண்டது.

மரணப் பயத்தில் குழந்தைகளின் அலறல், கூச்சல், ஐய்யோ ஐயய்யோ என்ற இரும்பையும் உருக்கும் இளசுகளின் சோகக் குரல்கள்.

ராஜி.....ஏய் விஜயா...... ஏய் ரெட்டை வால்..... ஏய் குட்டை ஏய் பாஸ்கர் ஏய் மாலக்கா.

ஒருவரையொருவர் உதவிக்கு அழைத்துக்கொள்ள யாருமே யாருக்கும் உதவ முடியாமல்-தன்னைத்தானே காப்பாற்றிக்கொள்ள தெரியமால் - இருட்டில் கூக்குரலிட...

உயிர்ப்பசி கொண்ட வெறியுடன், அசுர வேகத்தில் வெள்ளம் அவர்களை இழுத்துச் செல்ல....

ராஜிக்கு நீந்தத் தெரியும். ஆனால் நீந்த முடியவில்லை. வீசியெறியப்பட்ட வேகத்தில் வெள்ளம் இழுக்கிறது. எங்கோ புதை குழிக்குள் ஆழ்வதைப் போன்ற பீதியில் மனசு மருண்டு, நீந்திக் கரை வராமல் தவிக்கிறாள்.

ஏதோ ஒரு வேலி மரம் உருண்டு வரும் ராஜியை தடுக்கிறது. ஆவலுடன் பிடித்துக் கொள்ள நீருக்குள் கைகளால் துளாவ வேலி முட்கள் கையைக் கீற-வெள்ளம் அதற்குள் வேறு எங்கோ உருட்டி எறிய...

ஆச்சி ஐய்யோ ஆச்சி என்று உரத்த குரலில் கூச்சலிடுகிறாள். பயத்தில் நனைந்துபோன மனது.

நீர் புரட்டும்போதெல்லாம் மடக் மடக்கென்று தண்ணீரைக் குடித்து விடுகிறாள்.

ஒடு பாலத்தை விட்டு, அவர்களை ரொம்பத் தூரம் வெள்ளம் இழுத்துக் கொண்டு வந்துவிட்டது.

ராஜியின் கண்களுக்கு, தற்செயலாக அது தெரிந்துவிட்டது.

அதோ, ஓடையின் வடகரையில் ஓர் ஆலமரம்! அதன் ஒரு கிளை சற்று சாய்ந்து ஓடையின் மேல் நீண்டிருந்தது. நீரில்லாத காலங்களில் அந்தக் கிளை எட்டா உயரம் இன்று வெள்ளம் அதன் மட்டத்திற்குச் செல்கிறது. ராஜி பார்த்துக்கொண்டாள்.

எப்படியாவது அதைப் பிடித்துவிட வேண்டும். ஆனால் வெள்ளம் அந்த இடத்தில் எதற்கு சாய்த்து வளைவாக இழுக்கிறது

ஒரு அசுர பலத்துடன் உடலை தெளித்தாள். கையையும், கலையும், தத்தக்கா புத்தக்கா வென்ற உதைக்கிறாள். நீருடன் மல்லுக்கட்டி நீந்தப் பார்க்கிறாள். மரணத்திலிருந்து தப்பித்து, வாழ்வைப் பற்றிக்கொள்ள கிடைக்கும் கடைசி வாய்ப்பைப் பற்றிக் கொள்ளும் பேராவலுடன் நீந்துகிறாள்.

நீருடன் மல்லுக்கட்டி சோர்ந்து போய்விட்ட உடல், ஒத்துழைக்க மறுக்கிறது. வாழத் துடிக்கும் மனம், வாழ்க்கையின் உயிரான அழைப்பு முயற்சிக்கிறாள் நீந்துகிறாள்.

ராஜி அந்தக் கிளையைப் பற்றி விட்டாள். எப்படியாவது கரைக்குப் போய்விடலாம். அங்கு ஏற்கனவே ஒருத்தியிருக்கிறாள். மாலக்கா.....

ஒருவருக்கொருவர் பேசிக்கொள்ளக்கூட முடியவில்லை. அத்தனைச் சோர்வு. மயங்கிக் கொண்டிருக்கும் நிலை.

ராஜி கிளையைப் பற்றி ஏறப்போனாள். மாலக்கா.... ஹீனக் குரலில் சொன்னாள் போகாதே.. மேலே பாம்பு இருக்கு..

ஐயோ அவள் மனசு அதிர்ந்தது.

விடியும் வரை இப்படியே கிளைகளைப் பிடித்துக்கொண்டே நீருக்குள் கிடக்கவா? முடியுமா? ஏற்கனவே சோர்ந்த கைகள். மரத்துப் போகாதா? மயங்கிவிட மாட்டோமா...? மனசுக்குள் பயத்தின் அலைகள்.

ஆனாலும் வேறு வழியில்லை. விடியும்வரை? விடியுமா? இவர்களுக்கு விடிவா? விடியத்தான் செய்யும்... விடிஞ்சுதான் ஆகணும்

விடிந்தால்... ஆட்கள் வருவார்கள். குழந்தைகளைக் காப்பாற்றுவார்கள். செத்து ஒதுங்கிய உடல்களைத் தூக்குவார்கள். ஆட்கள் _டுமா வருவார்கள். நாடே இங்கு வரும். உலகக் குழந்தைகள் ஆண்டல்லவா உலகமே இதுபற்றி ரொம்பப் பேசும். வெட்கப்பட வேண்டும் என்றெல்லாம் விஸ்தாரமாகப் பேசும். ஆனால், குழந்தைகளையும் இரக்கமின்றிச் சுரண்டும் அரக்கத்தனம் மட்டும் இன்னும் கொஞ்ச காலம் வாழும்.

விடிந்தது. ஒரு பாலத்தின் கரையில் மனிதக் கூட்டம். நீருக்குள் பாயும் மனிதர்கள். குழந்தைகளை - சடலங்களை - தேடும் மனிதர்கள்.

கரையில் பெண்களின் ஒப்பாரிகள், அழுகைகள். வரிசையாகக் கிடத்தப்பட்டிருக்கும். பிரேதங்கள் - பிஞ்சுகளின் பிரேதங்கள்.

பார்த்த ஒவ்வொர் உள்ளமும் இந்தப் பரிதாபம் கண்டு கசந்து உருகுகிறது.

பரிமளம் பாட்டிக்கும் செய்தி தெரிந்தது. ஐயய்யோ பாதகத்தி, என்னை விட்டுவிட்டுப் போய்ட்டீயா? என்று நெஞ்சிலும், தலையிலும் அடித்துக்கொண்டே இந்தக் கிராமத்துக்கு அலையக்குலைய வந்தாள்.

நீருக்குள் புதையுண்டு கிடக்கும் பஸ்ஸைப் பார்த்தாள். கரையில் கிடக்கும் பிரேதங்களைப் பார்த்தாள். ஒரு ராட்சஸ வேகத்தில் அவள் விழிகள் பிரேதங்களைப் பார்த்தது. அவளுக்கு ஒன்றுமே பிடிக்கவில்லை. கண்கள் இருண்டன. இந்தக் கோரச் சம்பவத்தின் கொடூரப் பாதிப்பைத் தாங்கமுடியாமல் விழுந்துவிட்டாள். தனது பற்றுக்கோல் இற்றுவிட்டதாக எண்ணி... அவளும் செத்துப் போனாள்.

அங்கே, ஆலமரத்தைப் பற்றி நீருக்குள் அரைப்பிணமாக மிதக்கும் ராஜிக்கும் தனது வாழ்வின் ஆதாரப்பற்றுக்கோல் வெள்ளத்தில் போய்விட்டது இன்னும் தெரியாது. பாவம், அவள் இன்னும் வாழ்வுடன் மல்லுக்கட்டுவாள்.

0-0-0

# 10. நிரந்தரமற்ற நிழல்

-நிர்மலா பெருமாள்

ரயில் கிளம்புவதற்கு பத்தே நிமிடங்கள்தான்

இன்னும் டிக்கெட் எடுக்கவில்லை.

ஒரு டிக்கெட் எடுக்கவா? ரெண்டு டிக்கட் எடுக்கவா?

ஒரு டிக்கெட்தான் என்பதை அவளால் ஒப்புக் கொள்ளவே முடியவில்லை.

ரெண்டு டிக்கெட் எடுத்திடலாம் வந்திருவார்தானே வராம என்ன?

அதிகாலை ஆறுமணிக்கு முன்னமே வீட்டிலிருந்து கிளம்பி, ரோட்டில் வந்து, டாக்சிக்காகக் காத்திருக்கும்போதே... ஏற்கனவே கனத்துக் கொண்டிருந்த ராதிகா வின் மனம் மேலும காயப்பட்டு ஓவென ஓலமிடத் தொடங்கியது.

கூட வராவிட்டாலும் கூட, அக்கரையோடு கூட்டிக்கொண்டு போய் விடவாவது காரை எடுத்துக்கொண்டு வரமாட்டாரா என எதிர்பார்த்தாள் அதனால், வந்து நின்ற ஓரிரு வாடகை வண்டிகளையும் கூட, வேண்டாமென்று சைகை காட்டி விட்டு, வெறுமனே நின்றிருந்தாள்.

வாகனங்கள் மட்டுமே ஓடிக்கொண்டிருந்த அந்த வளாகத்தில் அவள்வாய் விட்டு அழுதாள்

அழுது அதிக நாட்கள் ஆகிவிட்டனவே அதனால்தானே அடக்க முடியாத அருவி அவள் கன்னங்களில் உடைப்பெடுத்துக் கொண்டு ஓடியது.

வெளியூர் பயணத்திற்கு, துணைக்கு வருவதாக வாக்குக் கொடுத்து பின் இரவுக்குள் மறு உறுதிப் படுத்துகிறேன்..... என்று சொல்லிச் சென்றவனிடமிருந்து இன்னமும் எந்த தகவலும் இல்லை. என்றாலும் நேற்றே நேராக இரயில் நியைத்துக்கு வந்து விடுவதாக சொல்லியிருந்ததால்.... எதற்கும் அங்கு போய்க் காத்திருக்கலாம்... என்ற ஆறுதலோடு, அடுத்து வந்த வண்டியை நிறத்தி ஏறிச் சென்றாள்.

ஏழு நாற்பத்து ஐந்துக்கு எக்ஸ்பிரஸ் ரயில் ஆறு முப்பதுக்குத்தான் டிக்கெட் விற்கும் கவுண்டரை திறந்து விட்டார்கள். வார நாள் ஆதலால் அதிக கூட்டம் இல்லை.

ராதிகா கண்ண னின் வருகைக்காக கால் கடுக்க இடுப்பு நோக நின்றுகொண்டிருந்தாள் அங்குள்ள வசதியான இருக்கைகளிலே உட்காரக் கூட அவளு.க்குப் பொறுமை இல்லை. நுழைவாயிலுக்கும் பொது தொலைபேசிக் கூண்டுக்குமாக அடிக்கொருதரம் நடந்து கொண்டிருந்தாள்.

ரெண்டு டிக்கெட் எடுத்திடலாமா? கடைசி வரைக்கும் வர்லைன்னா? திருப்பித் தர முடியாது. யாரையாவது தேடி விக்கனும் ஆ போனா போகட்டும் முப்பது ரிங்கட்.

இன்னும் கொஞ்ச நேரம் வரட்டும். இல்லே பயணத்தையேரத்து பண்ணிட வேண்டியதான் ரத்து செய்திட்டு? எங்கே போறது? திரும்பி போனா, வீட்ல என்ன சொல்றது?

பலவாறான குழப்பங்களோடு பரிதவித்துக் கொண்டிருந்தாள்.

தூர பயணத்தில்.... தோளில் சாய்ந்து..... தொட்டுக் கொண்டும் ஒட்டிக்கொண்டும்..... உறக்கத்தின் கிறக்கத்தில் ஒன்றித்த சுகத்தின் ஒய்யாரத்தில்....

எண்ண எண்ண இனிக்கும் வண்ண வண்ணக் கனவுகளையும் கற்பனைகளையும் ஏந்தி, ஏங்கிக் கிடக்க, இவள் இதயத்தில் எல்லையற்ற ஆசைகளை ஏற்றி விட்டிருந்தவன் வரவே இல்லை.

ராதிகா துடித்தாள் இன்னுயிரே போவது போன்ற இம்சையில் இங்கு மங்குமாக, இமைகள் படபடக்க இன்னலுற்றுத் தவித்தாள்.

இன்னும் பத்தே நிமிடங்கள்.... பட்டர்வொர்த் செல்லும் ரயில் கிளம்புவதற்கு

ரயிலை போகவிட்டு இங்கேயே உட்கார்ந்திடலாம்... பைத்தியம் மாதிரி...

எவ்வளவு தூரம் எத்தனை மணிநேரம் நான் தனியா பயணம் போகனுமா?

அப்படி நினைக்கவே பிடிக்கவில்லை அவளுக்கு கண்ணன் வரணும் வரணும் வேண்டினாள்.

நீங்க வரலைன்னா, நான் தனியா போகமாட்டேன் நீங்க கூட இல்லாம, எனக்கு ஒரு விழா, விஷேசம் ஒன்னும் வேணாம்.

கண்ணனோடு கண்ணோடு கலந்து விட்ட பின்பு, அவன் இல்லாமல், தனியாக எங்கேயும் செல்லப் பிடிக்கவில்லை ராதிகாவுக்கு தன்னோடு அவன் சேர்ந்திருக்க வேண்டுமென்றே விரும்பினாள்.

நாடு தழுவிய நிலையில் நான்கு மொழிகளில்..... இலக்கியப் போட்டியின் வரலாற்றிலேயே முதன் முதலாக அதிகத் தொகையான ஐயாயிரம் ரிங்கட் அன்பளிப்பாகக் கொடுத்து வெற்றி பெற்ற

எழுத்தாளர்களைக் கௌரவிக்கும் விழா ஒன்றுக்கு பினாங்கு மாநில அரசு ஏற்பாடு செய்திருந்த அந்த நிகழ்வுக்காகத் திட்டம் போட்ட பயணம்தான்.

நான் போகல பரிசுத் தொகையை போஸ்ட்ல அனுப்பிடுவாங்க.

அன்புக்குரியவன் அருகில் இல்லாத பல இன மக்கள் முன்னிலையில் நடக்கும் அந்த பிரம்மாண்டமான விழா, அவளுக்குப் பெரிதாகத் தெரியவில்லை.

சே சே உன்னை கௌரவிக்கிற ஒரு சிறப்பான நிகழ்ச்சி என்னாலே நீ போகாம இருக்க வேணாம் நான் வர்றேன் கண்டிப்பா வர்றேன் அழாதே

கை பிடித்து நம்பிக்கையூட்டிச் சென்றவன்... கைவிடுவானா இப்படி?

வீட்டிலிருந்து யாரையும் துணைக்குக் கூட்டிச் சென்றிருக்கலாம்...... அவள் பரிசு பெறுவதை அவர்கள் பார்த்து சந்தோஷப் படுவார்கள்.

ஆனால் வேண்டியவனோடு சேர்ந்து போக வேண்டுமென்று... வேண்டுமென்றேதானே, யாரும் கூட வரவேண்டாமென்று வேண்டிக்கொண்டு, வேண்டிய ஏற்பாட்டைச் செய்தாள்.

அந்த சாமாத்தியத்துக்கு சதி நேர்ந்து விட்டதோ....

எல்லாம் இழந்த தனி மரமாக ஒதுக்கப்பட்டு, ஒடுங்கி, ஒடிந்து நிற்கிறாளே

தனிமை தனிமை தனிமை வாழ்நாளெல்லாம் வெறுமைதானா? தனிமையின் கொடுமைக்கு ஒரு முடிவே இல்லையா?

ஆயிரம் பேர் முன்னே, அக்னி வலம் வந்தும்..... அத்தனையும் அற்பமாகி, பொசுங்கிப் போலியாகிப்போன, அந்தரங்க அரங்கின் சுந்தர சுகங்கள்

சூடாத முல்லையானாலும், சுடுகின்ற நிலவாய் ஜொலித்தவள்.

சுட்டு விரலாவது தொட்டு விடத் துடித்த தோழர்களையெல்லாம் வெட்டி விட்டு.... விரட்டி விட்டு..... கட்டுப்பாட்டுக்குள் பூட்டிக் கிடந்த கடிந்த மனம்... இன்று கனிந்த மனமாய்.... கண்ண னைக் கண்டதால்... மாறுதல் வேண்டி ஆறுதல் தேடியோ...

வயதையும் வரம்பையும் மீறி, ஒரு வாய்ப்பில் ஏற்பட்ட ஈர்ப்பில், தொலைந்து போன இதயம் அவனுக்கும் அதே நிலை அதனால், அட்டியில்லையென்று ஒட்டிக் கொண்டவர்கள்.

கடைசி நிமிடம் வரை காத்திருந்தாள் கைத் தொலை பேசிக்குப் பத்து தடவைக்கு மேல் அழைத்து விட்டாள் மணி அடித்துக்கொண்டே இருக்கிறது.... ஆனால், மறுபதிலே இல்லையே ஏன்? தொலைபேசி கோளாறா இல்லை தொட்டவனே கோளாறா....? சதியா இல்லை சாகசமா?

சரியாக எதையும் தீர்மானிக்க முடியவில்லை.

கூட வரத்தான் சாத்தியப் படவில்லை. கூட்டி வந்து வழியனுப்பலாம் அல்லவா? அல்லது ஓடி வந்து ஒரு வார்த்தை இல்லை ஒரு தொலைபேசி அழைப்பு? ஒன்றுமே இல்லை ஏன்?

தகுதிக்கு மீறி எண்ணமும் ஏக்கமும் தேவையா உனக்கு?

கன்னங்க கன்னமாக மாறி, மாறி அவளை யாரோ அல்ல கண்ணனே அறைந்து, அறைந்து கேட்பது போல உணர்ந்து, அதிர்ந்து அவமானப்பட்டுப் போனாள்!.

ஒரு கணம் ஒரு யுமகாக, ஒரு கணம் சிந்தித்தாள்!.

"இத்தனை அலட்சியம் உள்ள ஒரு ஆளுக்காக, அத்தனை சிறப்பு மிக்க விழாவை நான் புறக்கணிக்கனுமா?"

மறுகணமே, மின்னல் வேகத்தில் ஓடிப்போய் ஒரு டிக்கெட் வாங்கினாள்! ஓரிரு நிமிடங்களில் ஓடிப் போய் ஏறிவிட்டாள்!.

'ராதிகா'வின் வருகைக்காகவே காத்திருந்தது போல நின்றிருந்த ரயில், அவள் வந்து ஏறியவுடனேயே நகரத் தொடங்கியது!.

ரயில்தான்! நகர்ந்தது ரணப்பட்ட அவள் மனம் மட்டும் நகரவே இல்லை. பாழாய்ப்போன அதுதான் இன்னும் பாடாய்ப்படுகிறதே!.

ஒரு வேளை அவர் தாமதமாக வந்திருக்கலாம்!. வந்திருப்பாரோ?

கன்னத்தில்... கற்பனையில் அறைவாங்கி, நிஜமாகவே அவமான உணர்ச்சி தாக்கிய பிறகும் கூட அப்படி ஒரு நப்பாசை! அற்பாசை!.

அற்ப ஆசைக்காக இந்த மனம், இப்படியெல்லாம் அவஸ்தைபட வேண்டுமா? வேண்டாம் அப்படி பக்குவப் பட்டு மனம் தீர்க்கமடைந்தால்தான் வேதனைகளே இருக்காதே. 'வேண்டும்'! என்றுதானே மீண்டும் விரும்புகிறது.

நாட்டின் துரித வளர்ச்சிகளில் ஒன்றான துரித ரயில் சேவையில் துன்பங்களை மறந்து இன்பமாக பயணிக்க... தொலைக் காட்சி, தொலைபேசி, உணவகம், குளிர் சாதன வசதிகளோடு கூடிய அந்த செகன்ட் கிளாஸ் கோச் வெறிச்சோடி...., இருக்கைகள் பல காலியாகக் கிடந்தன..... வெறிச்சோடிய அவள் இதயத்தைப் போலவே

அவளுக்கு அது வசதியாக இருந்தது

அழுவதற்கு

இருவராக உட்கார்ந்திருக்க வேண்டிய இடத்தில் அவள் ஒருத்தி மட்டும்!.

இதயத்தைக் கிள்ளியவன்.... அந்த இருக்கையில்.... அவள் பக்கத்தில் இல்லையே.

அழுதாள்! அழுதாள்! அப்படி அழுதாள்!

டிக்கெட் பரிசோதகர் வந்து தோளைத்தட்டிக்கூப்பிடுவது கூட தெரியாமல், உடைப்பெடுத்தக் கண்ணீர் உருண்டோடுவதையும் துடைக்காமல் உட்கார்ந்திருந்தாள்...

பரிசோதகர், இப்படிப்பட்ட பல கேஸ்களை பயணங்களின் போது கண்டு பழகிப் போனவராக இருந்திருக்கலாம்!...... அதனால், ஒன்றும் அலட்டிக்கொள்ளாமல், அவர் கடமையை முடித்துப் போய்க் கொண்டிருந்தார்.

அவள் உருகி வடித்த கண்ணீரையெல்லாம்.... ஒற்றி எடுத்த திசு பேப்பர்களும் நனைந்து, நசிந்து தீர்ந்து விட்டன.

வண்ண வண்ணமாய்ப் பூத்திருந்த எண்ணக் கனவுகளையெல்லாம் கலைந்து நிலைகுலைந்து போன ஏமாற்றத் திலிருந்து மீள முடியாமல் இன்னமும் அழுதுகொண்டே இருந்தாள்.

பெண்ணுக்குள்ளே.... எண்ணங்களை விதைத்து, ஏக்கங்களை வளர்த்து, ஆசைகளைத் தூவி விட்டு, பின் அமைதியாக, அலச்சியமாக இருந்து விடுவதே ஆண்களின் குணம்!.

ஆசை வைத்து விட்டு, பின் அவதி படக் கூடாது!.

அது நன்றாகவே தெரிந்திருந்தும் கூட, அதில் விழுந்து விடாமல், விழிப்பாக இருக்கத் தெரியாமல், வழி மாறி, விழி பிதுங்கி, வழியும் கண்ணீரில் கரைந்து உருகுவதோ பெண்களின் மனம்!?.

பல இன கலைஞர்கள் வழங்கிய கண்ணுக்கும் கருத்துக்கும் விருந்தாக அமைந்திருந்த நடனங்கள், வகை வகையான உணவுகளடங்கிய விருந்துபசரிப்போடு கூடிய பரிசளிப்பு விழாவில், இறுதிவரை இருந்து பார்த்து, பரஸ்பரம் எல்லோருடனும் கலந்து பேசி மகிழ்ந்திருக்க வேண்டிய மனநிலையில் இல்லை.

பரிசை மட்டும் பெற்றுக்கொண்டு பறந்தோடி வந்து விட்டாள் ராதிகா

உள்ளூர் விமான முனையத்தில் வந்து இறங்கிய உடனே, முதல் வேலையாக ‘கண்ண’ னுக்குத்தான் போன் செய்தாள்!.

என்னாச்சி? ஏன் வரல? ஏன் எந்தத் தகவலும் இல்ல?

கூட்டாளிங்க கூட போனே.... ஓவரா குடிக்க வச்சிட்டானுங்க... ஒன்னுமே தெரியல.

சாவதனமாய், சாதாரணமாய் வந்த அந்த பதில், அவள் இதயத்தில் சாட்டையடியாய் விழுந்தது!.

நான் துடிச்சிக்கிட்டிருந்திருக்கேன்..... நீங்க குடிச்சிகிட்டுருந்திருக்கீங்க!...

மாபெரும் விழாவில் மாநில முதலமைச்சரிடமிருந்து பாராட்டும் பரிசும் பெற்ற மகிழ்ச்சியையே மறந்து விட்ட 'ராதிகா' வை, மகா பாரமாய்த் தாக்கிக் கொண்டிருந்தது.... 'கண்ணனால்' ஏற்பட்ட பாதிப்பும் பரிதவிப்பும்!.

ராதிகாவுக்கு இப்போது பாதிப்பும் இல்லை. பரிதவிப்பும் இல்லை பக்குவப்படுத்திக்கொண்டாள்!. தனக்குக் கிடைத்த பரிசு-பாராட்டு-கௌரவம் எல்லாம், பெறற்கரிய பேறு! என, பூரிப்பில் ஆழந்து கொண்டிருக்கிறாள்...

பொய்யானவனை-போலியானவனை-வாழ்க்கைக்கு உதவாதவனைத் தூக்கி எறிந்து விட்டாள்.

தனிமைக்கு! தவிப்புக்கு!

துணை! அன்பு! ஆதரவு!

இது இது என்றெல்லாம் அலட்டிக் கொள்வதே இல்லை!. அறிவோடும் மன அடக்கத்தோடும் அவள் ஆற்ற வேண்டிய கடமைகளில் ஆழ்ந்து போகிறாள்!.

நிரந்தரமற்ற நிழலோடு ஒட்டி நிற்க நினைக்கவில்லை!.

"கரம் பிடிப்பேன்..... கண்ணீரைத் துடைப்பேன்.... கடைசிவரை துணையிருப்பேன்....!."

ஆரம்ப ஆசையின் உணர்ச்சி வேகத்தில், உதிர்கின்ற கவர்ச்சி வார்த்தைகளோடு, கண்ணா மூச்சி காட்டி விட்டு, காணமால் போய் விடுகின்ற கயமைத் தனங்களைக் கண்டு கொண்டு, வாழ்க்கையை வென்று காட்ட வேண்டும் என்ற விவேகமான முடிவை வேகமாக எடுத்து விட்டாள்!.

0-0-0

## 11. முகம்

**- மாத்தளை சோமு**

குளியலறைக் கண்ணாடியில் முகத்தைப் பார்த்தான் நித்தியானந்தன் என்ற நித்தி. அவனுடைய முகம்தான் கண்ணாடியில் தெரிந்தது. அது அவன் முகம்தானா? தெரிவதைக் காட்டுவது தானே கண்ணாடி. அது அவன் முகமே தான்... உள்ளத்தைதான் கண்ணாடி காட்டும்; காட்டுகிறது. இந்த உலகில் உள்ளதை உள்ளபடியே காட்டுவது இந்தக் கண்ணாடி மட்டும்தான்... வேறு யார் இப்படி இருக்கின்றார்கள்? எங்கு பார்த்தாலும் பொய் புகழ்ச்சி... முகத்துக்கு முன்னே ஒரு பேச்சு.. பின்னே ஒரு பேச்சு... காரியம் ஆக கை குலுக்கல்... பதவிக்காக ஒரு பாராட்டு... சலுகைக்காக முகஸ்துதி, எல்லாவற்றையும் இள வயதிலேயே பார்த்துட்டான். எவரையும் நம்பமுடியவில்லை. ஆனால் இந்தக் கண்ணாடியை அவன் நம்புகின்றான். அது பொய் சொல்லாது.

மறுபடியும் அந்தக் கண்ணாடியைப் பார்த்தான். அவன். அவன் முகம்தான் அது. பரமலிங்கம் நித்தியானந்தன் முகம் அப்படித்தான் இருக்கும். சுருள் சுருளான முடி. அது பரம்பரை வழிப் பயணத்தின் அடையாளம் என்கிறார்கள். அப்பாவுக்கும் தாத்தாவுக்கும் கூட சுருள் முடியாம். ஆனால் அவன் அந்த சுருள் முடிக்காக எதையும் செய்யவில்லை. எந்த சலூனுக்கும் போகவில்லை. எந்தக் கிரீடமும் பூசவில்லை. அது தானாகவே சுருண்ட முடி... ஆனால் அதற்கே ஒரு பாராட்டு விரிந்தது. ஆண், பெண், நண்பர், உறவினர் எனப் பலரையும் காந்தமாய் கவர்ந்த முடி. இன்னமும் திருமணம் செய்யாமல் பேங்கில் தனி மரமாய் இருக்கும் மிஸ் சுஜாதா அத்த நாயக்காவின் கண் சிமிட்டலைக் கொண்டு வந்த முடி... அவள் லேசில் எந்த ஆணையும் ஏறெடுத்துப் பார்க்கமாட்டாள். அவளே இந்த முடியில் மயங்கி

அவனோடு வலிய வலிய பேசினாள் என்றால்? அதுவெல்லாம் அங்கு கொழும்பில் நடந்து முடிந்த காட்சிகள். ஆனால் இங்கு ஆஸ்திரேலியாவில் சிட்னி நகரில் தலை முடியில் வித விதமாய் நிறம் பூசுவதும், கை வண்ணம் காட்டுவதும் பெரிய கலை. இதில் இவனுடைய கறுப்பான இந்த சுருள் முடியை கண்டு கொள்பவர் யார்? ஆனால் சிலர் இவனைப் பார்க்கும் போதெல்லாம் "ஆர் யூ ஃபிஜி?" என்று கேட்பார்கள். பிறகுதான் புரிந்தது ஃபிஜி நாட்டவர்களுக்கும் சுருள் சுருளாக முடி இருக்குமாம். அதனால் அவனை 'ஃபிஜி காரன்' என்று கேட்டிருக்க வேண்டும்.

சுருள் சுருளாக முடிக்கு கீழே பரந்த நெற்றி, நெற்றியில் கோடுகள் இல்லை. தீர்க்கமானப் பார்வை கொண்ட கண்கள். அழகான புருவங்கள்.... எடுப்பான மூக்கு..... சிலருக்கு மூக்கு குடமிளகாய் போலிருக்கும். சிலருகு ஜப்பான்காரன் போல் சப்பையாக இருக்கும். அவனுக்கோ எடுப்பான ஆண்மையைப் பெருக்கிக் காட்டும் மூக்கு... இது பிறக்கும்போது படைக்கப்படவில்லை. பாட்டியின் கைகள்தான் படைத்தன. பாட்டிதான் குழந்தையில் குளிக்க வைத்தபோது மூக்கை நீவி நீவி இப்படி செய்தாளாம். அளவாய் உப்பிய கன்னங்கள்.... பொருத்தமான காது.... மொத்தத்தில் இவனைப் படைக்கும்போது பிரமன் சந்தோஷத்தில் இருந்திருக்க வேண்டும்.

இத்தனை சகல பொருத்தங்கள் கொண்ட இந்த முகம் தான், கொழும்பில் அவன் மானேஜராய் இருந்த போதும் - ஒரு மானேஜர் தமிழனா என்ற பிற்போக்கு வாதத்தில் எழுப்பிய போராட்டங்களில் - வெற்றியே தேடிக்கொடுத்தது. இந்த முகம் அவனுக்கு ஒரு வகையில் கவசம். முதன் முதலில் 'பேங்க் இண்டர் வியூ'விற்குப் போனபோது

நூற்றுக்கணக்கானவர்களைப் பின் தள்ளிவிட்டு வேலையைக் கொடுத்தது இந்த முகம் தான்... அவன் பெரிய அழகன்; அல்லன் கறுப்பையும் எட்டாத வெள்ளையையும் நெருங்காத மாநிறம்.... ஆனால் அந்த முகத்தில் ஒரு வசீகரம் ஏவுகணையாக இருந்தது.

அப்படித்தான் கொழும்பில் இருந்தபோது நம்பினான். நம்புவது போல்தான் அவன் வாழ்க்கையில் பல சம்பவங்கள் நடந்தன. அதனை பெண் பார்க்கபோன போது நேரில் பார்த்தான் அவன்.

புரோக்கரின் வற்புறுத்தலில் வெள்ளவத்தைக்கு ஒரு பெண் பார்க்கப் போனான். பெண் வீட்டைப் பார்த்ததுமே அவன் பயந்து திரும்பிப் போக முயன்றபோது அந்த புரோக்கரின் வார்த்தைகள் அவனைத் தடுத்து நிறுத்தின.

“தம்பி நான் புரோக்கர் தான். எத்தனையோ பேருக்கு பொண்ணு பார்த்து மாப்பிள்ளை பார்த்து கல்யாணம் நடத்தியிருக்கேன். வேற யாரையும் இந்த வீட்டுக்கு நான் கூட்டிவரவே இல்லை. உங்கள உங்க முகத்துக்காகத்தான் கூட்டிகிட்டு வந்தேன். நீங்க எதுக்கும் யோசிக்க வேணாம். பெண் வீடு உசந்த கைதான். ஆனா அந்த கை இந்த முகத்த பார்த்தா மௌனமாயிரும். மௌனம்னா சம்மதம் தானே?”

மந்திர மாயம் போட்டது போல் மௌனமாக நித்தி அந்த இரட்டை தட்டு பங்களாவிற்குள் காலடியை வைத்தான்.

அது கொழும்பில் செல்வம் கொண்டவர்கள் செருக்குடனும், கடல் அலைக்காற்று தாலாட்ட பணத்தில் மிதப்பவர்கள் வாழ்கிற தெரு... அந்தத் தெருவில் வாடகைக்குகூட வீடு பார்க்க முடியாதவன் நித்தி.. பெண் வீட்டாருக்கு நித்தியின் முழுப் புராணமும் அவன் பேங்கில் வாங்குகிற மாதச் சம்பளம் எவ்வளவு என்பதும், அது தங்களின் ஒரு மணி நேர வருமானம் என்பதும் தெரியும்.

லட்சக்கணக்கில் ஏற்றுமதி - இறக்குமதி செய்கிற எத்தனையோ மாப்பிள்ளைகள் தாலி கட்டப் போட்டி போட்டும் ஒரே மகள், 'வியாபாரம் செய்யும் மாப்பிள்ளையே வேண்டாம்' என்று சொன்ன பிறகு தான், கைநிறைய சம்பளத்தோடு கௌவரமான தொழில் செய்கிற மாப்பிள்ளையைத் தேடுகிற இந்த வேட்டையே தொடங்கியது. அதில் இரண்டு நாட்களுக்கு முன்னர் ஒரு எம்.பி.பி.எஸ். டாக்டர் வந்து போனார். இப்போது நித்தி.

பெண்ணை அவனுக்குப் பிடித்து விட்டது. அவனைப் பொறுத்த வரையில் அது ஒருகேள்வியே அல்ல அவனை அவர்களுக்குப் பிடிக்க வேண்டும்....? ஆனால் அவர்களுக்குப் பார்த்த மாத்திரத்தில் அவனைப் பிடித்துவிட்டது. அது எப்படி என்பது அவனுக்குப் புரியவே இல்லை. புரோக்கர் சொன்னது போல் அவன் முகம் செய்த 'மாயாஜாலமாக' இருக்குமோ! அப்படித்தான் அவன் நினைத்துக்கொண்டான்.

ஒரு நல்ல நாளில் கொழும்பில் கோயிலில் திருமணமும் ஐந்து நட்சத்திர ஹோட்டலில் வரவேற்பும் நடந்தது. திருமணத்திற்கு பெண் வீட்டுக்காரர்களே அதிகமாய் வந்திருந்தனர் என்ற போதும் எல்லாவற்றையும் அவனைக் கேட்டுத்தான் செய்தார் பெண்ணுடைய அப்பா, பொருளியலில் அவன் பள்ளத்தில் இருந்த போதும், செல்வ மேட்டில் இருந்த அவர் அவனோடு மாயாவாக கைகுலுக்கியதே ஒரு விந்தையென்று உலக அதிசயம் என்றும் நம்பிய அவன், இவற்றையெல்லாம் புரோக்கர் சொன்னது போல் சாதித்தது தன் 'முகம்' தான் என உறுதியாக நம்பத் தொடங்கினான். அந்த நம்பிக்கைதான் இனி வாழ்க்கையில் எதிர்கொள்ளும் எல்லாத் தடைகளையும் உடைக்க முடியும் என எண்ணத் தூண்டியது.

கொழும்பில் ஒரு பெரிய வங்கியில் மானேஜராக இருந்த அவன் எக்காரணம் கொண்டும் வெளிநாடு போவதில்லையென்று உறுதியாய் இருந்தான். அந்த உறுதியை கௌரவமான உத்தியோகம், ஆசை மனைவி, வசதியான வாழ்வு எல்லாம் இணைந்து தாலாட்டி தட்டிக் கொடுத்தன. ஆனால் கொழும்பில் அடிக்கடி நடந்த குண்டு வெடிப்பும் தமிழ்பெயர் என்றாலே போலிசார் பார்க்கிற கழுகுப்பார்வையும் எங்கு போனாலும் அடையாள அட்டையோடு போகிற கட்டாயமும் வங்கியில் மானேஜர் என்ற போதும் தமிழன் என்பதால் பெரும்பான்மை அரசியல் சித்தாந்தத்தில் உருவான கட்சி அரசியல் அழுத்தங்களும் அவனோடு மோதி சவால் விட்டு அவனை அசைத்துக் குலுக்கி சங்கடப்பட வைத்து வேறுவழியே இன்றி ஆஸ்திரேலியாவிற்கு குடியேற விண்ணப்பிக்க வைத்தது. அப்படி விண்ணப்பித்ததைக் கூட ரகசியமாகவே அவன் வைத்திருந்தான். எவரிடமும் சொல்லவில்லை. அப்படி சொல்லாதற்கு காரணம் இருந்தது. எல்லோரிடமும் சொல்லிவிட்டு கடைசியில் 'மைகிரேசன்' விசா கிடைக்காமல் போய்விட்டால் அது தனக்கு... குறிப்பாக தன் முகத்திற்கும் இழுக்காகி விடுமே!...

மூன்று வருடத்திற்குப் பிறகு ஆஸ்திரேலியாவில் நிரந்தரமாய் குடியேற விசாவை அவனுக்கு கொடுத்தார்கள். அதனை நண்பர்களிடம் சொன்ன போது அவர்கள் உன் 'முகத்துக்கு ஆஸ்திரேலியா என்ன அமெரிக்க விசாவே கிடைக்கும்'' என்றார்கள். பலருக்கு அவன் மீது பொறாமை! எட்ட முடியாத உயரத்துக்கு போகிறானே! அவனோ அதைப்பற்றி கவலைப்படாமல் இந்த முகத்துக்கு சிட்னியில் இறங்கியதும் வேலை கிடைக்கும் என்று நம்பி சிட்னியில் மனைவியோடு இறங்கினான்.

நித்தி சிட்னியில் கால் வைத்து நாலு மாதமாகி விட்டது. இன்னமும் அவன் எதிர்பார்த்த 'பேங்க்' வேலை கிடைக்கவே இல்லை. பல தனியார் ஜாப் ஏஜன்சிகளில் பதிந்தான். கடிதம் மூலமாகவும் ஃபேக்ஸ் மூலமாகவும் ரெசிமே (Resume)க்களை வாராவாரம் அனுப்பி வைத்தான். ஒரு பேங்க் நடத்திய விரைவு காணல் பரீட்சை எழுதினான். அந்த பரீட்சையில் சித்தி அடைந்தான். அதனைப் பாராட்டி 'உன் பெயரை ஏற்கனவே இங்கு வேலைக்கு காத்திருப்பவர்கள் பெயர்களோடு வரிசைப்படுத்தி பதிந்துள்ளோம். எவ்வளவு விரைவில் கூப்பிட முடியுமோ அவ்வளவு விரைவில் கூப்பிடுவோம்' என்று கடிதம் வந்தது. அந்தக் கடிதத்தில் இருந்த தொலைபேசி எண்களுக்கு டெலிபோன் செய்தபோது எழுத்தில் எழுத முடியாத ஒன்றை சொன்னார்கள்... அது உண்மையும்கூட.... 'லோக்கல் எக்ஸ்பீரியன்ஸ்' உள்ளவர்களைத்தான் முதலில் அழைப்போம்...

அதனைக் கேட்டதும் அவனுக்கு கோபம் வந்தது. கொழும்பில் பேங்க் மானேஜராக இருந்தது அனுபவம் இல்லையா?.... இந்த நாட்டுக்கு வந்தே சில மாதங்கள் தான் ஆகின்றன. யாராவது வேலை கொடுத்தால்தானே 'லோக்கல் எக்ஸ்பீரியன்ஸ்' வரும்? என்ன சொல்கிறார்கள்.

இப்போதுதான் முதன் முதலாக தன் முகத்தின் மீதே நித்திக்கு சந்தேகம் வந்தது. அக்கரையில் தடைகளை உடைத்த இந்த முகத்திற்கு என்ன ஆயிற்று? அவன் மனத்தில் கவலைகள் பெருகத் தொடங்கின. எல்லாம் வசப்படும் - அதற்குத்தான் முகம் இருக்கிறதே என்றவனுக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. திரும்பிப் போய் விடலாமா? எப்படி திரும்பிப் போவது? வேலை கிடைக்கவில்லை என்று சொல்ல முடியுமா? சொன்னால் அவன் அந்தஸ்து என்னாவது? மானேஜர் பதவியை ராஜினாமா வேறு செய்துவிட்டான். அதற்காக பெரிய விருந்துகூட வைத்தார்கள். அந்த விருந்தில் ஓடியாடி வேலை செய்த சொய்ஸாதான் இப்போது வங்கியின் மானேஜராம்.

கொழும்பிலிருந்து கையேடு கொண்டு வந்த டாலர் வேறு குறையத் தொடங்கியது. இரு வாரத்திற்கு ஒரு தடவை வாடகை கட்ட வேண்டும். புதிய குடியேற்ற சட்டப்படி வேலை இல்லாதோருக்கான கொடுப்பனவு இரண்டு வருடத்திற்கு இல்லையாம். மாமாவுக்கு ஒரு போன் போட்டால் அவர் ஆயிரக்கணக்கில் டாலர் அனுப்புவார். அதற்கான வழிமுறைகள் அவருக்குத் தெரியும். ஆனால் எப்படி கேட்பது? எந்த முகத்தோடு கேட்பது? இந்த முகத்திற்கா வேலை கிடைக்கவில்லை என்று அவர் நினைத்தால்?

குளியல் அறையிலிருந்து வெளியே வந்த நித்தியை வரவேற்பது போல் டீ கோப்பையை நீட்டிய மனைவி சோர்வான முகத்துடன் ஒரு தகவலையும் சொன்னாள் "சிட்டி நெட் கபீரியில் ஜாப் விஷயமா உங்களை பத்தரை மணிக்கு வரச் சொன்னார்."

சுவரில் மாட்டியிருந்த கடிகாரத்தில் மணி பார்த்தான். மணி எட்டுதான். 'சான்ட்விச்' சாப்பிட்டு உடுத்தி கொண்டு புறப்பட்டால் பத்து மணிக்கெல்லாம் சிட்டிநெட் ஆபீசுக்குப் போய்விடலாம்.

ஒன்பதரைமணிக்கு கோட்டும் சூட்டுமாய் கையில் பிரீப் கேசுடன் கம்பீரமாய் நித்தி புறப்பட முனைந்த போது மனைவியின் முகத்தில் லேசான வாட்டம் மின்னி மறைந்ததை அவன் கண்டான். சிட்னிக்கு வந்ததுமே கணவனுக்கு வேலை கிடைக்கவில்லையே என்பது அவள் கவலை. அந்தக் கவலையிலும் தன் கணவன் தன் தந்தையிடம் கூட தாழ்ந்துவிடக் கூடாதென்று தன்மான உணர்வு மேலிட்டவளாகவே இருந்தாள். செல்வச் செழிப்பில் வளர்ந்த அவள், தற்காலிக வசதியின்மையைக் கூட தாங்காது தன்னைக் கவிழ்த்து விடுவாளோ எனப்பயந்தான். ஆனால் அவளோ தன் கணவன், தன் குடும்பம் என்ற உத்தேகத்தில் இருக்கிறாள். கணவனைப் புரிந்து, தெரிந்து நிற்கிறாள். இதெல்லாம் எவ்வாறு அவளுக்கு வந்தது? இதுதான்

தாம்பத்தியத்தின் தாற்பரியமா?..... கணவனை கௌரவப்படுத்துகிற மனைவியும், மனைவியை கௌரவிக்கிற கணவனும்... என்பதே தாம்பத்தியத்தின் மிகப்பெரிய சுருதி. அதனை அறிந்தவன் அவன்.

நேற்று இரவு படுக்கையில் அவளை விட்டு விலகியதுபோல் கண்களை மூடி படுத்துக் கிடந்தான் நித்தி. இந்த 'விலகல்' ஒரு வாரமாக நீடிக்கிறது. அதனை கண்டு பொறுக்க முடியாத அவள் அவனை உசுப்பினாள் மெள்ள "என்ன டார்லிங்? " என்றவாறு கண்களைத் திறந்து பார்த்தான். இரவு விளக்கின் ஒளியில் அழகாய் அதற்கு கவர்ச்சியாய் நைட்கவுனில் இருந்தாள்.... வில்லாய் வளைந்த புருவம். காந்தமான கண்கள் எடுப்பான மூக்கு. பார்த்துக்கொண்டே இருக்கத் தூண்டும் முகம் மாநில உடலுக்கு ஏற்ற குங்கும நிற நைட்கவுன். தொடர்ந்து அவளைப் பார்த்தால் மூட்டைக் கட்டியிருக்கிற அந்த உணர்வுகள் அறுத்துக்கொண்டு எழுந்து விடுமோவென்ற பயம் அவனுக்கு மீண்டும் கண்களை மூடினாள்.

அவள் தன் கை விரல்களால் மூடிய கண்களைத் திறக்க முயன்றாள்.

" ப்ளீஸ் உங்களோட பேசணும். கண்ண தொறங்க."

" கண்ண மூடிக்கிட்டே பேசலாம். நீ பேசு."

"ரெண்டு பேரும் கண்ண மூடிக்கிட்டு பேசினா அதுக்கு அர்த்தமே வேற... கண்ண தொறங்க."

முகத்தில் புன்னகையைத் தேக்கிக்கொண்டே கண்களைத் திறந்தான், நெருப்பாய் அவள்.

"வேலை கெடைக்கட்டும்."

“வேலைக்கும் இதுக்கும் என்ன சம்பந்தம்? பகல்ல நடக்கிறதை -செய்யிறதை ராத்திரியில் நெனைக்க வேணாம். எங்க அப்பா ராத்திரி எத்தனை மணிக்கு வருவாருன்னு அம்மாவுக்கு தெரியாது. ஆனா அது வரை காத்திருப்பா. அப்பாவுக்கு பிசினஸ்தான் முக்கியம். எப்பவாவது நேரத்தோட வந்தாலும் பிசினஸ் தவிர வேறு எதையும் பேசமாட்டார். இதையெல்லாம் பார்த்து வெறுத்துத்தான் வேலைக்கு போற உங்களை விரும்பினேன். வேலை கெடைக்கிரபோது கெடைக்கட்டும். நாம சந்தோஷமா இருப்போம்” என்ற அவளின் நீண்ட விரிவுரையில் மறுத்துப் பேச முடியாத அவன் ஒரு உற்சாகம் வந்தவனாய் அவளைக் கட்டி அணைத்தான். பிறகு மெள்ள தன் வாயிதழ்களை அவள் கண்ணருகே கொண்டுபோய் அழுத்திவிட முயன்ற போது, அவள் சுதாரித்துக்கொண்டு விலகி நின்று சொன்னாள்: “ சந்தோஷமா இருப்போம்னு என்கிறது அதுதானா? நாம மனம் விட்டு பேசுறது ஒருத்தரை ஒருத்தர் பார்க்கிறது ரசிக்கிறது கூட சந்தோஷம்தான்.”

அதற்கு மேல் அவன் நெருங்கவில்லை. ஆனால் மனம் விட்டு பேசினான் - ரசித்தான். இருவரும் சிரித்துக்கொண்டார்கள். பிறகு அவர்களாகவே நெருங்கிக்கொண்டார்கள்.

“டோன் வொரி. இன்னைக்கி ஜாப் கிடைக்கும்...” என்ற நித்தி மனைவியைப் பார்த்து கண்ணடித்தான். அந்த கண் அசைவில் அவளின் சோர்வு பறந்து போனது.

சிட்டிநெட் கபீரியலின் டெலிபோன் அவனுக்கு ஒரு நம்பிக்கையைக் கொடுத்துவிட்டது. கபீரியல் இத்தாலிக்காரனுக்கும் ஆஸ்திரேலிய வெள்ளைக்காரிக்கும் பிறந்தவன். மூக்கு முகம் இத்தாலியச் சாடை. வாயில் ஆஸ்திரேலிய வெள்ளைக்காரனின் ஆங்கில பாஷை... போன மாதம் அவனைச் சந்தித்து மனம் விட்டு பேசிவிட்டு வந்தான். உதவுவதாக சொன்னான்.

வெளியே போவதற்காக கதவருகே போனான் நித்தி. மீண்டும் தொலைபேசி அழைத்தது. 'மறுபடியும் சிட்னி நெட் கபீரியலா?

வேகமாய் நடந்துபோய் தொலைபேசியை எடுத்து 'ஹலோ' என்றான் நித்தி. மறுபக்கத்தில் புதிய குரல். 'நித்தி.... ஐ யாம் சியாங் சென்.'

"யார். இந்த சியாங்சென்? " என்று எண்ணிப் பார்ப்பதற்குள் விடையும் கிடைத்துவிட்டது. சீனாவில் இருந்து வந்திருக்கும் டாக்டர்.

"யெஸ் டாக்டர்...."

டாக்டர் சியாங்சென் சொன்னார்..... "சிட்டி நெட் முகவரி, தொலைபேசி எண்களைத் தவற விட்டு விட்டேன். தொலைபேசி எண்ணை சொல்கிறாயா?....

'மள மள' வென்று சிட்டி நெட் தொலைபேசி எண்களை சொன்னான். அவையெல்லாம் அவனுக்கு மனப்பாடம் மூன்று மாதமாக வேலைக்காகப் பிரார்த்தனை செய்கிற மந்திரங்கள் அவை சிட்டிநெட் ஆபிசில் தான் டாக்டர் சியாங்சென்னை சந்தித்தான் அவன். அவர் கதையைக் கேட்டபோது தன் கதை பரவாயில்லை என்பது போல் இருந்தது.

சியாங்சென் சீனாவில் எம்.பி.பிஎஸ் டாக்டர் பட்டம் வாங்கியவர்- அங்கு வரும் ஐந்து வருடம் டாக்டராக பணிபுரிந்தவர். தட்டுத்த தடுமாறி ஆங்கிலம் பேசுவார் அவர். ஆஸ்திரேலியாவிற்கு வந்து எட்டு மாதமாவிட்டது. இங்கு டாக்டராக தொழில் செய்ய 'மெடிக்கல் எக்ஸாம்' எடுத்தார். ஃபெயில் என்று சொல்லி விட்டார்கள். அவரைப் போல் பல வெளிநாட்டு டாக்டர்களும் ஃபெயிலாகிவிட்டார்கள்.

அவர்களுக்கெல்லாம் தங்களின் எழுத்தை வைத்து 'பொரின்' என்று கண்டு பரிட்சையில் 'ஃபெயில்' ஆக்குகிறார்கள் என்ற சந்தேகம். அவற்றை உறுதி செய்வதைப் ்பால் 'வெளிநாட்டு டாக்டர்கள் இங்கு வேணாம்' என்பது போன்ற முணுமுணுப்பு மருத்துவ வட்டாரத்தில் இருந்தே வந்தது.

ஆங்கிலம் தவிர்த்த ஏனைய மொழிகளை தாய் மொழியாகக் கொண்ட டாக்டர்கள் ஒன்று திரண்டு, தங்களை வேண்டுமென்றே 'ஃபெயில்' ஆக்குவதாகப் . போராடினார்கள். அதில் டாக்டர் சியாங்சென்னும் ஒருவர். அவர் தான் பல டாக்டர்கள் கிளரிக்கல் தொழில் செய்வதாகவும் சொன்னார்.

சிட்டி நெட் ஆபீசுக்குப் போனபோது டாக்டர் சியாங்சென் நித்திக்கு முன்னதாகவே ரிசப்ஷனில் உட்கார்ந்திருந்தார். அவனைக் கண்டதும் மெல்லிய குரலில், "குட்மார்னிங் நித்தி " என்று சொன்னார். நித்தி பதிலுக்கு பேச வாயெடுத்தபோது, தமிழ் சினிமாக்களில் கிளப் டான்ஸ் ஆடுபவளைப் போல் அரைகுறையாய் உடுத்திக் கொண்டு, 'டாக்டர் சியாங்சென்' என்றாள். இனிய குரல். நித்தி அவளைப் பார்த்தான். வெள்ளை உடம்புக்கு ஏற்ற கறுப்பு உடுப்பு. அழகான கண்கள் தோகையாய் தொங்கும் பொன்னிற முடி. நிச்சயம் இவளின் அழகுக்கு அல்லது அந்த கவர்ச்சிக்குதான் வேலையே கொடுத்திருக்கிறார்கள்.

பத்தரைக்கு தன் அறையில் கபீரியலை பார்த்தான் நித்தி. கபீரியல் நேரே விஷயத்திற்கு வந்தான்.

"நித்தி ! ஒரு தொழில் இருக்கிறது. நீ சம்மதித்தால் உனக்குத் தான் அது."

கபீரியலின் பீடிகை போட்ட பேச்சின் பின்னணி மறு விநாடியே தெரிந்தது.

"ஒரு சின்ன பாக்டரி, வாரத்தில் இரு நாட்கள் ஆபீசில் அக்கவுண்டன்ட் வேலை. மீதி மூணு நாள் மெசின் ஆபரேட்டர் வேலை. டிரெயினிங் தருவார்கள். வேலை கஷ்டம் இல்லை. நீ சரிணு சொன்னால் நாளை தொடங்கலாம். "

நித்தியின் முகத்தில் சுருக்கங்கள் மிதந்தன. கொழும்பில் பேங்க் மானேஜர் வேலை...... இங்கு? கொழும்பில் ராசியான இந்த முகத்திற்கு இங்கு என்ன நடக்கிறது? என்ன பதில் சொல்வது என்று தெரியாமல் மெள்ளவும் முடியாமல் விழுங்கவும் முடியாமல் தடுமாறினான் அவன்.

"அப்போது கபீரியல் சொன்னான்: ஐ அன்டர் ஸ்டேன்ட் யுவர் பிராப்ளம். பட் திங் யுவர் சிச்சுவேசன்."

நித்தியின் டாலர் கையிருப்பு அவனுக்குத் தெரியும்.... சொல்லி யிருந்தான். இப்போது அதை வைத்து தூண்டில் போடுகிறானா?

"நீ இந்த வேலையை கொஞ்சநாள் செய்தால் லோக்கல் எக்ஸ்பீரியன்ஸ் கெடைக்கும். அதை வைத்து வேறு வேலை தெடலாம்."

கபீரியல் எப்படியாவது நித்தியை அந்த வேலைக்கு அனுப்பிவிட முயன்றான். ஆனால் நித்தி அந்த வேலைக்குப் போக ஒப்பவே இல்லை.

"சாரி.... கபீரியல்."

நித்தி அப்படிச் சொன்னதுமே கபீரியல் "தட்ஸ் ஓகே" என்றவாறு எழுந்து கைகுலுக்கத் தயாரானான். அப்படியென்றால் 'நித்தி இடத்தை காலி செய் - அடுத்த ஆளை பார்க்க வேண்டும்' என்பதன் சுருக்கமே அது... கை குலுக்கிவிட்டு நித்தி வெளியே வந்தான்... அவனுக்காக வெளியே டாக்டர் சியாங்சென்.

வயிறே காணாமல் போய்விட்ட தேகம். தொப்பையோடு ஒரு சீசனை அவன் இன்னும் பார்க்கவில்லை. இருவரும் சிட்டி நெட்டை விட்டு வெளியே வந்தார்கள். நித்திக்கு என்ன நடந்தது என்பது பற்றி அறிய அந்த சியாங்செனுக்கு ஆசை.

"வாட் ஹேபண்ட் நித்தி? "

கபீரியல் சொன்னதை சொன்னான் நித்தி... அதைக் கேட்டதும் டாக்டர் சியாங்சென் முகத்தில் படாரென்று ஒரு வெளிச்சம். பிறகு ஒவ்வொரு செங்கலாய் அடுக்கி வீடு கட்டுவதைப்போல் வார்த்தைகளை வெளியே விட்டான்... "யூ லக்கி நித்தி.... எனக்கு அப்படி ஒரு வேலை தந்தால்கூட நான் போவேன். பத்து நிமிடத்திற்கு முன்னர் கபீரியலிடம் வேலை கேட்டதுக்கு உங்களுக்கு பொருத்தமான வேலை இல்லேன்னு சொல்லிட்டான் நான் வேற வேலை தேடுரது அவனுக்குத் தெரியும். எனக்கு இல்லேன்னு சொன்னவன் உன்னிடம் வேலை இருக்குன்னு சொல்லி இருக்கிறானே! அப்படியானால் உன் முகத்தில் ஏதோ வசீகரம் இருக்க வேண்டும் போய் வேலையை ஒப்புக்கொள். காசாவது வ்ரும். இந்த நாட்டுல பணம்தான் முக்கியம். அதோட ஒரு ஆணுக்கு வேலை செய்வதுதான் ஆண்மை... நானே எந்த வேலையும் செய்ய விரும்புவது அதுனாலதான்."

டாக்டர் சியாங்சென்னின் வார்த்தைகள் அவனை ஒரு விநாடியில் உசுப்பிக் குலுக்கி நிறுத்தியது. இந்த வேலையை ஏற்காவிட்டால் அடுத்த மாதத்திலிருந்து பணத்திற்கு எங்கே போவது? மாமாவிடம் பணம் கேட்பதையோ பணத்திற்காக மாமாவிடம் முகத்தை அடகு வைக்கவோ அவன் விரும்பவில்லை. மனைவியும் அதைத்தானே விரும்புகிறாள். ஒரு முடிவுக்கு வந்த நித்தி டாக்டர் சியாங்சென்னை உற்றுப் பார்த்துவிட்டு புன்னகையோடு திரும்பவும் சிட்டிநெட் ஆபீசுக்குள் நுழைவற்குகாக நடந்தான். அப்போது அவன் முகம் ஆபீஸ் கண்ணாடிக்கதவில் நிழலாக விழுந்தது. அவனுக்குத் தெளிவாகத் தெரிந்தது.

0-0-0

# உரைநடை

## (கட்டுரைத்தொகுப்பு)

## உள்ளடக்கம்



# 1. வீரச்சுவை

-ந.மு. வேங்கடசாமி நாட்டார்

சுவை என்னும் தமிழ்ச் சொல்லும் ரஸம் என்னும் வட சொல்லும் ஒரே பொருள் உடையன. நாவினால் நுகரப்படும் சுவை ஆறு வகைப்படும் என்பர். செவியால் நுகரப்படுவன குண அலங்காரங்களாகிய சொற்சுவைகளும், ஒன்பது வகையான பொருட் சுவைகளும் ஆம். நாவாற் சுவைத்து உண்டவை அப்பொழுதே அற்று விடும். செவியாற் சுவைத்து உண்டவை உள்ளத்தே எப்பொழுதும் நிலைபெற்று இன்பம் பயக்கும்.

கேள்வியின் சிறப்பைக் கூற வந்த தெய்வப் புலமைத் திருவள்ளுவர்,

*செவிக்குண வில்லாத போழ்து சிறிது*
*வயிற்றுக்கும் ஈயப் படும்*

என்றார் இதில் பல அரிய கருத்துக்கள் அடங்கியுள்ளன. மற்றும், அவர் செவியால் நுகரும் சுவையை யுணராது வாயால் நுகரும் சுவையை மட்டும் உணர்வாரைக் குறித்து,

செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
அவியினும் வாழினும் என்?

என மிகக் கடுமையாக இடித்துரைத்தமை கருதத் தக்கது.

இனி, பொருட் சுவை ஒன்பதாவன: நகை, அவலம், இழிப்பு, வியப்பு, அச்சம், வீரம், வெகுளி, உவகை, சமநிலை என்பன. இச் சுவையுணர்வுகள் மேற் குறித்த செவி வாயிலாக அன்றிக் கண் வாயிலாகவும் நிகழா நிற்கும்.

பித்தன் ஒருவன், உடல் முழுதும் சாம்பல் பூசி, கிழிந்த துணிகளையும் சுள்ளிகளையும் தொடுத்து இடையில் உடுத்தி, அலரிப்பூவும் எருக்கம்பூவும் கோத்து மார்பில் அணிந்து, அழுதலும் தொழுதலும் விழுதலும் எழுதலும் முதலியன செய்து வருதலைக் காணுமிடத்தும், அவன் ஒன்றோடொன்று இயையாத சொற்கள் பலவற்றைப் பேசுதலைக் கேட்குமிடத்தும் நகை நிகழ்கின்றது. நாடக அரங்கில் ஒருவன் பித்தனாக நடிக்குங்கால், அவனது கோலத்தையும் செய்கையையும் காண்டலாலும், அவன் சொற்களைக் கேட்டலாலும் நகை என்னும் சுவை நிகழும். மற்றும் அவன் இயல்புகளை அமைத்து நல்லிசைப் புலவர் ஒருவர் பாடிய பாட்டினைக் கேட்டலாலும் அச்சுவை நிகழும். ஏனைச் சுவைகளும் இவ்வாறே விழியானும் செவியானும் நுகர்ப்படுவனவாகும். இவ்விரு பொறிகளாலும் திட்பமுற உணரும் நுட்ப வுணர்வுடையார்க்கன்றி, ஏனையோருக்கு இச்சுவைகள் உணர்தற்கரியன என்று ஆசிரியர் தொல்காப்பியனார் கூறியுள்ளார்.

மேற்குறித்த ஒன்பது சுவையுள், சமனிலையாவது சாந்தம் அஃதாவது, ஐம்பொறியும், அடங்கப்பெற்று, பிறர் வையினும், வாழ்த்தினும், வாளாற் போழினும், நாளில் வணங்கினும் மனந்திரியாது அவற்றைச் சமமாகக் கொண்டு நிற்கும் நிலைமை. அஃது உலகியலின் நீங்கினார் பெற்றியாகவின், ஏனைய எட்டுமே காப்பியங்களிற் பயின்று வருவனவாகும்.

சுவை என்பது மெய்ப்பாடு என்றும் கூறப்படும். மெய்ப்பாடாவது, 'உலகத்தார்' உள்ள நிகழ்ச்சி ஆண்டு நிகழ்ந்தவாறே புறத்தார்க்குப் புலப்படுவதோ ராற்றல் வெளிப்படுதல் என்பர் பேராசிரியர். புறத்து வெளிப்படுவது அகத்துணர்வே ஆகலின், சுவைக்கு மெய்ப்பாடு என்னும் பெயர் பொருந்தியதே. ஏறக்குறைய நாலாயிரம் ஆண்டுகளின் முற்பட்ட

தொல்காப்பியத்திலே, மெய்ப்பாடு செய்யு ளுறுப்புக்களுள் ஒன்றாகக் குறிக்கப்படுவதோடு, தனியாக ஓர் இயலில் விரித்துரைக்கப்பெற்று உள்ளது. வடமொழி வாணர்கள் பிற்காலத்தில் இதனைப் பின்னும் விரித்துரைக்கலாயினர்.

தொல்காப்பியர் ஒவ்வொரு சுவையும் தோன்றுதற்கு மூலமான பொருட்கள் நந்நான்கு கூறுகின்றனர். அவர், வீரம் என்பதனைப் பெருமிதம் என்னுஞ் சொல்லாற் குறிக்கின்றனர். யாவரொடும் ஒப்ப நில்லாது மேம்பட்டு நிற்றலின், பெருமிதம் என்னும் சொல்லால் வீரம் குறிக்கப்படுகின்றது. கல்வி, தறுகண், இசை, கொடை என்ற நான்கும் பற்றிப் பெருமிதம் பிறக்கும் என அவர் கூறியுள்ளார். எனவே, போர்ச் செயலிற் காட்டும் ஆண்மையை மட்டுமே அவர் வீரம் எனக் கொண்டிலர் என்பது பெறப்படும். இந்நான்கினுள்ளும், படை வீரமும், கொடை வீரமும் பழைய இலக்கியங்களிற் பல விடத்து ஒருங்கு கூறப்பட்டுள்ளன.

நலங்கிள்ளி என்ற சோழ மன்னன், பகைவருடன் போர் தொடங்குமுன் கூறுகின்ற வஞ்சினத்தில்,

*"மெல்ல வந்தென் நல்லடி பொருந்தி*<br>
*ஈயென இரக்குவ ராயின் சீருடை*<br>
*முரசுகெழு தாயத்து அரசோ தஞ்சம் ;*<br>
*இன்னுயி ராயினும் கொடுக்குவென்; இந்நிலத்து*<br>
*ஆற்றலுடையோர் ஆற்றல் போற்றாதுஎன்*<br>
*உள்ளம் எள்ளிய மடவோன் தெள்ளிதின்*<br>
*துஞ்சுபுலி இடறிய சிதடன் போல*<br>
*உய்ந்தனன் பெயர்தலோ அரிதே"*

என்று இயம்புகின்றனன். இதில் பகைவராயினார் என் அடியின்கீழ் ஒதுங்கி நின்று 'ஈ' என இரப்பாராயின், இந்த அரசாட்சியைக் கொடுப்பது பெரிதன்று; என் உயிரையே வேண்டினும் கொடுப்பேன்' என்பது அவனது கொடை வீரத்தையும், 'என் ஆற்றலையும் துணையையும் மதியாது இகழ்ந்த அறிவிலியானவன், தூங்கும் புலியை இடறிய குருடன்போலப் பிழைத்து மீளுதல் அரிது' என்பது அவனது படை வீரத்தையும் நன்கு புலப்படுத்துதல் காண்க.

ஒரு காலத்தில், தமிழ்நாட்டு மூவேந்தரும் பாரி என்னும் வள்ளலின் பறம்பு அரணை முற்றுகையிடத் தொடங்கினார். அப்பொழுது, பாரியின் ஆருயிர் நண்பராகிய கபிலர் என்னும் புலவர் பெருமான் அங்கே போந்து, அவ்வரசர்களை நோக்கிப் பின்வருமாறு கூறுகின்றார்: 'வேந்தர்காள்! நீவிர் மூவரும் நும் சேனையுடன் ஒருங்கு திரண்டு போர் செய்தீராயினும், பறம்பு நும்மாற் பற்றுதற்கரியது; பறம்பு நாடு முந்நூறு ஊர்களையுடையது; அம்முந்நூறு ஊரினையும் பரிசிலர் பெற்று விட்டனர். நீவிர் கூத்தரும் பாணருமாகி ஆடிப் பாடிவரின், எஞ்சியுள்ள பறம்புமலை நுமக்குப் பரிசிலாதற்குரியது. அஃதன்றி, எம்மையும் பாரியையுமே பரிசிலாக வேண்டியனும் மாறாது வழங்குவன் 'அவ்வள்ளல்': இதன்கண் பாரியின் படைவீரமும், கொடைவீரமும் ஒன்றின் ஒன்று சிறந்து விளங்குதல் அறியற் பாற்று.

இனி, கொடையே யன்றி, இதனைக் கொள்கவென்று ஒருவன் வலிதிற் கொடுக்கவும், அதனைக் கொள்ளேன் என்று மறுப்பின், அஃதும் வீரத்தின்பாற் படுவதேயாகும். பழைய சங்கப் புலவர்கள்பால் இத்தகைய பெருமித உணர்ச்சி ததும்பி யிருந்தமை அன்னோர் பாட்டுக்களால் அறியக் கிடக்கின்றது.

இனி, படை வீரமாகிய தறுகண்மையை மட்டும் தனித்து நோக்குவோமாக: உலகத்து வேறு எம்மொழியினும் காணப்படாத பொருளிலக்கணம் என்பதொன்று தமிழில் இருத்தலைக் கற்றோர் அறிவர். அவ்விலக்கணம் அகப்பொருள், புறப்பொருள் என இரு விரிவினையுடையது. பழைய தமிழ்ச் செய்யுட்க ளெல்லாம் அவற்றிற்கு இலக்கியமேயாகும். அவ்விரு வகை இலக்கிய இலக்கணங்களாலும் உணர்த்தப்படுவன அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப் பொருள்களுக்கு ஏதுவாகிய காதலொழுக்கமும், வீரவொழுக்கமும் ஆம். எனவே, பெரும்பான்மை பற்றிக் காதலும் வீரமும் தமிழரின் தலைசிறந்த பண்பு என முடிபு கட்டுதல் பொருந்தும்.

தமிழருடைய படைமாட்சியைக் கூறவந்த திருவள்ளுவர்,

*கூற்றுடன்று மேல்வரினும் கூடி யெதிர்நிற்கும்*
*ஆற்ற லதுவே படை*

என்கின்றார். பகைவரை வெகுண்டு நோக்கிய கண், அவர் வேல் கொண்டு எறியுமிடத்து இமைத்துவிடு மாயினும், வீரர்க்கு அதுவே தோல்வி யாகுமாம்!

தன்னைத் தாக்க வருகின்ற களிற்றின்மீது தன் கைவேலை எறிந்து அதன் உயிரைப் போக்கி, மேலும் தன் மீது வரும் களிற்றினை எறிதற்கு வேல் நாடித் திரியும் வீரனொருவன், தன் மார்பிலே தைத்துக் கிடந்த வேலினைக்கண்டு, அதனைப் பறித்துக்கொண்டு மகிழுகின்றானாம்! என்னே தமிழருடைய ஆண்மை!

தமிழ் மறவர் போரிற் புறங் காட்டுவது என்பது எக்காலத்தும் இல்லை. வெண்ணிற் பறந்தலை என்னும் போர்க்களத்தில், சோழன் கரிகாலனோடு போர் புரிந்த பெருஞ்சேரலாதன் என்ற சேர மன்னன், தன் மார்பிலே தைத்து உருவின புண்ணும் புறப் புண்ணாகும் என நாணி, வாளோடு வடக்கிருந்து உயிர் நீத்தான் என்றால் அவனுடைய வீரத்தையும், மானத்தையும் எவ்வாறு அளவிடலாகும்?

முதுகுடிப் பிறந்த மகளிரும் நிகரற்ற வீரவாழ்க்கையினராவர். நரம்புகள் மேலெழுந்து தோல் திரைந்த முதியவள் ஒருத்தி, தன் மகன் போரிலே புறங்கொடுத்தனன் என்று சிலர் கூறக் கேட்டாள்; அவளுக்கு உண்டாகிய சினத்திற்கு அளவில்லை; 'என் மகன் போரிற் புறங்காட்டியது உண்மையாயின், அவன் பாலுண்ட என் அங்கத்தைச் சிதைத்திடுவேன்' என்று போர்க்களம் அடைந்தாள்; தான் கைக்கொண்ட அக்களத்தே கிடந்த பிணங்களைப் புரட்டிப் பார்த்து வந்தாள். தன் மகன் பகைவன் வேலினால் இரு கூறாகச் சிதைந்து கிடத்தலைக் கண்டாள்; ஆ! அவனைப் பெற்ற நாளினும் பேருவகை கொண்டாள்!

மற்றொரு வீர மகள், முதனாட் போரிலும், அதற்கு முன்னாட் போரிலும் தன் கணவனையும் தமையன்மாரையும் இழந்தவள், அன்றும் போர் முரசின் முழக்கங்கேட்டு, தன் குடிக்கு ஒருவன் போர் செய்யவேண்டுமென விரும்பி, தன் ஒரே மகனை அழைத்து, குடுமியில் எண்ணெய் நீவி, வெள்ளாடை உடுத்தி, வேலினைக் கையிற் கொடுத்து, செருமுகம் நோக்கிச் செல்க என விடுத்தாள்!

புறநானூற்றிலுள்ள இரண்டு செய்யுட்கள் இங்ஙனம் கூறாநின்றன. தமிழ் மக்களின் இணையற்ற வீரவுணர்ச்சிக்கு இதனினும் வேறென்ன சான்றுவேண்டும்?

தமிழர் இத்தகைய மறத்திறன் உடையராயினும் அறத்துறை வழுவிப் போர் செய்பவரல்லர். இரு பெரு வேந்தர் போர் செய்வது கருதினால், ஒருவர், ஒருவர் நாட்டு வாழும் குருக்கண்மாராகிய அந்தணரும், பெண்டிரும், பிணியுழந்தோரும், மணம் புரிந்து மகப் பெறாதோரும் என்னும் இவர்கட்கும், ஆனினங்கட்கும் ஏத முண்டாகாவாறு, 'யாம் போர் தொடங்குதும்; ஆகலின் நீவிர் நுமக்குப் பாதுகாவலாகிய இடத்தை அடை வீராக' என்று முதற்கண் தெரிவிக்கும் இயல்பினராவர். மற்றும், பொருகளத்திலும் அடி பிறக்கிட்டோரும், படையிழந்தோரும் முதலாயினாரை அவர் பொருது கொல்வாரல்லர். எனவே, 'மன்னுயிர் காக்கும் அன்புடை வேந்தர்க்கு மறத் துறையினும் அறமே நிகழும்' என்க.

'பகைவர் மேற் செய்யும் வன்கண்மையைப் பேராண்மை என்று சொல்வர்; அவர்க்கு ஒரு தாழ்வு வந்தாயின், அது தீர்த்துகொள்ளுதற் பொருட்டுக் கண்ணோட்டுமுடன் உதவி செய்தலை, அவ்வாண்மைக்குக் கூர்மை என்று சொல்வர்' என்னும் பொருளமைத்து வள்ளுவர் கூறிய,

"பேராண்மை யென்ப தறுகண் ஒன்றுற்றக்கால்
ஊராண்மை மற்றதன் எஃகு"

என்னும் செய்யுள் ஈண்டு அறியற் பாலது.

சென்ற, சென்ற போர்தொறும் வென்றியே புனைந்த அரக்கர் கோமானாகிய இராவணன், இராமனுடன் புரிந்த முதற்போரிலே, படைகள் யாவும் பட்டொழிய, குடையும், கொடியும் இற்றொழிய, தேர் அழிந்து, முடியொழிந்து, வில்லும் அம்பும் இன்றி வெறுங் கையனாய், நாணத்தால் முகம் கவிழ்த்து, கால் விரலால் நிலத்தினைக்கீறி

நின்றானாக, அப்பொழுது அவனது நிலையைக் கண்டிரங்கிய பெருந்தகையராகிய இராமன், அவனை நோக்கி, 'அறத்தினால் அன்றி அதற்கு மாறாகிய மறத்தினால் அமர் வெல்லுதல் அமரர்க்கும் அரிது என்பதனை மனத்தில் உறுதியாகக் கொள்வாய்; உன் ஊரிலுள்ள கிளைஞருடன் சேருமாறு பறந்து செல்வாய்; நின் தனிமையைக்கண்டு இரங்கி, யான் அச்செயலை நினைந்திலேன். உனக்குத் துணையாக அமைந்த சேனைகளும், பிறவும் பெருங்காற்றினால் மோதுண்ட பூளைபோல் ஆயினமை கண்டாயன்றே? இன்று போய், போர் செய்வதற்கு நாளை வருவாய்' என அருள் புரிந்தனன் என்னுஞ் செய்தியைக் கம்பநாடர் தெரிவிக்கும்,

*"அறத்தி னாலன்றி அமரர்க்கும் அரும்பகை கடத்தல்*
*மறத்தி னாலரி தென்பது மனத்திடை வலித்தி;*
*பறத்தி நின்னெடும் பதிபுகக் கிளையொடும் பாவி!*
*இறத்தி யானது நினைக்கிலன் றனிமைகண் டிரங்கி;*

*ஆளை யாஉனக் கமைந்தன மாருதம் அறைந்த*
*பூளை வாயின கண்டனை இன்றுபோய்ப் போர்க்கு*
*நாளை வாவென நல்கினன் நாகிளங் கமுகின்*
*வாளை தாவுறு கோசல நாடுடை வள்ளல்"*

என்னும் செய்யுட்கள் அறிந்து இன்புறற்பாலன.

இனி, வீரச்சுவை ததும்பும் சில செய்யுட்களையும், தொடர்களையும் கூறி இவ்வுரையை முடிப்போம்: சேரன் செங்குட்டுவ னானவன், கண்ணகிக்குச் சிலை கொணர்தற் பொருட்டு, வஞ்சி சூடி வடதிசைக்குப் புறப்படத் துணிந்த பொழுது, அவன் அமைச்சனாகிய வில்லவன் கோதை கூறுவது,

*“கங்கைப்போர் யாற்றுக் கடும்புனல் நீத்தம்*
*எங்கோ மகளை ஆட்டிய அந்நாள்*
*ஆரிய மன்னர் ஈரைஞ்ஞூற்றுவர்க்கு*
*ஒருநீ யாகிய செருவெங் கோலம்*
*கண்விழித்துக் கண்டது கடுங்கட் கூற்றம்*
*இமிழ்கடல் வேலியைத் தமிழ்நா டாக்கிய*
*இதுநீ கருதினை யாயின் ஏற்பவர்*
*முதுநீர் உலகின் முழுவதும் மில்லை”*

என்பது.

தூணினின்றும் வெளிப்பட்ட நரசிங்கப்பெருமான், அவுணர் கூட்டத்தையெல்லாம் இமைப்பளவிற் கொன்று குவித்து நின்று ஆர்த்த நிலைகண்ட பிரகலாதன், ‘இன்னும் உன் உள்ளத்தின் ஒன்றும் உணர்ந்திலை போலும்; ஆழி வேந்தை வணங்குதியாயின் உன் புன்றொழில் பொறுப்பன்’ என்று கூறாநிற்ப, இரணியன் அவனை நோக்கி,

*“கேளிது நீயுங் காணக் கிளர்ந்தகோ ளரியின் கேழில்*
*தோளொடு தாளும் நீக்கி நின்னையும் துணித்துப் பின்னென்*
*வாளினைத் தொழுவ தல்லால் வணங்குதல் மகளிர் ஊடல்*
*நாளினும் உளதோ என்னா அண்டங்கள் நடுங்க நக்கான்”*

கம்பர் வாயால் வெளிப்பட்ட இவ்வீரமொழிகள் தமிழருடைய ஆண்மையின் விளைவு என்பதில் ஐயமில்லை.

மனோன்மணீய நாடகத்தில் ஜீவக வழுதியானவன், தன் படை வீரர்களை நோக்கிப் போரிலே ஊக்குஞ் சொற்கள் பின்வருவன:

*"அந்தணர் வளர்க்கும் செந்தமிழ் தன்னினும்*
*நாட்டு அபிமானம் உள் மூட்டிய சினத்து*
*அனறோ வானோர்க்கு என்றுமே உவப்பு!*
*வந்தஇக் கயவர் நும்சிந்தையின் கொளுத்திய*
*வெந்தழற்கு அவரே இந்தனம் ஆகுக!*
*இன்று நீர்சிந்தும் இரத்தம் ஓர் துளியும்*
*நின்று உகம் பலவும் நிகழ்த்துமே*

..............................................

*இத்தனிப் போரில் நீர் ஏற்றிடுங் காயம்*
*சித்தங் களித்துச் செயமாது உமக்கு*
*முத்தமிட் டளித்த முத்திரை யாகி*
*எத்தனை தலைமுறைக்கு இலக்காய் நிற்கும்!"*

இத்தகைய செய்யுட்களைப் பயின்று, வீரச்சுவையை நுகர்ந்து, பெருமித மெய்துதல் தமிழ் மக்கள் கடனாம்.

0-0-0

# 2. குழந்தை ராமு

– வ.ரா.

குழந்தை ராமுக்கு இன்னும் ஆறு வயதாகவில்லை. ஆனால், அவனுடைய தாத்தா வெகு அக்கரையாக, அவனைப் பள்ளிக்கூடத்தில் சேர்த்துப், படிக்கும்படிச் செய்து விட்டார். இந்த ஆறு வயது ராமுவையும் அவனுடைய அறுபத்து ஒன்பது வயது தாத்தாவையும், நேரிலே நான் காணும்பொழுதெல்லாம், எனக்கு ஆனந்தமும் துக்கமும் சேர்ந்தாற்போல வரும்.

குழந்தை ராமு தங்கத்தை உருக்கி வார்த்த விக்கிரகத்தைப்போல இருப்பான். அகன்ற நெற்றி, செந்தாமரைக் கண்கள், சுவாமி விவேகானந்தரைப்போன்ற தலை, பூமியில் ஒரு நிமிஷமும் தரிக்காமல், எப்பொழுதும் ஓடிக்கொண்டிருக்கும் கால்கள், ஓயாத நாக்கு, ஸயன்ஸ்காரர்கள் கூடி விளக்கத்தோடு பதில் சொல்ல முடியாத கேள்விகள், பம்பரம் போல் வினாடியில் தூங்கும் குணம், சொன்னதை வேதமாக நம்பும் தன்மை – இவைகள் எல்லாம் சேர்ந்தது தான் ராமு.

'ஏண்டா, இந்தக் கிழிசல் துண்டைக் கட்டிக் கொண்டிருக்கிறாய்?' என்று தாத்தா கேட்பார். 'நல்ல வேட்டி இல்லை' என்பான் ராமு. 'என்னடா நல்ல வேட்டி, வேட்டி! நல்ல தமிழ் பேசுகிறாய்! வேஷ்டி என்று சொல்லு' என்பார் தாத்தா. பம்பரத்துக்கு நூல் சுற்றிக் கொண்டே, 'வேஷ்டி என்று சொல்லு, வேஷ்டி என்று சொல்லு' என்று சொல்லிக்கொண்டே, மாயமாய்ப் பறந்து போவான்.

'தாத்தா, எனக்குக் கிராப்பு வைத்துவிடேன்' என்பான் ராமு. மடப்பயலே! நான் பரிகாரியா! என்ன, வரவரக்கெட்டுப்போச்சு! இந்த நாள் நாகரிகம் இரண்டு வயதிலேயே படிந்து போக வேண்டுமோயில்லையோ? கலி முற்றி, காலம் கெட்டு வருகிறதோன்ன' என்பார் தாத்தா. 'தாத்தா, நீங்கள் நாவிதனில்லை' என்று சிரிப்பான் குழந்தை. 'எடடா கம்பை!' என்று சொல்லுவதற்குள், குழந்தை ராமு இருக்கிற இடம் தெரியாது.

'நம்மாத்து மாகாளி மகன் உங்களைக் கூப்பிடுகிறான்' என்பான் ராமு, 'துஷ்டப் பயலே! நீ அவன் கிட்டப் போய் விட்டயோ? வேஷ்டியை மாற்று' என்பார் பெரியவர். 'தாத்தா, நான் அவன் கிட்டப் போகவில்லை. அவன் என் கிட்ட வந்துவிட்டான். அவன் வேஷ்டியைத் தானே மாற்ற வேண்டும்?' என்ற அறியாக் குழந்தை, அவனறியாமலே தர்க்க சாஸ்திரம் பேசிவிடுகிறான்.

'என்னடா காந்தி வேஷ்டி என்ன வேண்டியிருக்கிறது? காந்தி வேஷ்டி கட்டிக்கொண்டால் ஜெயிலுக்குப் போகணும். நீ போறியா?' என்பார் தாத்தா. 'போ தாத்தா! காந்தி பெரியவர், உன்னைக் காட்டிலும் பெரியவர். நான் அவரைப் பார்த்தேனே, தாத்தா! நான் ஒரு ரூபாய் கையிலே கொடுத்தேன், தாத்தா! என்னைக் காந்தி தொட்டார், தாத்தா' என்று குழந்தை ராமு அடுக்கிக்கொண்டே போனால், அதைத் தடுத்து தாத்தா பேச முடியுமா?

'தாத்தா! பள்ளிக்கூடத்திலே அந்த வாத்தியாருக்கு நன்றாய்ச் சொல்லிக் கொடுக்கத் தெரியவில்லை. வாத்தியார் குறட்டை விட்டுக்கொண்டு தூங்குகிறார். விழித்துக்கொண்டால், குழந்தைகளைப் பொத்துப் பொத்தென்று சாத்துகிறார். நல்ல பள்ளிக்கூடம்! நல்ல

வாத்தியார்! தாத்தா, நான் அந்தப் பள்ளிக்கூடத்துக்குப் போக மாட்டேன். தாத்தா! போக மாட்டேன் தாத்தா!' என்று ராகம் இழுத்துக்கொண்டு சொல்லுவான்.

தாத்தாவைக் குழந்தை ராமு துளைப்பதைப் பார்த்தால் பரிதாபமாயிருக்கும். ஆறுக்கும் அறுபதுக்கும் உள்ள சம்பந்த வித்தியாசங்கள் யாவும் ஒன்றுவிடாமல் தெரியும். குழந்தை ராமுவுக்கு இயற்கையாக உண்டாகும் தேச பக்தி, கதர்பித்து முதலியன, தாத்தாவுக்கு என்ன சொன்னாலும் உடம்பிலே ஏறாது. ஏறாதது மாத்திரமா? தம்மை அறியாமலே குழந்தையின் நல்லுணர்ச்சிகள் வளர வொட்டாமல் தடுக்கவும் செய்கிறார்.

குழந்தை ராமு, தாத்தாவைக் கண்டால், கொஞ்சமாவது பயப்படுவான். பாட்டியைக் கண்டால் அவனுக்கு 'ஜோர்' வந்துவிடும். 'ஏ ராமு! எங்கே ஓடுகிறாய்? எண்ணெய் தேய்த்துக் கொள்ள வேண்டாமோ?' என்று பாட்டி சொன்னால், 'பாடம் படிக்கிறதைக் காட்டிலும் எண்ணெய் தேய்த்துக் கொள்வது ஓசத்தியோ?' என்று சிரித்துக்கொண்டு, சிலேட்டுக் குச்சியைத் தரையில் வைத்துத் தேய்ப்பான். இதுதான் அவன் படிக்கிற பாடம்.

'பாட்டி, உனக்கு பஸ் தெரியுமா?' என்பான்.

'எனக்கு என்னடாப்பா தெரியும்? பஸ் என்றால் என்ன? நீதான் சொல்லு, பார்ப்போம்?' என்பாள் பாட்டி.

ராமு சொல்லுவான்: 'பழம் புடவையைக் கிழித்தால் டர்; மூச்சு விட்டால் புஸ்; போதும் என்று சொன்னால் பஸ்! பஸ் என்றால் போதும் என்று அர்த்தம் பாட்டி!'

'இதையாடா பஸ் என்கிறது?' என்பாள் பாட்டி.

'உன்னை ஏய்த்தேன்; நம்ப ஊர் ரோட்டிலே ஓடுகிறதே பஸ், மோட்டார் பஸ், அதற்குப் பெயர்தான் பஸ்!' என்று சொல்லிவிட்டு ஓட்டம் எடுப்பான்.

'அடே கோமாளி!' என்று பாட்டி ஆனந்தமடைவாள். 'அம்மா நான் "ராங்கி" எழுதப் போகிறேன்' என்பான் ராமு. 'என்னடா ராங்கி? ராங்கி என்றால் என்னடா? இதுதான் நீ படிக்கிற படிப்போ?' என்பாள் பெற்ற தாய். 'உனக்குத் தெரியாதா? வாத்தியார் "ட்ராயிங்" என்று சொன்னார். அடுத்த வீட்டுக் காமுவுக்கு, அந்த வார்த்தை வாயிலே நுழையவில்லை. அவள் 'ராங்கி' என்று உருப்போட்டுக் கொண்டிருக்கிறாள். ட்ராயிங் என்றால் சித்திரம் எழுதுகிறது. 'அம்மா, நீ படிக்கிறபொழுது ராங்கி உண்டோ?' என்று துடுக்காகக் கேட்பான் ராமு. 'நான் பெற்றதுதான் ராங்கியாய்ப் பேசுகிறது!' என்று சந்தோஷத்துடன் சொல்லுவாள் அம்மாள்.

'பள்ளிக்கூடத்திலே பாட்டு, அம்மா!' என்பான். 'என்ன பாட்டுடா?' 'கையை நீட்டுகிறதற்கு, 'கையை மடக்குகிறதற்கு, உட்காருவதற்கு, எழுந்திருப்பதற்கு, - எல்லாவற்றிற்கும் பாட்டு' என்பான். 'எங்கே, பாடு பார்ப்போம்!' என்பாள் தாயார். 'நான் பாடுவேன்; நீ அந்த மாதிரி கையை நீட்டி மடக்கணும்; உட்கார்ந்து எழுந்திருக்கணும். செய்கிறாயா, பாடுகிறேன். அது "ட்ரில்" பாட்டு அம்மா என்று சொல்லிக்கொண்டே, வெளியிலே கூப்பிடும் சோமுவின் குரலைக் கேட்டு ஓட்டம் எடுப்பான்.

**சோமு** : ஏண்டா, ராமு, கோலியாட வருகிறாயா?

**ராமு** : வருகிறேன்.

**சோமு** : வரேன் என்றால் வாயேன்.

**ராமு** : வாயேன் என்றால் வாய் சாப்பிடுவதற்குத்தான்

**சோமு** : என்ன, வாத்தியார் மாதிரி பேசுகிறாய்?

**ராமு** : நான் வாத்தியார் இல்லையடா, நான் ப்ரொபஸர்!

**சோமு** : ஏதாவது சொல்லிக்கொண்டிரு.

**ராமு** : நீ முதலிலே கட்டை வைத்தால், நான் கோலியாட வருகிறரேன்.

இவர்களுக்கு மத்தியஸ்தர் தாத்தா,

**சோமு** : பாருங்கோ, தாத்தா, ராமு கோலியாட வரமாட்டேன் என்கிறான்.

**ராமு** : சோமு முதலிலே முட்டி வைக்கணும், தாத்தா! நான்தானே கோலி கொண்டு வருவேன்.

**தாத்தா** : அவன் கோலி கொண்டு வந்தால், நீ முட்டி வைக்கிறாயா?

**ராமு** : அவன் கோலி எதற்கு? அவன் கோலி மாகோலி, அடிச்சா நொறுங்கிப் போகுமே. என்னுது அசல், ஒண்ணா நம்பர், பளிங்குக் குண்டு, தாத்தா! நேத்திக்கு நீ வாங்கித் தந்தையே, அந்தக் கோலி, தாத்தா!

தாத்தாவுக்கு நைஸாக ராமு லஞ்சம் கொடுப்பான்.

'ஏன் அப்பா சூரியன் ஆகாயத்திலே தொங்குகிறதே, அது பொத்தென்று கீழே விழுந்து விடாது? என்று ராமு கேட்டால், அதற்கு, அவனுக்குச் சமாதானம் வரும்படியாக, யார் எப்படிப் பதில் சொல்ல முடியும்? 'கண்ண விழாது' என்பார் தகப்பனார். 'இந்தக் கோலிக்குண்டு நிற்க மாட்டேன் என்கிறதே. விட்டுவிட்டால் கீழே விழுந்து விடுகிறதே!' என்பான் ராமு. 'ஆமாம்' என்பார் தகப்பனார் 'சூரியன் ஏன் விழவில்லை?' என்று கேட்பான் ராமு. 'நீ பெரியவனாய்ப் போனால் உனக்குத் தெயும். இப்பொழுது தெரியது' என்பார் தகப்பனார். தாத்தா உன்னைவிடப் பெரியவர் என்று பாட்டி சொல்றா. அவருக்கும்

தெரியவில்லையே!' என்பான் ராமு. பதில் சொல்ல முடியாத சங்கதி!

ராமுவுக்கு ஒரு சிறிய தகப்பனார். அவரிடம் ராமுவுக்கு ரொம்பப் பிரியம். 'ஏன் சித்தி! என்னை உன் சைக்கிளில் வைத்துத் தள்ளிக்கொண்டு போகிறாயா? நான், விழ மாட்டேன். கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டிருப்பேன்' என்பான் ராமு. 'மோட்டார் காரைக் கண்டால், சைக்கிள் வெறிக்குமடாப்பா!' என்று குறும்பாகச் சித்தப்பா பதில் சொல்லுவார். 'போ சித்தி!' போ! வெறிக்குமாம்! நீதான் பிடித்துக் கொண்டிருக்கிறாயே!' என்பான் ராமு.

குழந்தை ராமுவைப் போல விளையாடிக் கொண்டிருக்கும் குழந்தைகள் நம் நாட்டின் வருங்காலத் தலைவர்கள். அவர்களுடைய இன்றைய நடத்தையைப் பொறுத்தது, அவர்கள் வாழப் போகிற வாழ்வு. அவர்களை மண்டையிலடித்து, அவர்களின் மூளையைக் குழம்ப வைப்பது வயது மூத்தவர்களுக்கு அழகல்ல. அவர்கள் எவ்வளவுக்கெவ்வளவு வாய்ப் பதட்டத்துடன் இருக்கிறார்களோ, அவ்வளவுக்கவ்வளவு இந்த நாட்டுக்கு அவர்களால் நலம் உண்டாகும்.

-----

# 3. வாழ்க்கையும் வைராக்கியமும்

**ரா.பி. சேதுப்பிள்ளை**

வைராக்கியம் என்ற சொல்லைக் கேட்டவுடனே தமிழ்நாட்டில் வழங்கும் இரண்டொரு வாசகம் நம் நினைவிற்கு வருகின்றது; ஒன்று, புராண வைராக்கியம்; மற்றொன்று, மயான வைராக்கியம். இவ்விரண்டையும் சிறிது பார்ப்போம். ஓரிடத்தில் கம்பராமாயணக் கதை நடக்கிறது. இராமனைக் காட்டுக்குப் போகும்படி கட்டளையிடுகிறாள் கைகேயி. 'கோசல நாட்டுச் செல்வம் எல்லாம் இனிப் பரதனுக்கே உரியது; இது மன்னவன் ஆணை' என்று பேசுகிறாள். அது கேட்ட இராமன் அகமலர்ந்து கைகுவித்து

"மன்னவன் பணியன் றாகில் நும்மணி மறுப்பனோ என்
பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன் பெற்ற தன்றோ
என்னினி உறுதி அப்பால் இப்பணி தலைமேற்கொண்டேன்
மின்னொளிர் கானம் இன்றே போகிறேன் விடையும்
கொண்டேன்"

என்று காட்டை நோக்கிப் புறப்படுகிறான். இந்தப் பாட்டைக் கேட்கின்றான் ஒருவன். அவனுக்கும் அவன் தம்பிக்கும் ஒரு சொத்தைக் குறித்து நீதிமன்றத்தில் நெடுவழக்கு நடக்கின்றது. பாட்டைக் கேட்ட நிலையில், அவன் எண்ணுகின்றான்: "இராமனே உத்தமன்; தான் வேறு, தம்பி வேறு என்ற எண்ணம் அற்றவன்; எவ்வளவு பெருந்தன்மையோடு பரதன் பெற்ற செல்வம் நான் பெற்ற செல்வமன்றோ என்று பேசுகின்றான். நான் மட்டும் என் தம்பியின்மீது ஏன் வழக்கை நடத்த வேண்டும்? அந்தச் சொத்தை என் தம்பி ஆண்டால் என்ன, நான் ஆண்டால் என்ன?' என்று எண்ணிக்கொண்டு வீட்டிற்கு

வருகின்றான்; பசிதீர உண்கின்றான்; உறங்குகின்றான்; உறக்கத்திலே வைராக்கியம் உலைந்து விடுகிறது. மறுநாட் காலையில் அவன் வக்கீல் வீட்டுக்கு போகிறான். வழக்கு முறையாக நடக்கிறது. இதுதான் புராண வைராக்கியம்.

மற்றொரு வைராக்கியத்தை பார்ப்போம். ஒருவன் திடீர் என்று இறந்துவிடுகிறான். உற்றார் உறவினர் எல்லோரும் வருகின்றார்கள்; கண்ணீர் சொரிகின்றார்கள். ஈமத்தில் ஏற்றுகின்றார்கள். நெருப்பை மூட்டுகின்றார்கள். அப்பொழுது ஒருவன் நினைக்கிறான். 'என்ன உலக வாழ்க்கை! நேற்று இருந்தான். இன்று போய்விட்டான். எனக்கும் இப்படித்தானே ஆகும்! ஆதலால் காற்றுள்ள போதே தூற்றிக்கொள்ள வேண்டும்'

"கனியேனும் வறியசெங் காயேனும்
உதிர்சருகு கந்தமூ லங்களேனும்
கனல்வாதை வந்தெய்தின் அள்ளிப்பு
சித்துநான் கண்மூடி மௌனியாகித்
தனியேஇ ருப்பதற் கெண்ணினேன்
எண்ணமிது சாமிநீ அறியாததோ
சர்வபரி பூரண கண்டதத் துவமான
சச்சிதா னந்த சிவமே"

என்று அவன் பாடுகிறான். மயானத்திலிருந்து திரும்பி வருகின்றான். மனத்தில் எழுந்த வைராக்கியம் மாயமாய்ப் பறந்து போகின்றது. இதுதான் மயான வைராக்கியம்.

மனத்திண்மையே வைராக்கியமாகும். மனத்திண்மையற்றவர்கள் ஒரு கொள்கையில் நிலைத்து நிற்க மாட்டார்கள். மன உறுதியுடையவர்கள் மலைபோல் உலையாது நிற்பார்கள். அவர், மெய்

வருத்தம் பாரார்; பசி நோக்கார்; அருமையும் பாரார்; அவமதிப்பும் கொள்ளார். மனவுறுதி கொண்டு அறநெறியில் நிற்கும் மாந்தரை இவ்வுலகம் போற்றும். அரிச்சந்திரன், வாய்மை என்னும் சத்திய நெறியில் வழுவாது நின்றான்; பலவகையான சோதனைக்கு உட்பட்டான்; பதியிழந்தான்; பாலனை இழந்தான்; படைத்த நிதி இழந்தான்; இவ்வாறு ஒன்றன்பின் ஒன்றாக எல்லாவற்றையும் இழந்து, ஈனத் தொழில் புரியும் காலத்தும் சத்தியத்தை விடாது பற்றி நின்றான்; தன்னைச் சோதித்த முனிவரை நோக்கி,

"பதியி ழந்தனம், பாலனை யிழந்தனம், படைத்த
நிதியி ழந்தனம், இனிநமக் குளதென நினைக்கும்
கதி யிழக்கினும் கட்டுரை இழக்கிலேன்"

என்றான். அது கேட்ட முனிவன், 'மதியிழந்து, வாயிழந்து, மானமும் இழந்து சென்றான்' என்று அரிச்சந்திரன் சரித்திரம் கூறுகிறது.

இனி மனிதர்க்குரிய குணங்களிற் சிறந்தது பொறுமை என்பர். 'உள்ளம் கவர்ந்து எழுந்து ஓங்கும் சினத்தைக் காத்துக்கொள்ளும் குணமே குணம்' என்றார் ஒரு கவிஞர். வெம்மை விளைவிப்பது கோபம்; செம்மை விளைவிப்பது பொறுமை. இத்தகைய பொறுமை மன உறுதியாலே வரும். பொறுமையின் தன்மையைத் தம் வாழ்க்கையிலே பொருந்தக் காட்டினார் ஏசுநாதர். தீயவர்கள் அவரைச் சூழ்ந்துகொண்டு சீறினார்கள்; கழியால் அடித்தார்கள்; காறியுமிழ்ந்தார்கள்; முள்முடியைத் தலையிலே வைத்து அழுத்தினார்கள்; கையிலே நெடுஞ்சிலுவையைக் கொடுத்து வீதியின் வழியாக நடத்திச் சென்றார்கள். ஏசுநாதர் திருமுகம் சோர்ந்தது நாவுலர்ந்தது; கண் குழிந்தது. இத்தகைய இளைத்த மேனியில் கயவர்கள் இரும்பாணியை அறைந்தார்கள். அப்பெருந்துயரத்தைப் பொறுத்தார் ஏசுநாதர்; சிலுவையில் அறைந்து துன்புறுத்தியர்கள்மீது இரக்கமும் கொண்டார்; இறைவனை நோக்கி,

'எந்தையே! இவர் அறியாமல் செய்கின்றார்கள். இவர் பிழையை மன்னிக்கவேண்டும்' என்று பிரார்த்தித்தார். இத்தகைய இரும்பொறையையும், பெருங் கருணையையும் அழகாகப் பாடினார், கிருஸ்தவக் கம்பர் என்று புகழப்படுகின்ற கிருஷ்ணப்பிள்ளை

"தன்னரிய திருமேனி சலதைப்புண்டு தவிப்பெய்திப்
பன்னரிய பலபாடு படும்போதும் பரிந்துஎந்தாய்
இன்னதென அறிகில்லார் தாம்செய்வ திவர்பிழையை
மன்னியும் என்று எழிற்கனிவாய் மலர்ந்தார்தம்
[அருள்வள்ளல்"

என்ற பாட்டில் தீமை செய்தார்க்கும் நன்மை செய்த ஏசுநாதரை 'அருள் வள்ளல்' என்று கவிஞர் போற்றியிருப்பது பொருத்தமுடையதன்றோ?

அரிச்சந்திரனும் ஏசுநாதரும் அறநெறியிலே வைராக்கியம் பூண்டவர்கள். இதற்கு மாறாகத் தவறான வழியிலே தலைப்பட்டு, விடாக்கண்டராக நின்றாரும் உண்டு. கற்பின் செல்வியாகிய சீதையைக் கவர்ந்து சென்று சிறையில் வைத்தான் இராவணன். சீதையை மீட்பதற்ாகாக இராமன் இலங்கைமீது படையெடுத்தான்; பெரும் போர் மூண்டது. இராவணன் மைந்தனாகிய இந்திரசித்தன் இலங்கையில் நிகரற்ற வீரன். அவன் வென்று வருவான் என்று எண்ணி இறுமாந்திருந்தான் இராவணன். போர்க்களத்தில் பகைவரது திறத்தை நன்றாகத் தெரிந்த இந்திரசித்தன் இராவணன் மாளிகையை அடைந்து, மன்னனைத் தொழுது, 'ஐயனே, இன்று நடந்த போரில் நான் அரிய பெரிய படைக்கலங்களையெல்லாம் விடுத்தேன். அவை பகைவர் மீது செல்லவில்லை. ஆதலால், போருக்கு அஞ்சி இங்கு வந்துவிட்டேன் என்று கருதிவிடலாகாது. உன்பால் வைத்த ஆசையால் ஒன்று சொல்லக் கருதி வந்தேன். சிறைப்படுத்திய சீதையை விட்டுவிட்டால், நாம் சீரும் சிறப்பும் சிதையாமல் வாழலாம். பகைவர் சீற்றம் தீர்வர் நம்

நாட்டைவிட்டு நீங்குவர். பகையும் போரும் இன்றி நீ பண்புற்று வாழ்வாய். உன்பால் வைத்த அன்பினால் இதைச் சொன்னேன்' என்றான்.

அம் மொழி கேட்ட இராவணன், சிந்தை கலங்கிச் சீற்றம் தலைக்கொண்டான். எதிரே நின்ற இந்திரசித்தை நோக்கி 'பேதையே! நீ அறியாமற் பேசினாய். உன்னை நம்பி இருக்கிறேன் என்று எண்ணினாயா? என் தோள்வலியை நம்பியே சீதையை எடுத்து வந்தேன். எடுத்து வந்த மங்கையைக் கொடுத்துவிடுதல் ஈனமன்றோ? மானமே உயிரினும் பெரிது; வீரப் புகழே வாழ்வினும் விரும்பத் தக்கது.

*''வென்றிலன் என்ற போதும் வேதமுள் ளளவும் யானும்*
*நின்றுள னன்றோ மற்றவ் விராமன்பேர் நிற்கு மாயின்*
*பொன்றுதல் ஒருகா லத்தும் தவிருமோ, பொதுமைத் தன்றோ*
*இன்றுளார் நாளை மாள்வார் புகழுக்கும் இறுதியுண்டோ''*

என்று சினந்து பேசினான். அதுகேட்ட இந்திரசித்தன் குன்று முட்டிய குருவிபோல் மீண்டும் போர்க்களம் போந்தான்; அரும்போர் புரிந்து ஆவி துறந்தான். இறுதியில் இராவணனும் போர்புரிந்து மாண்டான்.

தமிழ்நாட்டில் வழங்கும் மற்றொரு சரித்திரமும் தவறான வைராக்கியத்தால் வரும் கேட்டைக் காட்டுகின்றது. சூரன் என்பவன் ஒரு பேரரசன்! வீரமகேந்திரம் என்னும் நகரில் அரசு வீற்றிருந்தான்; வானவர் நாட்டின்மீது படையெடுத்து, இந்திரன் மகனாகிய சயந்தனையும் தேவரையும் பிடித்துச் சிறை வைத்தான். அவர்களை விடுவிப்பதற்காக முருகன் படை எழுந்தது. சூரன் மகனாகிய பானுகோபன் அச் சேனையை எதிர்த்தான்; வீரவேல் கொண்டு போர் புரியும் முருகனை ஒரு நாளும் வெல்ல முடியாது என்று நன்றாக உணர்ந்தான்; சூரனிடம் சென்று, 'அரசே, இன்று மாற்றார்மீது

மாயப்படையை ஏவினேன். அதனினும் சிறந்த படைக்கலம் என்னிடம் இல்லை. அம் மாயப் படையும் பயனற்றுப் போயிற்று. நீ நெடுங்காலம் வாழவேண்டும். அரசாள வேண்டும் என்பது ஆசை. அவ்வாசையால் ஒன்று கூறுகின்றேன்; வானவரை நீ சிறையினின்றும் விட்டுவிட்டால் படையெடுத்து வந்த முருகன் நம் நாட்டை விட்டு அகல்வான்; சீற்றம் தீர்வான். உன் அரசு நீடுழி வாழும்' என்றான்.

அவ்வுரை கேட்ட சூரன் பொங்கி எழுந்தான். 'மைந்தா! என் முன்னின்று என்ன பேசினாய்? வானவரை விட்டேனென்றால் என்னை யார் மதிப்பார்? இவ்வுலக வாழ்க்கை நிலையற்றதென்பதை நீ அறியாயோ? இளமையும் செல்வமும் வீரமும் இனைய பிறவும் அழிந்தே தீரும். அழியாமல் நிற்பது புகழ் ஒன்றே. ஆதலால், என் ஆவி கொடுத்து அரும்புகழ் பெறுவேனேயன்றி, வானவரை விடுவித்து வசையினுக்கு ஆளாகி வாழ மாட்டேன்'.

*''இறந்திட வரினும் அல்லாமல் இடுக்கண்ஒன் றுறினும் [தம்பால்*
*பிறந்திடும் மானம் தன்னை விடுவரோ பெரியர் ஆனோர்*
*சிறந்திடும் இரண்டு நாளைச் செல்வத்தை விரும்பி யானும்*
*துறந்திடேன் பிடித்த கொள்கை, சூரன்என் றொருபேர் [பெற்றேன்''*

என்று எரிந்து பேசினான். அது கேட்ட பானுகோபன் அமர்க்களம் போந்து, வீரப்போர் புரிந்து ஆவி துறந்தான். பின்னர்ச் சூரனும் போர் செய்து மாண்டான். அரக்கர் தலைவனாகிய இராவணனும், அசுரர் தலைவனாகிய சூரனும் தவறான வழியில் சென்றார்கள். 'மூர்க்கனும் முதலையும் கொண்டது விடா' என்றபடி விடாக்கண்டராய் நின்றார்கள்; வீழ்ந்து ஒழிந்தார்கள்.

இனி, மத வைராக்கியம் என்பது ஒன்றுண்டு. இவ்வுலகப்

பொருட்களில் ஆசையற்று, கடவுளையே நினைந்து கசிந்து நிற்கும் நிலையே அது. திருவாசகத்தில் மாணிக்கவாசகர் இவ் வைராக்கியத்தின் தன்மையை விளக்கியருளினார்.

*''கொள்ளேன் புரந்தரன் மால் அயன் வாழ்வு குடிகெடினும்*
*நள்ளேன் நினதடி யாரொடல் லால்நர கம்புகினும்*
*எள்ளேன் திருவரு ளாலேஇ ருக்கப் பெறின் இறைவா*
*உள்ளேன் பிறதெய்வம் உன்னையல் லால் எங்கள் உத்தமனே''*

என்பது ஓர் அருமைத் திருவாசகம். இத்தகைய வைராக்கியத்தைத் தம் வாழ்க்கையிலே காட்டிய பக்தர் பலராவர். ''ஸ்ரீவில்லிபுத்தூரில் கோதை என்னும் ஆண்டாள் தோன்றினாள். இளமையிலேயே அவள் பெருமாளிடம் பேரன்பு செலுத்தினாள்; அவர் திருப்புகழைப் பாடிப் பாடிப் பரவசமுற்றாள். அவள் மங்கைப் பருவமுற்றபோது பெற்றோர் மணம் பேசத் தொடங்கினார்கள். அதையறிந்த மங்கை, 'மனிதன் எவனையும் நான் மணக்கமாட்டேன்; மணிவண்ணணாகிய பெருமானையே மணப்பேன்' என்றாள். இந்த மனத் திண்மையைக்கண்டு யாவரும் வியப்பும் திகைப்பும் உற்றார்கள். ஆயினும் அவளன்பின் திறத்தனை அறிந்த திருவரங்கப் பெருமாள் அவளை ஏற்றுப் பேருருள் இன்பமளித்தார்'' என்று குருபரம்பரை என்னும் வரலாறு கூறுகின்றது.

இனி, சிவத் தொண்டர்களில் ஒருவராகிய திருநாவுக்கரசர் கொண்ட வைராக்கியத்தைச் சிறிது பார்ப்போம். தமிழ் நாட்டிலுள்ள சிவப்பதிகளை யெல்லாம் கண்டு வணங்கிய திருநாவுக்கரசர், கைலாச மலையில் சிவபெருமான் வீற்றிருக்கும் கோலத்தைக் காண ஆசைப்பட்டார். எழுபது வயதிற்கு மேற்பட்ட முதுமைப் பருவத்தில் வடதிசையை நடந்தார்; காசியை அடைந்து கங்கையையும் விசுவநாதரையும் கைதொழுதார்; இரவு பகலாக ஊண் உறக்கமின்றி நடந்து நடந்து, கால் இரண்டும் தேய்ந்தார்; கைகளால் நடக்கத்

தொடங்கினார். கையும் தேய்ந்தார்; உடம்பினால் உருண்டு உருண்டு சென்றார்; உடம்பு தேய்ந்தார்; நகர்வதற்கு முடியாமல் வழியிலே தங்கினார். அப்போது அவ்வழியாக முனிவர் ஒருவர் வந்தார்; திருநாவுக்கரசரைக் கண்டு இரக்கங்கொண்டு, 'நீர் இங்கே எதற்காக வந்தீர்!' என்றார். 'முனிவரே! கைலாசநாதனைக் கண்டு கும்பிடும் காதலால் வந்தேன்' என்று திருநாவுக்கரசர் மறுமொழி தந்தார். அது கேட்ட முனிவர், கைலாச மலையாவது, நீர் காண்பதாவது; வானவரும் காணமுடியாத அம்மலையை மானுடராகிய நீரோ காண வல்லீர்? வந்த வழியே சென்று சொந்த ஊரைச் சேரும் என்றார். முனிவர் சொன்ன சொற்களால் நாவுக்கரசர் சிறிதும் மனம் தளரவில்லை; தம் மனவுறுதியைத் திறமாக எடுத்துரைத்தார்.

*"ஆளும் நாயகன் கயிலையில் இருக்கைகண்டல்லால்*
*மாளும் இவ்வுடல் கொண்டுமீ ளேன் என மறுத்தார்."*

முனிவராக வந்த சிவபெருமான் திருநாவுக்கரசரது வைராக்கியத்தைக் கண்டு மகிழ்ந்து, 'கைலாசக் கோலத்தைக் காட்டியருளினார்' என்று பெரிய புராணம் கூறுகின்றது.

சமய வைராக்கியம் போலவே சமுதாய வைராக்கியமும் உண்டு. தாழ்ந்தோரை உயர்த்துவோம் என்றும், தாய்மொழிக்குத் தொண்டு செய்வோம் என்றும், நாட்டின் முன்னேற்றத்திற்காக உழைப்போம் என்றும் உறுதி கொண்டவர்கள் உயர்ந்தவர்கல்லரோ? இத்தகைய வைராக்கியம் பூண்டவர்கள் பிறர் தூற்றினால் வருந்த மாட்டார்கள்; போற்றினால் மகிழவும் மாட்டார்கள். நயத்தினாலேனும் பயத்தினாலேனும் அவர் மன உறுதியை மாற்ற முடியாது. அவர்களே நினைத்ததை முடிக்கும் நீர்மையாளர் என்று திருவள்ளுவர் கூறியுள்ளார்.

*"எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்*
*திண்ணியராகப் பெறின்"* என்பது திருக்குறள்.

# 4. இந்திய மொழிகளில் தமிழ்மணம்

**தெ.பொ. மீனாட்சி சுந்தரனார்**

விடுதலைக்குப்பின் இந்தியா பண்பாட்டொருமைப்பாடு பெற்றுவருகின்றது. ஒரு மொழியில் உள்ளதனை மற்றைய மொழியில் தரத் துரைத்தனமும் முயல்கிறது. திங்கள் வெளியீடு முதலியனவும் இத்தொண்டில் ஈடுபடுகின்றன.

'செக்' மொழியிலும், ரஷ்ய மொழியிலும் தமிழ்ச் செய்யுள்களும் கதைகளும் மொழிபெயர்ப்பு வடிவில் வரும்போது இந்திய மொழியில் வருவதனைக் கூறவேண்டுமா? போப்பின் திருவாசகம், திருக்குறள், நாலடியார் முதலியவற்றின் மொழிப்பெயர்ப்புப் போன்றவை இங்கிலாந்திலும், ஆங்கிலேயர் ஈடுபாட்டிலும் எழுவதுமட்டும் அருமையாகி விட்டன.

தமிழிலிருந்து மொழிபெயர்த்து இந்திய மொழிகளில் வெளிவந்த நூல்களில் தலைசிறந்தது திருக்குறள். அது, கன்னடம், மலையாளம், தெலுங்கு, வங்காளம், இந்தி முதலிய மொழிகளில் வெளிவந்துள்ளது. பாரதியின் பாடல்களும் கதைகளும் இவ்வாறு வெளிவருகின்றன. திருப்பனந்தாள் மடத்து முயற்சியின் பயனாகச் சைவ சித்தாந்த நூற்கள் இந்தியில் நடையாடக் காண்கிறோம்; விடுதலைக்கு முன்னரே எழுந்த முயற்சி, பின்னே பெரும்பயனாக விளைந்தது ஒன்று உண்டு. அதுவே தெலுங்குச் செய்யுள் வடிவில் வந்த கம்பராமாயண மொழி பெயர்ப்பு. கம்பனை மொழிபெயர்ப்பது அருமை. எனினும் தெலுங்கு அறிந்தவர்களுக்கு கம்பனை ஒருவகையில் அறிமுகம் செய்வதற்கு இஃது உதவும் என்பதில் ஐயமில்லை.

கம்பராமாயணம், தோன்றிய நாள்முதல் மக்கள் மனத்தினைக் கவர்ந்துவரும் சிறந்த இலக்கியம், வைணவர்கள் கம்பனைத் தம் பேருரைகளில் 'தமிழன்' என்று வள்ளுவரோடு ஒருங்குவைத்துப் பாராட்டுவார். வான்மீகியின் பாடல்களுக்கும் கம்பனை ஒட்டிப் பொருள் கூறும் இடங்களும் உண்டு. சுக்கிரீவனோடு கிடந்த தாரை, இருந்தது இருந்த படியாக இலக்குவனைக் காணவரும் பகுதியை விளக்கும் நம் பிள்ளை அவர்கள், ''தன் மகனைக் காணவரும் தாய்போல்'' என்ற உவமையைக் கையாளுவது கம்பராமாயணம் கற்ற கைவன்மையே ஆகும். கோவிந்த ராசீயம் என்று வான்மீகிக்கு உள்ள உரையும் இத்தகையது எனலாம். மலையாள நாட்டில் கம்பனைச் சிவனது அவதாரம் என்று போற்றுவர். கம்பராமாணத்தை படிக்க அங்கே கட்டளைகள் உண்டு. கம்பராமாணயத்தை 32 பாவை கூத்துக்களாக்கிக் கோவில் திருவிழாவில் காட்டுவது இன்றும் வழக்கமாம். 14-ஆம் நூற்றாண்டைய கன்னடக் கல்வெட்டு கம்பராமாயணப் பிரசங்கத்தில் கைதேர்ந்தவர்களைக் குறிக்கின்றது. கம்பராமாயணக் கதை, தெலுங்கில் வந்த இராமாயணங்களில் புகாமை வியப்பே ஆகும்.

துளசிதாசர் பாடிய இந்த இராமாயணம் வடநாட்டில் தலைசிறந்து விளங்கி மக்கள் மனத்தை நீர்ப்பிண்டமாக்குவது, இதில் உள்ள பாலகாண்டம், கம்பராமாயணப் பகுதிகள் பலவற்றை நினைவூட்டும். இப்பகுதியைத் துளசிதாசர் முதலில் எழுதியபின் திருத்திப் பெருக்கினார் என்று கூறுவதுண்டு. துளசிதாசர் இராமேசுவரம் வரை யாத்திரையாக வந்துபோனவர். நேரே தமிழ்ப் பாட்டைத் தம் நூலில் புகுத்தினார் என்று சொல்வதற்கு இல்லை; தமிழ்நாட்டிற்கு வந்து போனபோது இங்கு வழங்கிய கம்பராமாயணக் கதையையும் கேட்டிருப்பார் என்று கருத இடம் உண்டு. வில் வளைப்பதற்கு முன் இராமனும் சீதையும் காதல்கொண்ட பகுதி கம்பராமாயணத்தை

நினைவுக்குக் கொண்டுவருகிறது. சுயம்வரத்திற்குமுன் இருவரும் காதலிக்கும் கதை கம்பனுக்கு முன்னும் உள்ளதே. ஆனால் துளசிதாசர் கூறுவது கம்பர் கூறுவது போலவே உள்ளது என்பதே இங்குக் குறிப்பிடத்தக்கது. குமரகுருபரர் காசியில் கம்பராமாயணப் பிரசங்கத்தை இந்தியில் செய்யும்போது துளசிதாசர் கேட்டிருந்தார் என்று சிலர் கூறுவது உண்டு. ஆனால், துளசி தாசர் தம் நூலை இயற்றிய காலம், குமரகுருபரர் வடநாட்டுக்குச் சென்றதற்கு அரை நூற்றாண்டுக்கு முந்தியேயாம் என்பதனை நாம் மனத்திற் கொள்ளுதல் வேண்டும்.

வடமொழியில் உள்ளன எல்லாம் முதல் என்றும், தமிழில் உள்ளன எல்லாம் வடமொழியின் மொழிபெயர்ப்பே என்றும் கூறும் மனப்பான்மை பிற்காலத்தே எழுந்து பேயாட்டம் ஆடிக்கொண்டிருக்கிறது. கைவல்லிய நவநீதம் என்ற தமிழ்நூலைச் சங்குகவி வடமொழியில் மொழிபெயர்த்துள்ளார் என்பர். ஆனால் உள்ளிருக்கும் ஆன்மாவைக் குசேலன் என்று நெஞ்சுக் குகையில் உள்ளதனை விளக்குவார் போலத் தமிழ் ஆசிரியர் கூற, அதனை வல்லீசன் என அவ்விடத்திற்கு ஒரு தொடர்புமின்றி மொழிபெயர்ப்பது ஒன்றுமே எது முதல் நூல் என்பதனை விளக்கிடும்.

உபமன்ய பக்த விலாசம் என்பது பெரியபுராணத்தின் மொழிபெயர்ப்பு. இதனுடைய மொழிபெயர்ப்பே பெரிய புராணம் என்று வாய் கூசாது கூறுவாரும் உண்டு. பெரிய புராணம் ''மொழிபெயர்ப்பு'' என்ற வரலாறு இதுவரையும் யாரும் கேளாத ஒன்று. இதனைப்பற்றிப் பிற இடங்களில் எழுதியுள்ளமையால் இங்கு விரித்துக்கூற வேண்டுவது இல்லை.

சிவஞானபோதச் சூத்திரங்களும் தமிழிலிருந்தே வடமொழியிற் போயின என்பதனை வடமொழிப் பன்னிரண்டாம் சூத்திரம் நன்கு விளக்குகிறது. தமிழில் பன்னிரண்டு சூத்திரமாக விளங்குவது வடமொழியில் பதினொன்றரை ஆகிவிடுகிறது.

இவ்வாறே நாலடியார் முதலியவற்றில் உள்ள பல பாடல்களையும் மொழிபெயர்ப்பென்று வாதாடுவார் பலர். இடைச்செருகலாக நுழைந்த சில அத்தகையவை ஆகலாம். பதினெண் கீழ்க்கணக்கில் பலவகையான மகன் முறைவகைககளைக் கூறுவன அத்தகையனவே, நாலடியாரில் உள்ளவை அத்தகைய அல்ல. அவை மகடூஉ முன்னிலை, ஆடூஉ முன்னிலை முதலியவற்றோடு பொருந்திவரும் அழகு தமிழ் மரபோடொப்பச் சுருங்கச் சொல்லி விளங்கவைக்கும் நுட்பம் முதலி யவற்றை நோக்க வேண்டும்.

இவையே அன்றி வியாச பாரதத்தில் இருந்து பல பாடல்கள் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டதாகக் காட்டுவாரும் உள்ளனர். இங்கே ஒன்று நினைவில் வைத்தல் வேண்டும். மகாபாரதம் ஆயிரக்கணக்கான பாடல்களிலிருந்து இலட்சக்கணக்கான பாடல்களாக வளர்ந்தது தென்னாட்டிலேயாகும். ஆகவே, அவ்வாறு வளர்ந்த புது வளர்ச்சி தமிழ்நாட்டு வளர்ச்சியேயாகும். அவ்வாறானால் தமிழ்க் கருத்தும் அங்கே புகுந்திருக்க இடமுண்டு என்பதனை மறத்தலாகாது.

சங்கரர், திங்நாகர், இராமநுசர், கிருதகோடி முதலானோர் அந்நாளைய தமிழர் என்பதையும் மறக்கலாகாது. திருமழிசை ஆழ்வாரே திருமிடாச்சாரியார் என்று வட நூற்பேருரையில் குறிக்கப்படுகிறார் என்று காலஞ்சென்ற குப்புசுவாமி சாத்திரியார் அவர்கள் கருதினார்கள். ஆகையினால். தமிழ்க் கருத்துக்கள் பல பிராகிருதம், பாலி, வடமொழி முதலியவற்றில் எழுந்த நூல்களில் புகுந்திருத்தல் வேண்டும். இந்தக் கண்ணோடு இனி ஆராய்ச்சி செய்தல் வேண்டும்.

கண்ணப்பரைச் சிவானந்த லகரியிலும், திருஞான சம்பந்தரைச் சௌந்தரிய லகரியிலும் சங்கரர் குறிக்கின்றார். அவர் திருஞானசம்பந்தர் பாட்டில் ஈடுபட்டுப் பாடுவதாகத் தெரிவதால், அக் கருத்துக்கள் அவர் பேருரையில் உள்ளனவா என்று ஆராய்தல் வேண்டும். நம்மாழ்வார் பாடலின் பகுதிகளை அங்கங்கே மொழி பெயர்த்துத் தம் பிரம்ம சூத்திரப் பேருரையில் இராமானுஜர் எழுதுகிறார்.

இராமானுஜரின் வைணவம் புதிய ஊழியை இந்தியாவில் துவக்கியது எனலாம். ஆழ்வார்களை ஒட்டி, அன்பு நெறியையும், கடவுளின் அளவற்ற அருள் நெறியையும், தொண்டர் குலமென மக்களை ஆண்டவன் புதல்வராகக் கொண்டு சமூகத் தொண்டு செய்து சாதிச் சழக்கில் விழாத பெருநெறியையும் அவர் வற்புறுத்தினார். அவர் தம் கொள்கையே இராமாநந்தர், கபீர், துக்காராம் இராமதாசர், நாகர், சைதந்யர் என்ற வடநாட்டுப் பெரியோர்கள் வழியே பெரும் புரட்சியை விளைவித்தது. எனவே, தமிழ்ப் பண்பாட்டின் பெருமையையே இங்குக் காண்கிறோம்.

பின்வந்த மணவாள மாமுனிவர்களும் இந்தப் பாதையில் இந்தியா முழுவதிலும் ஆழ்வார் பாடல்களை அவரர்கள் தத்தம் மொழியெழுத்தில் எழுதிப் பாராயணம் பண்ணும் முறையைப் பரப்பினார். பதிரிகாசிரமத்திலும், பம்பாயிலும், தெலுங்கு நாட்டிலும் இந்தக்காட்சியை இன்றும் காணலாம். உண்மையில், மணிப்பிரவாளத் தமிழில் உள்ள நூல்கள் முதலில் தெலுங்கிலேயே பதிப்பிக்கப்பெற்று வந்தன.

ஆழ்வார்கள் பாடல்களும், நாயன்மார்கள் பாடல்களும் ஒரு தன்மையனவே, 'பக்தி என்ற கன்னி தாமிரபரணிக் கரையிலும், காவிரிக்கரையிலும் பிறந்து வடநாட்டில் உலவி, குஜராத்தில் முதுமை

'அடைந்தாள்' என்று பவிஷ்யத் புராணம் கூறும் கதை, பக்தி இயக்கத்தின் வரலாற்றுண்மையைக் கற்பனைக் கண்கொண்டு காணும் காட்சியே ஆம்.

நம்மாழ்வார் பாடலின் கருத்துக்களை வேதாந்த தேசிகர் வடமொழியில் பாடி அருளினார். ஆண்டாளின் வரலாற்றை விசயநகரப் பேரரசராயிருந்த கிருட்டிணதேவராயர் ஆமுக்த மால்யதா என்ற காப்பியமாகப் பாடினார். ஆமுக்தமால்யதா என்பது சூடிக்கொடுத்த நாச்சியார் என்றே பொருள்படும்.

தமிழ்நாட்டுச் சைவப் பெரியார்களின் பெயர்களைச் சுந்தரர் திருத்தொண்டத் தொகையில் பாடியுள்ளார். இதனை நம்பியாண்டார் நம்பி, திருத்தொண்டர் திருவந்தாதி என்று விரிவாகப் பாடினார். இவர்கள் வரலாற்றைக் காப்பியச் சுவை தோன்றச் சேக்கிழார் பெரியபுராணமாகப் பாடியருளினார். கண்ணைப் பிடுங்குதல் முதியவன் தொண்டுகள் 'பாதகமே சோறு பற்றிய'வாற்றை விளக்குவன: பொதுமக்கள் பின்பற்றத்தக்கன அல்ல. பொதுமக்கள் பின்பற்றக்கூடிய மென்தொண்டுகளைச் செய்து பல சிவனடியார்கள் வீடு பெற்றுள்ள கதைகளும் அங்கு உண்டு. அத் தொண்டுகள் சமுதாயத் தொண்டாக விளங்க காண்கிறோம். தொண்டக் குலமே அங்கு விளங்குகிறது. வேறு குலத்திற்கு அங்கே பொருளில்லை. ஆண்டவனை எங்கும் காணுதலே-சிவலிங்கத்தைச் சீவனுள்ளே இலிங்கமாகக் கண்டு நடமாடும் கோயிலாக வழிபடுவதே-அங்கு அடிப்படையாக விளங்குகிறது.

இவர்களது பொதுமை அறம் வீரசைவப் பெருமக்களது மனத்தைக் கவர்ந்தது. கன்னடத்திலும் தெலுங்கிலும் பல காப்பியங்கள் இந்த அடியார்களைப்பற்றி எழுந்தன. ஹரிஹரர் கன்னடத்தில் 'ரகளை'

என்ற இலக்கிய வகையில் இந்நாயன்மார் வரலாறுகளைத் தனித் தனியாகப் பாடியுள்ளார். சதுர்ஷ்டி புராதன சரிதை (பண்டையோரது அறுபான் மும்மையோர் வரலாறு) என்ற நூல்கள் பல தோன்றின. ஹரிஹரர் தமிழ்நாட்டில் வந்து போனமை விளங்குகிறது. இங்கு வழங்கிய தமிழ்ச் சொற்களை 'நம்பி ரகளை'யில் பயன்படுத்துகிறார். அப்படியே தெலுங்கிலும் பல காப்பியங்கள் எழுந்தன. திருப்பருப்பதத்தினைப் பாடிய மல்லிகார்ச்சுனர் முதலானோர் அங்குச் சென்ற தமிழர் பேசிய பேச்சினையும் குறிக்கிறார்கள். இத்தகைய இலக்கியங்கள் வீரசைவர்களின் உயிர்நிலையாக விளங்கின எனலாம்.

சைன மதத்தில் உலகினை வெறுப்பதே முடிவு என்ற கருத்தில், சைன அரசியல் அமைய முடியுமா என்ற ஐயம் எழுவது இயல்பே. அகிம்சையை வற்புறுத்திய காந்தியடிகள் அரசியலை அறவியலாக்கியபின் இந்த ஐயம் எழுவதற்கில்லை. ஆனால், சோழப் பேரரசு புத்துயிர் பெற்று மேலோங்கியபோது சோழக்குடியில் தோன்றிய திருத்தக்க தேவர் சைனக் கொள்கையைத் தவறாது பின்பற்றும் சீவகன் பேரரசனாக வாழ்வதனை விளக்கிச் சீவக சிந்தாமணி என்ற காப்பியத்தைப் பாடித் தந்தருளினார். இந்தக் காப்பியம் முன்பெல்லாம் வடமொழி நூல்களான க்ஷத்திர சூடாமணி, சத்ய சிந்தாமணி சீவசம்பு முதலியவற்றிலிருந்தவற்றை அடியொற்றி அமைக்கப்பெற்றது என்று பேசிவந்தனர். க்ஷத்திர சூடாமணி பாடிய வாதீபசிம்மர் 12-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த இரண்டாம் இராசராசனின் அவைக்களைப் புலவராதலின், அவர் நூல் திருத்தக்கதேவர், காப்பியத்தைப் பின்பற்றியது என்பது இப்போது தெளிவாகிறது.

சைனர், பௌத்தர் முதலானோர் தமிழறிந்து தமிழை வளர்த்தது ஒருபுறமிருக்கத் தண்டி ஆசிரியர் போன்றவர்களும் தமிழ் அறிந்திருந்தனர் என்பது இப்போது புலனாகிறது. தண்டி ஆசிரியர் இராசசிம்மப் பல்லவர் அவைப்புலவர் என்பது விளங்குகிறது. அவர்

எழுதிய நூல் ஒன்றில், தமிழில் சுத்ரகர் வரலாற்றை எழுதிய சிற்பி ஒருவர் தம் நண்பர் என்று கூறுகிறார். ஆதலின், ஒருவேளை தண்டியும் தமிழ் அறிந்திருக்கலாம்; தம்முடைய அரிய நூலான காவியா தரிசத்தில் செய்யுட்களைத் தொடர்நிலைச் செய்யுள், தொகை நிலைச் செய்யுள் (அகநானூறு) முதலியவை என்றும் தொடர் நிலைச் செய்யுளைச் சொற்றொடர் நிலைச் செய்யுள் (அந்தாதி) என்றும், பொருள் தொடர்நிலைச் செய்யுள் (காப்பியம்) என்றும் பிரித்து வழங்கியது தமிழ் நூல்களில்உள்ள அந்தாதி, எட்டுத்தொகை முதலிய நூல்களை அறிந்ததாலே ஆம் என்று கூறலாம். காவியாதரிசத்தின் உரையாசிரியர்களும் தமிழ் நூல்களைக் குறிப்பிடுகின்றனர், எனவே, அணியியல் தமிழ்ச் செய்யுள் வழக்கை ஒட்டி இயங்குவதனை அங்கே காணலாம்.

இவ்வாறு பொதுவாகக் கூறலாமேயன்றி இருகருத்தை விளக்கிக் கூற மேலும் ஆராய்ச்சிகள் பல நிகழவேண்டும். பிறமொழி நூல்களைத் தமிழ் நூல்களோடு ஒட்டி ஆராயும் ஆராய்ச்சியில் தமிழர் புகுதல் வேண்டும்.

o o o

# 5. திருத்தும் கடமை

**- மு. வரதராசனார்**

வீட்டு வாழ்வு செம்மையாக இருந்தால்தான் நாட்டு வாழ்வும் செம்மையாக விளங்கும். வீட்டு வாழ்விற்கு அன்பும் அறமும் வேண்டும். நாட்டு வாழ்விற்கும் அன்பும் அறமும் இன்றியமையாதவை. வீடுகள் பல கொண்டே நாடு அமைவது. சிறு வீடுகளில் அமைதியும் இன்பமும் இல்லையானால் பெரிய நாட்டிலும் குழப்பமும் துன்பமும் மிகும். இவ்வுண்மையை உணர்ந்தே தமிழ்ச் சான்றோர் இல்லறம் விழுமியது என்று போற்றி அதனை நடத்தும் இருவரையும் தலைவராகப் பாராட்டித் தலைவன் தலைவி எனலாயினர்.

நாடு வாழ நல்லெண்ணம் கொண்ட பெரும் புலவர் வீடு வாழ வகை தேடினர். புறத்துறை பற்றிப் பல நூறு பாடல் பாடிய சான்றோர் அகத்துறை பற்றிப் பல்லாயிரம் பாடியுள்ளனர். அச் சான்றோர் கண்ட கனவுகள் பற்பல. அவற்றுள் நாட்டைப் பற்றியவை இன்றும் உலகில் நனவாகவில்லை. காரணம், அவற்றிற்கு அடிப்படையாக நாடு திருந்துவற்கு முதற் காரணமாக - வீடு திருந்தாமையே. அவர் நாட்டுவாழ்வு பற்றிக் கண்ட கனவுகள் எத்தகையவை? ஒரு நாட்டில் சோறு சமைக்கும் தீயும் செஞ்ஞாயிற்றின் வெப்பமும் தவிர வேறு தீயும் வெப்பமும் புகுந்து மக்களை வருத்தலாகாது எனக் குறுக்கோழியூர் கிழார் விரும்பினார். நாட்டு மக்கள் கண்ணில் வானவில் காணப்பட வேண்டுமே அன்றிக் கொலைவில் தோன்றலாகாது எனவும் விழைந்தார். வில் வாள் முதலிய படைகள் அறவே ஒழிந்து, கலப்பை ஒன்றே படை என்னும் பெயர் பெற்று நிலவும் நற்காலத்தைக் கனவில் கண்டார்; கருக்கொண்டு வயாவுற்ற மகளிரே மண் உண்ணும் வேட்கை கொள்ள, ஆளும் அரசர் என்போர் மண்ணாசை கொண்டு மக்களை அலைக்கும் போர்த் துன்பம் ஒழிந்த நல்லுலகைக் கற்பனையில் கண்டார்.

சோறுபடுக்குந் தீ யொடு
செஞ்ஞாயிற்றுத் தெறல் அல்லது
பிறிதுதெறல் அறியார்நின் நிழல்வாழ் வோரே
திருவில் அல்லது கொலைவில் அறியார்
நாஞ்சில் அல்லது படையும் அறியார்
வயவுறு மகளிர் வேட்டுணின் அல்லது
பகைவர் உண்ணா அருமண் ணினையே (புறம். 20)

என்னும் அடிகளில் ஓர் அரசனைப் புகழும்புகழ் மொழிகள் இருப்பினும், அவற்றின் கருத்தாய் நிலவும் கனவு உய்த்துணருமாறு அமைந்துள்ளது.

அடுதீ அல்லது சுடுதீ அறியா(து)
இருமருந்து விளைக்கும் நன்னாட்டுப் பொருநன்
(புறம். 70)

என்பது போன்ற பழம் பாடல்களும்.

வண்மை இல்லைஓர் வறுமை இன்மையால் (கம்பரா.)

என்பது போன்ற இடைக்காலப் பாடல்களும் புலவர் பெருமக்கள் கண்ட விழுமிய கனவை விளக்குவனவே. இத்துணைக் கனவும் நனவு ஆகாமை நாட்டிற்கு அடிப்படையான வீட்டு வாழ்வு திருந்தாமையால் ஆகும். ஒன்றிரண்டு குடும்பங்கள் செம்மை யுறுதல் சாலாது; வீடு தோறும் அன்பும் அறனும் நிலவும் நன்னிலை வேண்டும்.

வீட்டு வாழ்க்கை திருந்தல் வேண்டும் என்பதே தமிழ்நாட்டு அறவோர் எழுதிய அறநெறிக்கெல்லாம் அடிப்படையாக விளங்குவது.

இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்
முயல்வாருள் எல்லாம் தலை

என்றும்,

அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது

என்றும் திருவள்ளுவர் அறத்துப்பாலில் தெளிவுறுத்தியது காணலாம். உலகம் வாழ வேண்டும் என்னும் பரந்த நோக்கமாகிய அருள் ஒரு குழந்தை என்றும், தொடர்புடையார் மாட்டுக் கொள்ளும் அன்பு அதன் தாய் என்றும். அத்தகைய அன்பு அறத்தின் அடிப்படையில் இல்வாழ்க்கை நெறியில் வாழ்க்கைத் துணைநலம் அமைந்து மக்கட் பேறு வாய்த்த பின்னரே படிப்படியாக வளர்ந்தோங்கி அருளாய் மாறி நிற்பதென்றும் தெளிவாக்கியவரும் அருந்தமிழ்ச் சான்றோரே ஆவர்.

அருள்நெறிக்கு வழியாய், அன்புவாழ்வுக்கு அடிப்படையாய் அமைந்த இல்வாழ்க்கை உண்மையாகவே சிறந்து விளங்கவேண்டுமாயின், நாட்டின் ஆட்சிமுறை நன்னெறிப்பட்டதாக விளங்கவேண்டும். ஒரு சிலர் நன்மனம் வாய்ந்த புரவலராய் அமைந்திடுதலால் சிற்சில குடும்பங்களைக் காக்க முடியும். அவ்வளவிற்குமேல் பெரு நன்மை விளையாது. அன்றியும், சுற்றுப்புறத்தின் தீய அமைப்பு அப் புரவலர் குடும்பங்களையே பற்றித் தொடரினும் தொடரும். அதற்கு எடுத்துக்காட்டாகத் தமிழ் நாட்டுப் புரவலர் ஒருவரின் இல்வாழ்க்கையைச் சுட்டலாம். தமிழ் நாட்டுப் புரவலர் வண்மையின் எல்லையைக் கண்டு தம் வாழ்க்கையை விற்க முனைந்து கெட்ட ஒப்புரவாளர்; நத்தம் போல் கேடும் உளதாகும் சாக்காடும் பெற்ற வித்தகர்.

கடையெழு வள்ளல்கள் உணர்வே உருவாய பெருமக்கள்; தம் கூர்த்த அறிவெல்லாம் கொள்ளை கொடுத்தவர்; ஊர்க்கெல்லாம் இன்பம் செய்தலே வாழ்வாக வாழ்ந்தவர். அவருள், முல்லைக்கொடியின் கொழு கொம்பு பெறாத திகைப்பைக் கண்ணால் கண்டபின் தன் செல்வ

நிலையும் வாழ்வும் யாவும் மறந்து, அதற்கு உதவுதலே உணர்வாய்த் தான் ஊர்ந்து வந்த தேரை அங்கு அதற்கு உரியதாக நிறுத்தி வந்தான் பாரி என்னும் வள்ளல். இரவலர்க்குக் குதிரைகளை வழங்கி நாட்டையும் நல்கியவன் காரி என்னும் வள்ளல். நீல நிறப் பட்டாடையை ஆலமர் செல்வனுக்குச் கொடுத்து வேண்டிய பொருட்களையும் ஊர்களையும் வந்தவர்க் கெல்லாம் வழங்கி எல்லாம் இழந்தவன் ஆய் என்னும் வள்ளல். பெறுதற்கு அரிதாய் வாழ்நாள் வளர்ச்சிக்கு உரிதாய்ப் பெற்ற நெல்லிக்கனியையும் தான் உண்ணக் கருதாமல், புலவர் நெடிது வாழ விழைந்து கொடுத்து மகிழ்ந்தவன் அதியமான். நண்பர்தம் இல்லறம் நடத்திற்கு வேண்டுவன நல்கிப் புகழ் பெற்றவன் நள்ளி. கூத்தர்தம் கலை வாழ அவர்க்கு நாடு கொடுத்துக் களித்தவன் ஓரி. மயில் ஆடி அகவியதைக் கேட்டுக் குளிரால் நடுங்கிக் கூவியதாக உணர்ந்து தன் போர்வையை அதற்குக் கொடுத்தவன் பேகன்.

அவருள் பேகனின் கைவண்மையைப் புகழ்ந்த பரணர். எவ்வளவு இயலுமோ "அவ்வளவும் ஈதல் நல்லது என்பதே பேகன் கோட்பாடு. அவன் வண்மை மறுமை நோக்கியது அன்று; பிறர்வறுமை நோக்கியதே ஆகும்" என்றார்.

உடாஅ போரா ஆகுதல் அறிந்தும்
படாஅம் மஞ்ஞைக் (கு) ஈத்த எங்கோ
கடாஅ யானைக் கலிமான் பேகன்
எத்துணை ஆயினும் ஈத்தல் நன்றென
மறுமை நோக்கின்றோ அன்றே
பிறர், வறுமை நோக்கின்(று) அவன் கைவண் மையே.

(புறம். 141)

கைவண்மை மிக்க இத்தகைய வாழ்வு வாழ்ந்த பேகனிடம் ஒரு குறை வந்துற்றது. அது அவனது இல்லறத்திற்கு இழுக்குத் தரும் குறையாய் நின்றது. அதனை உணர்ந்த புலவர் மனம் குழைந்து வருந்தினார். கபிலர் பரணர் என்னும் செந்நாச் செல்வங்கள் வருந்தின. அரிசில்கிழார். பெருங்குன்றூர் கிழார் என்னும் புலமையுள்ளங்கள் வருந்தின. இப் பேரறிஞர் பேகனிடம் சென்று தத்தம் மனத்துயரை எடுத்துரைத்தனர்.

மனத் துயர்க்கும் காரணம் என்ன? புலவர் பசியோ? அன்று. புலவர்க்கு இயல்பானது என அறியாது கூறும் வறுமையோ? அன்று. வரிசை அறியாது பரிசில் கொடுத்தவன்குறையோ? அன்று. கொடுத்த பரிசில் குறையுடையது என்னும் குறையோ? அதுவும் அன்று. காணாது கொடுத்த பரிசில் என்னும் மானம் பற்றியதோ? அன்று. அன்பின்றிக் கொடுத்தது என்னும் குறையோ? அன்று. தவிந்து விடு பரிசில், காலம் நீட்டித்துக் கொடுத்த பரிசில் என்னும் குறையோ? அன்று. தம் நாட்டார் வாழும் வயையான நல்லுதவி பெறாக்குறையோ? அதுவும் அன்று. பேகனது வாழ்நாளுக்குத் தீது ஏதேனும் கண்டு வருந்திய வருத்தமோ? அதுவும் அன்று.

பசித்தும் வாரேம் பாரமும் இலமே (புறம். 145)

எனப் பரணர் பாடியதும்

அன்ன ஆகநின் அருங்கல வெறுக்கை
அவைபெறல் வேண்டேம் அடுபோர்ப் பேக (புறம். 146)

என அரிசில்கிழார் அறிவுறுத்தியதும் காணலாம்.

புலவர்தம் மனத்துயர்க்குக் காரணம் பேகனது இல் வாழ்க்கையில் நேர்ந்த இழுக்கேயாகும். மயிலின் துன்பம் எனத் தவறாக எண்ணியதைத் தீர்க்கும் பொருட்டுத் தன் படாத்தினை அதற்கு ஈந்துவிட்டு வந்த அருளாளன். தன் வாழ்க்கைத் துணைவி வருந்தக் கைவிட்டுப் பிறள் ஒருத்தியோடு வாழ்வானாயினன். கண்ணகி என்னும் பெயர் வாய்ந்த அத்துணைவியோ கண்ணீர் சொரிந்து நைந்து அழிவாளாயினள். இந்த நிலையினை உணர்ந்த புலவர்மனம் வாளாயிருத்தலும் கூடுமோ? அருளை வளர்ப்பது காதல் வாழ்வு. அருளாளனாகிய பேகன் இன்று காதல் வாழ்விற்கு இழுக்குத் தேடி அன்பு துறந்து வாழும் வாழ்வு புலவரின் கருத்தைக் கலக்கிற்று. பரிசில் பெறுதல், வரிசை விழைதல் முதலிய காரணம் ஒன்றும் இன்றியே பேகனை நாடிச் சென்று தம் மனத்துயரை எடுத்துரைத்தனர்.

கைவண்மை சான்ற பேக! நேற்று அரு வழி நடந்து வருந்தி வந்த சுற்றத்தின் பசியைப் போக்க வேண்டி. உன் சீறூர் எய்தி உன் வாயிலில் வாழ்த்தி நின்றேன்; உன்னையும் உன் மலையையும் பாடினேன். அதனைக் கேட்டவுடனே, துன்பம் மிகுந்து கண்ணீர் சொரிந்து அதனை நிறுத்தவும் ஆற்றாளாய். விம்மி விம்மி மிக அழுதாள்; அவளது அழுகுரலும் குழலின் துன்ப இசைபோல் இருந்தது! அவள் யாரோ? இரங்கத் தக்கவளாய் இருந்தாள் என்கிறார் கபிலர்.

கைவள் ஈகைக் கடுமான் பேக!
யார்கொல்? அளியள் தானே! நெருநல்
சுரன்உழந்து வருந்திய ஒக்கல் பசித்தெனக்
குணில்பாய் முரசின் இரங்கும் அருவி
நளியிருஞ் சிலம்பின் சீறூர் ஆங்கண்
வாயில் தோன்றி வாழ்த்தி நின்று

நின்னும்நின் மலையும் பாட இன்னா(து)
இகுத்த கண்ணீர் நிறுத்தல் செல்லாள்
முலையகம் நனைய விம்மிக்
குழலினை வதுபோல் அழுதனன் பெரிதே. (புறம். 143)

புலவர் முயன்ற முயற்சியிலும் அதற்குக் காரணமான நல்லெண்ணத்திலும் நாகரிகம் விளங்குதல் போலவே, அவர் மொழிந்த மொழியிலும் நாகரிகம் விளங்குகின்றது. பேகனுடைய துணைவியாகிய கண்ணகியே எனத் தாம் அறிந்திருந்து, அறியார் போன்று, "யார் கொல்?-அந்த அம்மை யாரோ"? என்றார். பின்னர் "யாராக இருப்பினும் என்ன? அவள் நிலை இரங்கத் தக்கது" என்றார். தன் மனைவியாதலின் பரிந்து பேச வந்தார் புலவர் என்ற எண்ணம் பேகனுக்குத் தோன்றாதவாறு, "யாரோ? யாராக இருப்பினும் என்ன? அவள்நிலை மட்டும் காணினும் அமையுமே! தலைவன் குடும்பத்தாளாயினும் பிற குடும்பத்தாளாயினும் அவள் உண்மையாகவே நைந்து விம்மி அழுதிடும் அழுகை எவர் மனத்தையும் கரைந்துருகச் செய்யும்! ஆதலின் இரங்கத் தக்காள்" என மொழிந்து வள்ளலின் உள்ளத்தை மாற்ற முயன்றார். தொடர்புடையார் மாட்டுத் தோன்றும் அன்பினும் தொடர்பில்லார் மாட்டுத் தோன்றும் அருள் பெரிதாய் உணர்வு சிறந்தோங்கிய வாழ்வு வாழ்ந்த பேகனைத் திருத்த இதனினும் சிறந்த வழி வேறு அருளுணர்வு எழச் செய்த புலவர், பிறகே தாம் கண்ட காட்சியை எடுத்துரைக்கத் தொடங்கினார். "யான் பாடியது உன்னையும் உன் மலையையும். அப் பாடலைக் கேட்டதும் ஒருத்தி அழக் காரணம் என்ன? அவள் உனக்கும் உன் மலைக்கும் தொடர்புடைய ஒருத்தியே ஆதல் வேண்டும். உன் நினைவால் அவள் உள்ளத்தில் துன்பம் மிகுந்த காரணம் யாதோ?" என்னும் கருத்துக்கள் பெற அவள் அழுத அழுகையைக் கூறினார். "உன்னால் துறக்கப்பட்டதே காரணம்" எனக் குறிப்பால் புலப்பட வைத்த பின்னர்,

அவ்வாறு நீ துறக்கக் காரணம் இல்லையே! துறத்தற்குத் தகாத இளமையுள்! அந்தோ என்னும் கருத்துப்பட மொழிந்தார். அவள் உள்ளம் அழிந்து உடல் மெலிந்து அழுத காலத்தும், அவளுடைய குரல் குழலின் இனிமையைப் பெற்றிருந்ததாகக் குறித்து ''குழல் உருக்கமாக இசைப்பது போல் அழுதனளே'' என்றார்.

கண்ணகியின் இளமையும், பேகனை நினைவூட்டிய அளவில் அந் நினைவு அவளை வருத்திய துயரும், துயர் ஆற்றாது அவள் விம்மி விம்மி அழுத அழுகையும், அவளை அறமின்றித் துறந்த பேகன் கொடுமையும் உயிர்க்கெல்லாம் இன்பம் செய்யும் வள்ளல் தன் வாழ்க்கைத் துணைவிக்குத் துன்பம் செய்தல் தகுதியன்று என்னும் உண்மையும், அவள் எத்தகையவள் ஆயினும் இரங்கத்தக்காள் என்னும் இரக்க உணர்வும், தன் துணைவி என்னும் காரணம் பற்றி அன்பு செய்யத் தவறினாலும் யாரோ ஒருத்தி என்று எண்ணியேனும் அருள் செய்தல் வேண்டும் என்னும் கடமையும் ஆகிய அனைத்தும் அறிந்து திருந்துமாறு செறுத்த செய்யுட் செய்த செந்நாப் புலவர் பாடல் இது.

பரணர் கண்ணகி காரணமாக இரண்டு பாடல் பாடித் தம் கருத்தை வெளிப்படையாகக் கூறினார். தொடக்கத்திலேயே, ''அருளாள் நீ அருளை மறந்தது கொடுமை'' என்றார். ''பேக! யாம் யாழிசைத்து உன் கானம் பாடி உன் வாயிலிற் சென்று நின்றோம். அவ்வளவில், நெய்தல் மலரன்ன கண்களில் நீர் சொரிய, அணி கலன் நனைய ஓயாது அழுதாள். அழுகையைக் கண்டயாம். 'அம்மா நீ எம் நண்பன் பேகனுக்கு உறவோ?' என்று தொழுது வினவினேம். அந்த அம்மையோ, காந்தாள் முகை போன்ற அழகிய விரலால் கண்ணீரைத் துடைத்துக்கொண்டு, 'யாம் அவனுக்கு உறவு அல்லேம். அவன் வேறு ஒருத்தியின் அழகை நச்சி வாழ்ந்து வருகின்றானாம் என்றுரைத்தாள் என்றார்' புலவர்.

அருளாய் ஆகலோ கொடிதே! இருள்வரச்
சீறியாழ் செவ்வழி பண்ணி யாழநின்
காரெதிர் கானம் பாடினேம் ஆக,
நீள்நறு நெய்தலின் பொலிந்த உண்கண்
கலுழ்ந்துவார் அரிப்பனி பூணகம் நனைப்ப
இனைத லானாள் ஆக, 'இளையோய்!
கிளையை மன்எங்கேள் வெய் யோற்(கு)' என
யாம்தன் தொழுதனம் வினவக், காந்தள்
முகைபுரை விரலின் கண்ணீர் துடையா
யாம் அவன் கிளைஞரேம் அல்லேம்' கேள்இனி
எம்போல் ஒருத்தி நலன்நயந்(து) என்றும்
வரூஉம் என்ப வயங்குபுகழ்ப் பேகன்
ஒல்லென ஒலிக்கும் தேரொடு
முல்லை வேலி நல்லூ ரானே! (புறம். 144)

நெய்தல் மலர்போல் பொலிந்த மையுண்டகண் என்றும், காந்தள் முகை போன்ற விரல் என்றும் கூறிக் கண்ணகியின் அரிய இளமையை விளக்கிய புலவர், அந்த அம்மைமீது தவறு இல்லை என்பதனையும், தவறு பேகன் கண்ணதே என்பதனையும் தெளிவாய் எடுத்துரைத்தார். 'உன் கானம் பாடிய அளவில் அழுத அம்மையை யான் கண்டு தொழுதேன் தொழுதே கேட்டேன்' எனக் கண்ணகியின் தோற்றத்தில் விளங்கிய பெருமையும், ஒரு தலைவனுக்குத் துணைவியாகும் தலைமை அவள்பால் விளங்கிய விளக்கமும் தெளிவாக்கினார். பேகன் தன்னைக் கைவிட்டுத் துறந்த கொடுமையைக் கடுமை சிறிதுமில்லா நற்சொல்லால் எடுத்துரைத்த கண்ணகியின் உரை கொண்டு அவளது அன்பின் பெற்றியையும் அறிவின் திறத்தினையும் புலவர் புலப்படுத்தினார். இவ்வளவு உண்மையையும் தம் உள்ளம் உணர்ந்தமையால், உறுதி கொண்டு "பேக! கொடுமை உனதே" எனக் கடியும் கூற்றை முதலி லேய அமைத்து "அருளாய் ஆகலோ கொடிதே" என்றார்.

பேகன் தன் குற்றம் உணர்ந்தும் உடனே திருந்தானாய்த் தயங்கியிருந்து, "புலவர் மணியே! என் பரிசிலை ஏற்றருள்க" எனப் பரிசில் வழங்க முற்பட்டான் போலும்! பரணரோ, அதனை ஏலாது, "மயில் குளிரால் நடுங்குகின்றது என எண்ணி, அதற்குப் படாம் ஈந்து அருள் செய்த கெடாப் புகழோய்! பசியால் வருந்தி வந்தேம் அல்லேம். சுற்றத்தைக் காக்கும் கடமையைக் கருதியும் வந்தேம் அல்லேம். ஆயினும், யாம் யாழ் இசைத்துப் பாடி உன்பால் இரந்திடும் பரிசில் ஒன்று உளது. அதுவே எமக்குப் பரிசிலாக வேண்டுமே அன்றிப் பிறிதில்லை. நீ அருள் ஆள்வாய்! அருளை விரும்பிப் போற்றும் வாழ்வு உடையாய்! அறம் செய்தருள்க என வேண்டுகின்றோம். மணியொலிக் கும் நெடுந்தேர் ஏறிச் சென்று துன்புறுவாய் வாழும் உன் துணைவியின் துயர் களைந்தருள்க. இதுவே யாம் இரந்த பரிசில்" என்றார்.

மடத்தகை மாமயில் பனிக்குமென்(று) அருளிப்
படா அம் ஈத்த கெடா அ நல்லிசைக்
கடாஅ யானைக் கலிமான் பேக!
பசித்தும் வாரேம் பாரமும் இலமே;
களங்கனி அன்ன கருங்கோட்டுச் சீறியாழ்
நயம்புரிந் துறையுநர் நடுங்கப் பண்ணி
அறஞ்செய் தீமோ அருள்வெய் யோய்என
இஃதுயாம் இரந்த பரிசில் அஃ(து) அருளின்
இனமணி நெடுந்தேர் ஏறி
இன்னா(து0 உறைவி அரும்படர் களைமே (புறம். 145)

கண்ணகி என்னும் இல்வாழ்மயில் கண்ணீர் கலங்கி விம்மிப் பனித்தலைக் களைதல் வேண்டும் என்னும் நினைவு மிகுமாறு, கான மயிலுக்கு நடுக்கம் நீக்கக் கருதிப் படாம் ஈந்த புகழ்ச் செயலை நினைவூட்டினார். அருளை விரும்பியவன் என்பதை நினைவூட்டி "அருள்

வெய்யோய்'' என விளித்து அறம் செய்யுமாறு வேண்டினார். ''இரந்த எல்லாம் அளிக்கும் கைவண்மையைக் காட்டுவாயாக. இதுவே யாம் இரந்தது'' என இரந்தார். இறுதியில் ஓரடியில் கண்ணகியின் கடுந்துயரை அவன் உள்ளத்தே பதிய வைத்திடுமாறு, ''இன்னா துறைவி'' என்றும், ''அரும்படர்'' என்றும் எடுத்துரைத்தார். படர்களைகநினைந்து நினைந்து வருந்தும் துயர் களைக - என வேண்டினார்.

அரிசில்கிழார் என்னும் புலவரும் பேகன் அளித்த பரிசிலை மறுத்து, 'உன் செல்வமாகிய அணிக்கலன்கள் பெறுதலை யாம் விரும்பவில்லை. என்னை விரும்பிப் பரிசில் நல்குவாய் ஆயின், யான் கூறுவது கேட்க' என்று கண்ணகியின் துயரைப் போக்கி அன்பு செலுத்துமாறு வேண்டினார்.

அன்னஆக;நின் அருங்கல வெறுக்கை
அவைபெறல் வேண்டேம்; அடுபோர்ப் பேக!
சீறியாழ் செவ்வழி பண்ணிநின் வன்புல
நன்னாடு பாட என்னை நயந்து
பரிசில் நல்குவை ஆயின், குரிசில்!நீ
நல்கா மையின் நைவரச் சா அய்
அருந்துயர் உழக்கும்நின் திருந்திழை அரிவை
கலிமயிற் கலாவம் கால்குவித் தன்ன
ஒலிமென் கூந்தல் கமழ்புகை கொளீஇத்
தண்கமழ் கோதை புனைய
வண்புரி நெடுந்தேர் பூண்கநின் மாவே (புறம். 146)

கண்ணகியின் துயரம் எல்லாம் பேகன் அருளின்றித் துறந்த காரணத்தால் ஆகியதே என்பதைப் புலவர் தெளிவாக்கக் கருதி, "நீ நல்காத காரணத்தால் நைந்து மெலிந்து அருந்துயர் உழக்கின்றாள்" என்றார். "நீ தேர் ஏறிச் செல்லவேண்டும் அத் தேர்க்குக் குதிரை பூட்டுக. நீ சென்று அருளினால் அத் துணைவி தன் துயர் மறத்தல் திண்ணம். துயர் எல்லாம் மறந்து பண்டு போல் வாழத் தொடங்குவாள். தன்னைப் புனைந்துகொள்வாள். பேக! அவளது கூந்தல் உன் கண்ணிற் படவில்லையோ? அக்கூந்தல் நறும் புகை மறந்து, மலர்க்கோதை துறந்து இருக்கின்றதே. அதற்குப் புகையும் பூவும் பண்டு போல் வாய்க்க வேண்டுமானால் நீ செல்லல் வேண்டும்" என்றார். அதனையும் அவனுக்கு உளங்கொளக் கூறல் வேண்டும் என்னும் நோக்கு உடையராய், "கானத்தில் ஐயறிவு உயிராய்த் தோகை விரித்து ஆடிய மயிலைக் கண்டு மனமுருகி அருள் செய்தாயே! உன் துணைவியின் கூந்தலை வளமிக்க மயில்தோகை எனக் காணும் கண் பெற்றிலையோ! அத்தோகை போல் தழைத்த மெல்லிய கூந்தலைக் கண்டு உருகி அருள் செய்யும் மனம் பெற்றிலையோ! என்னும் குறிப்போடு, "கலிமயில் கலாவங் கால்குவித் தன்ன ஒலிமென் கூந்தல்" எனச் சிறப்பித்தார். அக் கூந்தல் புகையும் பூவும் பண்டே போல் பெறச் செய்யும் எண்ணம் கொண்டு இங்கிருந்து இல்லத்திற்குத் தேரேறிச் செல்லுதலே தம் பரிசிலென வேண்டினார்.

பெருங்குன்றூர் கிழார் என்னும் புலவரும் கண்ணகியின் கூந்தலைக் குறித்தே தம் வேண்டுகோளை விடுத்தார். "ஆவியர் கோவே! உன் துணைவியின் கூந்தல் நெய் துறந்து மறந்து பன்னாள் ஆயின. ஆயினும் அதன் இயற்கையழகு இளமை மிகுதியால் கெடவில்லை. மாசு சூழ்ந்த மணிபோல் உள்ளது; அவள் தன் துயரம் நீங்கி நலம்பெறப் புனையத் தொடங்கி நீரால் மண்ணுதல் பெறின்,

மாசற்ற மணியென விளங்கலாகும்; புது மலரும் சூடிப் பொலியும்; இன்று அந் நல்லருள் கொண்டு உன் மனைக்குத் திரும்பிச் செல்லுக. அதுவே எமக்கு வேண்டும் பரிசில் என்றார்.

கன்முழை அருவிப் பன்மலை நீந்திச்
சீறியாழ் செவ்வழி பண்ணி வந்ததை
கார்வான் இன்னுறை தமியள் கேளா
நெடுநல் ஒருசிறைப் புலம்புகொண்டு(டு) உறையும்
அரி:மதர் மழைக்கண் அம்மா அரிவை
நெய்யொடு துறந்த மையிருங் கூந்தல்
மண்ணுறு மணியின் மாசற மண்ணிப்
புதுமலர் கஞல இன்று பெயரின்
அதுமன் எம் பரிசில் ஆவியர் கோவே. (புறம். 147)

"இன்று பெயர்க" என்னும் புலவரின் வேண்டுகோளில் துணிவு தெளிவுமான கருத்து விளங்குகின்றது. "இங்கிருந்து நீ செல்க" என்று கூறுவதோடு அமைந்திருப்பின் "செல்லின்" என்னும் சொல் பெய்திருப்பர். ஆயின் "உன் மனை அதுவே. உன் வாழ்வும் அங்கே விளங்கல்வேண்டும்" என்னும் அறிவுறுத்தல் 'பெயர்தல்' (திரும்பிச் செல்லுதல்) என்னும் சொல்லில் அமைந்து கிடக்கின்றது. முழையும் அருவியும் மிக்க பல மலைவழிகளை யெல்லாம் அரிதின் கடந்து வந்ததை- நீந்துவார் போல் கைகால் மார்பு முதலிய பல உறுப்பாலும் குனிந்தும் சார்ந்தும் தவழ்ந்தும் அரு முயற்சியோடு வந்த வரவை எடுத்துக் கூறி, இத்தகைய வரவு இப் பரிசில் கருதியதே என வற்புறுத்தினார். "அதுமன் எம் பரிசில்" என்றவர், இத்தகைய பரிசிால வேண்டாதே தரும் குடிப்பெருமையும் நினைவூட்டி, "ஆவியர் கோவே" என்றார். இடையே கண்ணகியின் கட்டழகும் இளமைச் சிறப்பும் சிறு சிறு தொடர்களால் விளங்கச் செய்தார். தமியள்கேளா,

நெருநல் ஒரு சிறைப் புலம்பு கொண்டு உறையும் அரிவை" என்றபோது, "ஒரு செல்வத் தலைவன் - ஆவியர்கோ - சிறந்த வள்ளல் ஒருவனுக்கு வாழ்க்கைத் துணையாய் வந்தவள் தனிமைத் துன்பமுற்றுப் பெருமலையின் மூலையில் பொலிவின்றி வாழ்தலைச் சுட்டிப் பேகன் தலைமைக்கு நேர்ந்த இழுக்கை வெளிப்படுத்தினார்.

இப் புலவர் பெருமக்கள் பேகனிடம் இவ்வாறு உரைத்த வேண்டுகோள்களில் பேகன் இழைத்த பெருங்குற்றத்தை நயமான வகையிலும் தெளிவான முறையிலும் கரவாமல் எடுத்துரைத்த திறம் போற்றத் தக்கது. "ஈ என இரத்தலோ அரிதே" என்னும் பெருமிதப் புலவர் மரபில் வந்தவர், "இஃது யாம் இரந்த பரிசில்" என்று இரந்ததும் போற்றத் தக்கதே. பழுமரந்தேரும் வாவல் (வௌவால்) போல் பரிசில் தரும் செல்வரை நாடிச் செல்லும் வாழ்க்கையினர் புலவர் என்று காண்கின்றோம். ஆயினும், செல்வர், வறியர் என்று பகுத்த பகுப்புக் கொண்டு அவர்கள் பொருள் தருவோரை நாடிச் செல்லவில்லை. நல்லோர் அல்லோர் என்றே பகுத்து நாடிச் சென்றனர். நல்வாழ்க்கை உடையவர் தரும் பொருளையே அவர் விரும்பிப் பெற்றனர். ஏனையோரின் செல்வத்தை அவர் மதித்தார் அல்லர்.

பேகன் நல்வாழ்க்கை உடையவன் என்பதற்கு வேறு சான்று வேண்டா; கான மயிலைக் கண்டிரங்கி அருளிய அருட் செயல் ஒன்றே அவனது வாழ்க்கைச் சிறப்பிற்குச் சான்றாக அமையும். அதுபற்றியே புலமையாளர் அவனைச் சூழ்ந்து அவன் தரும் பொருளைப் பெற்று உவந்தனர். அத்தகைய அருள் வாழ்வில் பெருங்குறை கண்டபோது கண் மூடியிருக்கப் புலவர் மனம் பொறுக்கவில்லை. ஒன்று, அவன் வாழ்க்கையைத் திருத்த வேண்டும்; அல்லது அவனை அணுகாது துறத்தல் வேண்டும். நன்றி மறவா நெஞ்சத்தினர் ஒருகாலும் பின்னது செய்ய இசையார். முன்னதே செய்ய முற்படுவர்.

புலவர் நன்றி மறவா நெஞ்சத்தினர். அவர் இத்தகையார் என்பதற்கு ஆலந்தூர் கிழார். என்னும் ஒருவர் கிள்ளி வளவனைப் பாடிய ஒரு பாடலே சான்றாய் அமையும். எத்தகைய தீங்கு இழைத்தார்க்கு கழுவாய் உண்டு; ஆயினும் நன்றி மறந்தோர்க்கு உய்வு இல்லை என்றார் அவர்.

நிலம்புடை பெயர்வ தாயினும் ஒருவன்
செய்தி கொன்றோர்க்(கு) உய்தி இல்லென
அறம்பா டின்றே ஆயிழை கணவ!
காலை யந்தியும் மாலை யந்தியும்......................
எங்கோள் வளவன் வாழ்க என்றுநின்
பீடுகெழு நோன்தாள் பாடேன் ஆயின்
படுபறி யலனே பல்கதிர்ச் செல்வன் (புறம். 34)

புரவலர் செய்த நன்றியைப் புலவர் மறத்தலோ இல்லை. ஆயின், அதுபொருட்டுப் புரவலர் செய்வன எல்லாம் போற்றிப் புகழும் கண்மூடி வாழ்வும் அவர்பால் காண்பது அரிது. பொருள் பொருட்டாக அப் புரவலரின் நட்பைக் கொண்டு அவர் தவறும்போது மறந்திருக்கும் தன்மை உணர்வு மிக்கவர்க்கு உளதாகுமோ? நகுதற் பொருட்டே அவர் நட்பு எனக்கொண்டு அமைந்திடாமல், மிகுதிக்கண் மேற்சென்று இடித்துரைத்தற் பொருட்டும் ஆகும் எனத் துணிந்தவர் அவர், அவ்வாறு தவறு கண்ட இடத்துக் கடிந்துரைத்தலால் புரவலர் மனம் நோகுமே எனக் கவலையுற்றார் அல்லர். பெறும் பொருளே பெரிது எனக் கருதி நாடும் கயவராயின். புரவலர்நெஞ்சம் வெறுப்புறுமே எனத் தயங்கியிருப்பார். புரவலர் பொருளைப் பெரிதெனப் போற்றது, பூரியர்கண்ணும் பொருட் செல்வம் இருத்தலை உணர்ந்து, அதனை அதன் பொருட்டாகவே மதியாது. அருட் செல்வத்தினையே பெரிதெனப்

போற்றி, அருளின் பொருட்டாகவே மதித்தனர். ஆதலின் புரவலர் செய்யும் தவறு எடுத்துரைத்தால் அவர் நெஞ்சம் திருந்தின் நலம்; திருந்தாவிடில் கவலை வேண்டா என்னும் துணிவு கொண்டு வாழ்ந்தனர். புரவலர் வெறுத்து நீக்கினராயின், அப்போதுதான் வேறொரு பழுமரந் தேடி வாவலெனச் சென்றனர். அந்நிலையிலும் நன்றி மறவா உள்ளத்துடனே சென்றனர்.

இவ்வாறு தவறு கூறிக் கடியும் வகையில் புரவலரது பொதுவாழ்க்கையில் - புறவாழ்க்கையில் - சேர்ந்த குறைகளைக் குறிப்பிடல் ஒரு வகை. அதுவும் அருமை உடையதே. ஆயின் அதனினும் அருமை மிக்கது மற்றொருவகையானது. அதாவது புலவரது இல்வாழ்க்கையில் அக வாழ்க்கையில் - நேர்ந்த குறைகளைக் குறிப்பிடல். இத் துறையில் பேகன் செய்த தவற்றினைத் தயங்காமல் எடுத்துரைத்த கபிலர் முதலானோரை என்னென்று போற்றுவது. உண்மைப் புலமை என்னும் ஒன்று மக்களுக்குரிய நற்பண்பு பலவும் விளங்குமிடத்தே வாழ்வது என உணர்வோமாக. புலவரைச் சான்றோர் என்று போற்றுவோமாக.

0-0-0

# 6. வாழ்வாங்கு

**- வ.சுப. மாணிக்கம்**

'வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன்' என்று ஒரு திருக்குறள் தொடங்குகிறது. ஏனைக் குறள் எல்லாம் இக்குறளின் விளக்கம் என்று சொல்லலாம். இக் குறளில் 'வாழ்வாங்கு' என்று ஒரு புதிய சொற்சேர்க்கை செய்வர் வள்ளுவர். வாழ்வாங்கு வாழ்பவன் என்பதற்கு வாழும் முறைப்படி வாழ்பவன் என்பது பொருள். வாழ்வுக்கு ஒரு முறையுண்டு. உயிரோடிருப்பினும், அம்முறை தழுவி ஒழுகும்போதுதான் வாழ்வு எனப்படும். 'பொய்யனேன் நான் உண்டு உடுத்து இங்கு இருப்பதானேன்' 'எனவும் ஊனார் புழுக்கூடு இது காத்து இங்கிருப்பானேன்' எனவும் மணிவாசகர் வெற்றிருப்பை இகழ்வார். எப்படியேனும் காலங்கழிக்க எண்ணுவது வாழ்வு ஆகாது. ஒருவன் சாகாதிருப்பதனால் அவன் வாழ்கின்றான் என்று சொல்லி விடலாமா? சாதலும் சிலருக்கு வாழ்வு தரும். மானத்தைக் காக்க வேண்டும் என்ற நிலைபற்றி அறம் சொல்லும் போதெல்லாம் உயிரை ஓர் ஈனப்பொருளாக அவமதிக்க வேண்டும் என்பர் வள்ளுவர். உயிர் தானே போகாவிட்டால், வலிந்தாவது போக்கிக் கொள்ளலாமே என்பர். 'உயிர்நீப்பர் மானம் வரின்' என்ற தொடரில் நீப்பர் என்ற பிறவினை - வல்வினை ஆட்சியைக் காண்க.

பெருமை பெருஞ் சிறுமைப்பட்டபோது உடலைப் பேணிக் கொண்டு உலகை விடாதிருத்தல் ஒரு வாழ்வா? மதியாதாரின் பின்சென்று அடிமையாக வாழ்வதைக் காட்டிலும் உயிர் விட்டொழிதல் நன்றல்லவா? இவ்வாறு வாழ்வுக்கு மானமருந்து தருவர் வள்ளுவர். இதன் குறிப்பு என்ன? இறக்க வேண்டும் அல்லது இறப்பித்துக் கொள்ள வேண்டும் என்பதுவா இப்பேராசான் கருத்து? மனிதப் பிறப்பு பெறுமவற்றுள் அரிய பிறப்பு என்று பாராட்டிய வள்ளுவப் பெருமகன், அரிய உடம்பைப் பெற்றவன் அளவறிந்து உண்டு ஓம்பி நெடிது வாழ்க

என்று வாழ்த்திய அப்பெருமான் நாம் இறக்கவும் மடியவும் மாளவுமா தெய்வக் குறள்கள் எழுதினார்? நாமெல்லாம் இவ்வுலகில் வாழ்வாங்கு வாழவேண்டும். பின்னர் வானுறையும் தெய்வங்களாக வழிவழி மக்களால் போற்றப்பட வேண்டும் என்பதுவே அவர் நன்னெஞ்சம்.

## தனி வள்ளுவங்கள்

வாழ்வுக்கு முறை இன்றியமையாதது என்றால், அம் முறை என்பது என்ன? முறை ஒன்றா? பலவா? ஆளுக்கு ஒரு முறையா? பலருக்குப் பன்முறையா? திருக்குறள் கூறும் வள்ளுவம் ஒன்றன்று, பலவினும் பல. மக்கள் மனிதப் பிறப்பு என்ற இன வகையில் ஒன்றாக இருந்தாலும் பண்பால் நினைவால் அறிவால் ஆசையால் கல்வியால் பொருளால் முயற்சியால் உறவால் நட்பால் பகையால் பருவத்தால் உருவத்தால் உடற்கூற்றால் இன்னும் எத்தனையோ பிரிவால் வேற்றுமைப்பட்டவர்கள். இவ்வேற்றுமையை என்றுமுள வேற்றுமையாகக் கொண்டு வள்ளுவங்கள் கூறுவது திருக்குறள். சுருங்கச் சொல்லின், முறைகளின் தொகுதியே திருக்குறள். ஒருவனுக்கே அவன் பல நிலைகளுக்கு ஏற்பப் பன்னெறிகள் மொழிவது திருக்குறள். மனித வாழ்வில் பல நிலைகள் உண்டு என்று கண்டு உணர்ந்து அவற்றுக்கெல்லாம் பலவழிகள் காட்டிய சிறப்பே குறளின் சிறப்பு. இவ்வடிப்படையைக் கடைப்பிடித்துத் திருக்குறளைக் கற்க முனைபவர் ஒவ்வொரு தனி மனிதனுக்கும் உரிய தனி வள்ளுவங்கள் எத்தனையோ உண்டு என்று புரிந்து தேர்ந்து எடுத்துக் கொள்ள முடியும்.

## பொருள் வாழ்வு

திருக்குறள் காட்டும் பல்வேறு நிலைகளை மூன்று பெரும் பிரிவாக்கலாம். யார்க்கும் இவ்வுலகில் பொருள் வேண்டும்; யாவர்க்கும் அறிவு வேண்டும்; எவர்க்கும் பண்பு வேண்டும். இம்மூன்றில் பொருள் பற்றிய முறைகளை விரிவாகப் பார்ப்போம்.

மனிதன் பிற உயிரினங்கள் போல இயற்கையோடு நெருங்கி இயைந்து வாழ்பவன் இல்லை. இயற்கையொட்டி இல்லை. இயற்கை விலகியாக வளர்ந்து கொண்டே அகல்கின்றான். செயற்கை மயமே நாகரிக வளர்ச்சியாகக் கருதப்படுகின்றது. செயற்கை பெருகப் பெருகக் குழுவாயக் கூட்டுறவு பெருகல் வேண்டும். நன்கு வாழ விரும்பும் மாந்தன் இக் கூட்டுறவைப் பெருக்கிக் கொள்ளவேண்டும். இக் கூட்டுறவு எதனால் எளிதில் உண்டாகும்? பொருளால் உண்டாகும் என்று கண்டவர் வள்ளுவர்.

ஆகாது எனினும் அகத்துநெய் உண்டாகின்
யோகாது எறும்பும் புறஞ்சுற்றும் (நாலடி. 337)

பாத்திரத்தினுள் நெய் இருப்பின் உறவாட எறும்புக்கூட்டம் திரளும் என்று நாலடியார் சொல்லுமாப் போல், பொருளாளிக்கு நட்புப் பெருகும். இல்லாளிக்கு இருந்த நட்பும் விலகப் பார்க்கும். 'இல்லாரை எல்லாரும் எள்ளுவர்' (752) என்பர் ஆசிரியர். இதற்கு ஒரு விளக்கமாக, 'ஈன்ற தாயானும் பிறன்போல நோக்கப்படும்' (1047) என்று மேலும் கூறுவர். மன்னுலகு உறவு கிடக்க, பெற்ற தாயுறங்கூட வறிய மகனுக்கு வாடிப் போகும் என்று உணரலாம்.

மனிதன் மன்னாயத்தின் ஒரு மணலாகக் கிடக்கும் மனிதன் - செல்வனாகத் திகழ முடியாவிடினும் கேவலம் வறியவனாக வதங்கக் கூடாது; மனிதன் இரவலனாக உலகில் நடமாடக்கூடாது என்பது வள்ளுவரின் அதிகாரக் குறிக்கோள். ஆதலின் 'பொருளிலார்க்கு இவ்வுலகம் இல்லாகியாங்கு' (247) என்று கடுநடையில் உவமையில் வைத்து எச்சரிக்கின்றார். 'இல்லாரை எல்லாரும் எள்ளுவர்' என்னும் போது நானும் கூடச் சேர்ந்துகொண்டு வறியனை இகழ்வேன் என்று உட்படுத்திக் கொள்கின்றார் போலும்.

இன்மையின் இன்னாதது யாதெனின் இன்மையின்
இன்மையே இன்னா தது (1041)

வறுமைக்கு உவமை வறுமையே. அதன் கொடுமையை விளக்கிக் காட்ட வேறு ஓர் உவமை இல்லை. வறுமை உவமை யுலகத்தையே வள்ளுவர்க்குக்கூட வறிதாக்கி விட்டது. நல்குரவு என்ற பெயரால் வறுமைக்கு ஓர் அதிகாரம் வைத்துப் பத்துக் குறள்களில் வறுமையின் கொடிய இழிவுகளை வெளிப்படுத்துகின்றார். வறுமை என்பது எவ்வாற்றானும் கூடாது; பொருளீட்டுதல் உலகக் கடமை. ஈட்டாது விதி விதியென்று கூறிக்கொண்டு மடிந்து கிடக்கற்க என்று வள்ளுவர் அறையும் திருக்குறட் பறைபோல் யாரும் அறைந்ததில்லை. 'செய்க பொருளை' (759) என்பது அவரது ஆணை. இன்ன அளவு பொருளீட்டினாற் போதும் என்று திருக்குறள் செல்வ வரம்பு செய்யவில்லை. சோம்பல் பற்றாத மன்னவன் திருமால் அளந்த உலகத்தையெல்லாம் அடைவான் என்பதனால், பொருளிற் பேராசையை வள்ளுவர் தூண்டுகின்றாரேயன்றிக் குறைத்துக் கொள்ளச் சொல்லவில்லை. ஒண்பொருள் காழ்ப்ப - கெட்டியாக இயற்ற வேண்டும் என்பது அவர் ஊட்டும் ஆர்வம்.

குன்றேறி யானைப் போர் கண்டற்றால் (756)

என்ற உவமையிலிருந்து எவ்வளவு பொருட்குவியலுக்கும் மனிதன் ஆசைப்படலாம் என்பது புலனாகின்றது. பொருளாசைப்படுக, நும் முயற்சி திருவினையாக்கும் என்பது வள்ளுவ வாழ்த்து.

### பொருட்பயன்

திருக்குறள் வறட்டுக் கொள்கை பேசவில்லை. நன்றாக முயன்று குன்றாத பொருளீட்டி நலமாக இவ்வுலகில் வாழ்கின்ற வாழ்வுக்கொள்கையே சாற்றுகின்றது. பொருளின் இன்றியமையாமையை

- பொருள் முயற்சியை - பொருள் வேட்கையை இவ்வளவு அழுத்தமாகத் திருக்குறள் இயம்புவதேன்? பொருளீட்டுவது குறிக்கோள் இல்லை. மன்னாய உறவைப் பெருக்கிக் கொள்ளுதல் என்னும் குறிக்கோளுக்காகப் பொருளீட்டுகின்றோம். அணை நீர்த்தேக்கம் காண்பது நம் குறிக்கோளா? இல்லை. ஆயிரமாயிரம் வேலிப்பயிரை வளர்ப்பது நம் குறிக்கோள். பொருளீட்ட வேண்டும் என்பதற்கு இவ்வளவு குறட்கள் உள்ளன; அவ்வளவு குறட்களுக்கும் மேலாக, கொடுப்பாய், ஈவாய், ஒப்புரவு ஆற்றுவாய் என்பன பற்றிக் குறட்கள் உள. எது மனிதத் தொழில்? ஈதல், எது மனித வாழ்வு? கொடுத்து வாழ்தல். எது மனிதனுக்கு முடிவான பயன்? கொடைப் புகழ் என்று முடிப்பர் வள்ளுவர் பொருளிலாருக்கு இவ்வுலகம் இல்லை என்ற ஆசான் பொருளுடையார்க்கு, ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது ஊதியம் இல்லை என்று வாழ்வின் பயனை அறுதியிட்டுரைப்பதை நினையவேண்டும்.

சுற்றத்தாற் சுற்றப் படஒழுகல் செல்வந்தான்
பெற்றத்தாற் பெற்ற பயன். (524)

ஒருவன் எவ்வளவு பொருளீட்டினான் என்பதைக் காட்டும் அளவு கருவி என்ன? எவ்வளவு சுற்றம் உறவாயிற்று; எவ்வளவு மன்னுலகு பயன் பெற்று அவனை உறவாகக் கொண்டது; இதுவே பொருள் மானி. உறவு பெருக்காதவனது செல்வத்தை நன்றியில் செல்வம் என்று ஓர் அதிகாரம் முழுவதும் இகழக் காண்கின்றோமே, உறவிலாச் செல்வத்தைப் பழுத்த நச்சுமரம் எனவும் அச் செல்வனை நச்சப்படாதவன் எனவும் பழிக்கப் பார்க்கின்றோமே.

பொருளாதாரம் எல்லாமென்று ஈயா திவறும்
மருளானாம் மாணாப் பிறப்பு (1002)

இக்குறளில் பொருளுக்கு உரிய மதிப்புப் பற்றியும் மயக்கம் பற்றியும் தெளிவிப்பர் ஆசிரியர். வாழ்வுக்கு வேண்டிய எல்லாமே உலகில் பொருளால் நடந்துவிடும் என்று நினைக்கின்ற போக்கு தப்பு என்பது அவர் தம் இடிப்பரை. பொருளை வாழ்விக்க வந்த நற்றுணை என்று அறியாது. பொருளே வாழ்வு என்று மயங்கும் மதியனைப் பித்துக்கொளி என்பது அவர்தம் ஏச்சுரை. தேக்கிய நீரைப் பாய்ச்சவேண்டும். நெய்த ஆடையை உடுத்த வேண்டும். சமைத்த உணவை உண்ணவேண்டும். கட்டிய வீட்டில் குடியிருக்க வேண்டும். கற்ற கல்வியைக் கற்பிக்க வேண்டும். அவைபோல் ஈட்டிய பொருளை ஈய வேண்டும். இருப்பிற் பயனில்லை; செலவிற்கான பயனுண்டு. ஈயாது இறுகப் பிடிப்பது மருள்; அங்ஙனம் பிடிப்பவன் அல் பிறவி என்பது பொய்யில் புலவரின் வசையுரை.

## பொருள் நெறி

ஈட்டுவதிலும் பல நிலைகள், ஈவதிலும் பல நிலைகள், இன்மையிலும் பல நிலைகள், உடைமையிலும் பல நிலைகள். பொருள் வேண்டும். ஒருவந்தம் வேண்டும் என்பதற்காக எதுவும் செய்யலாமோ? ஈட்டுவதற்கு எம் முறைகளையும் மேற்கொள்ளலாமோ? பொருள் வந்தாற் போதும் என்ற நினைக்கலாமோ? எச் செய்கையும் முறையோடு செய்யப்பட வேண்டும். வாழ்வுக்குப் பொருளா? பொருளுக்கு வாழ்வா? வாழ்வு என்பத பழிபடா வாழ்க்கை, மன்னாயம் நன்கு மதிக்கும் வாழ்க்கை. மனிதனுக்கு மெய்யான உடைமை எது? விட்டு நீங்கா உடைமை எது? உலகத்தையே நாம் தேடினாலும் அது நம் உடைமையாகாது. அகச் சொத்து ஆகாது. செல்லும் இடமெல்லாம் உடன் வாராது. பொருளுடையார் எல்லாம் உடையார் என்று வள்ளுவர் கூறவில்லையே. ‘அறிவுடையார் எல்லாம் உடையார்’ என்பதே அவர்தம்

பொருளுரை. இன்னும் ஒரு படி சென்று, எவ்வளவு செல்வமிருந்தாலும் என்ன, 'அறிவிலார் என் உடையரேனும் இலர்' (430) அறிவு என்ற நிலையுடைமை இல்லாதார் வறியவரே என்று மாற்றுடைமை சுட்டுவர். ஏன்? அறிவொன்றே மனிதன் வாழ்வாங்கு வாழ்வதற்கு வழி காட்டுவது. அறிவு என்பது ஓயாச் சிந்தனை, வாழ்க்கையலசல். எது வேண்டும்? எது வேண்டாம்? எப்படி என் வாழ்வு இன்று ஓடுகின்றது? இப்படி ஓடலாமா? வேறு விதமாக வழிப்படுத்த வேண்டுமா? மனம் அல்வழிச் செல்கின்றதா? அதனைப் பிடித்து இழுத்து நல்ல பாதையில் செலுத்த வேண்டுமே? வரவு பெரிதா? செலவு பெரிதா? நட்பைப் பெருக்கிக் கொள்வது, பகையை நட்பாக்கிக் கொள்வது, சிறு நட்பைத் துணிந்து விலக்குவது, பெரியவர் நட்பை வருந்திப் பேணுவது, கட்டுப்படுத்துவது, கட்டுப்பாட்டைப் பெருக்கிக் கொள்வது, எத்துறையிலும் அளவறிந்து பழகுவது, அளவறிந்து செய்வது, அளவறிந்து அடங்குவது என்று இச் சிந்தனைகள் எல்லாம் வாழ்வாங்கு வாழ்வதற்கு வேண்டும்.

வாழ்வுக்கு வேண்டும் என்ற இப் பரந்த சிந்தனைகளில் நாளும் நாட்டம் செலுத்தாது, ஓரேருழவன் போலப் பொருளொரு சிந்தனை மட்டும் உடையவன் வாழ்வாங்கு வாழ்பவனாக ஆகான். தக்க கருவியாகிய பொருளிருந்தும், சிந்தனைவறியவன் ஆலமரம் அரசமரம் போல எண்ணக்கிளை பெருக்கி விரிந்து உலக நிழலில் வாழமாட்டான். பாலை நிலக் குறும் புதர் போல வாழ்வு முடங்கியாக இருந்து மடிவான். முயன்று எனைப் பொருளீட்டுக; கொடையால் உலகவுறவு பெருக்குக; விரிந்து நுணுகிச் சிந்திக்க; எல்லாம் தரும் அறிவுடைய மனிதனாய் நிலை பெறுக என்பதுவே வள்ளுவரின் வாழ்வியல்.

0-0-0

# 7. கவிதைக் கலை

-அ.ச. ஞானசம்பந்தன்

கவிதைக் கலை என்றவுடனேயே, கவிதையும் ஒரு கலையா என்ற ஐயம் பலருக்கு உண்டாகலாம். கட்டடக் கலை, சிற்பக்கலை, சித்திரக்கலை, இசைக்கலை என்று கேள்விப்படுகிறோம். அவற்றைப்போலக் கவிதையும் ஒரு கலை; அவற்றிலெல்லாம் இது சிறந்த கலை என்பதை நாம் நினைப்பதில்லை. இங்ஙனம் இருப்பதற்குக் காரணம் கலையைப்பற்றி நாம் அதிகம் கவலைப்படாமல் இருப்பதுதான்.

## கவிதையின் பழமை

கவிதை, உலகில் இன்று நேற்றுத் தோன்றியதன்று. மிகப் பழங்காலந்தொட்டு அது பயின்று வருகிறது. உடைநடை தோன்றுவற்கு முன்னமேயே கவிதை தோன்றிற்று என்று கூறுகிறவர்களும் உண்டு. சரித்திரம் தோன்றுவதற்கு முன்னர்த்தொட்டு எல்லா மொழிகளிலும் கவிதைகள் தோன்றியுள்ளன. இன்று உலகிடை எத்தனையோ மொழிகள் தமக்கென வரிவடிவம் இல்லாமல் இருக்கின்றன; எனினும் அவற்றிற்கூடக் கவிதை உண்டு என்பதை அறிவோம்.

## கவிதைக் கலையின் பிறப்பு

கவிதை என்றால் என்ன? அது தோன்றும் விதம் யாது? என்பன போன்ற வினாக்களுக்கு அவரவர் கருத்துப்போல் விடையளித்து வருகின்றனர். மேலைநாட்டில் கவிதைக்கலையைப்பற்றிய விரிவான ஆராய்ச்சி நடைபெற்று வருகிறது. ஆனாலும் முடிவான கருத்தாக ஒன்றும் இல்லை. கவிதை என்பது யாது? நினைவும், சொல்லும் உணர்ச்சியைப் போர்த்து வெளிப்படும்பொழுதே கவிதை எனப்படும் என **ஜான் ஸ்டூவர்ட் மில்** என்பவரும், இசையுடன் நினைப்பதே கவிதை

எனக் கார்லைலும், கற்பனையின் வெளிப்பாடே கவிதை என ஷெல்லியும் கூறக் காண்கிறோம். செஞ்சொற் கவி இன்பம் எனவும் செவிநுகர் கனிகள் எனவும் கம்பநாடனும் கூறக்கேட்கிறோம். மனிதன் பெற்ற பெரும் பேறுகளுள் மனம் என்பதும் ஒன்று. அதன் விரிவாய் இருப்பது அகமனம். அவ் வகமனத்தில் தோன்றிக் காலம் இடம் பொருள் என்னும் கட்டுப்பாடுகளை ஒருவாறு வென்று நிலைபெற்றிருக்கும் கவிதையைப் பற்றிய முடிவான கருத்தை யார் அறிவிக்கமுடியும்? மனித மனத்தின் ஆழமும், பரப்பும் அறியமுடியா இயல்பும் கவிதைக் கலையிலும் மிளிர்வதைக் காணலாம்.

அறியமுடியா இயல்பு கவிதையில் மிளிர்வதனாலேயே அறிஞர்கள் இதனிடத்து மேலும் மேலும் அறிவைச் செலுத்துகின்றனர். அங்ஙனம் செலுத்திக் கண்ட முடிவுகள் பல. அவற்றுள் சிலவற்றை இங்கே காணலாம்.

### முருகியலும் கலையும்

ஆதி கிரேக்கர்களே **கவிதைக்கலை** என்ற சொல்லைப் பயன்படுத்தினர். கலைகளெல்லாம் **உணர்வை** வெளியிடும் சாதனங்களே. கவிதையும் உணர்வை நிரல்படக் கோத்த ஒலிகளால் வெளியிடுகின்றதாதலால் கலையாகிறது. இவ்வுணர்வு மனிதனிடம் மறைந்து கிடக்கும் முருகியலைத் தட்டி எழுப்புகிறது. பொருள்களிடம் அழகு காணப்படுகிறது. அவ்வழகை நாம் அனுபவிக்கும்பொழுது முருகுணர்ச்சியைப் பெறுகிறோம். ஆனால் அழகை அனுபவிப்பதற்கு முருகியலைப்பற்றி அறிந்திருக்கவேண்டிய கட்டாயம் இல்லை. நிறைந்த அழகை அனுபவிக்கும்போது உண்டாகும் உணர்வு மீண்டும் வெளிவர முயல்கிறது. அங்ஙனம் வெளிவருகையில் அது கலை வடிவம் கொண்டு வருகிறது. வெளியிடுபவன் தன்மைக்கும் சக்திக்கும் ஏற்ற கலையாக

அது உருவாகிறது. தாஜ்மஹால் சலவைக்கல் வடிவாகத் தோற்றுவதன் முன்னரே ஒரு சிற்பியின் மனத்தில் அது கருக்கொண்டிருந்திருக்கும் அன்றோ? அந்நிலையிலும், பின்னர் அக்கருவுக்கு வடிவு கொடுக்கும் நிலையிலும் அவன் கலைஞன் எனப்படுகிறான்.

**கலையின் பயன்**

ருஷிய தேசப் பெரியாரான **டால்ஸ்டாய்** "கலை என்பது அதனிடத்துப் பழகுகிறவர்களை உணர்வு வலையில் சிக்கச் செய்ய வேண்டும்" என்று கூறினார்.

தனிதனிடம் அமைந்து கிடக்கும் பலவகை இயல்புகளுள் ஆக்கும் இயல்பும் ஒன்று. அந்தச் சக்தியோடு பலமான உணர்ச்சியும் சேரும்பொழுது ஒரு புதிய செயல் தோன்றித்தான் தீரும். அச்செயலின் தோற்றத்திலும் அத்தோற்றத்திற்குரிய முயற்சியிலும் மகிழ்ச்சி உண்டாகிறது. இத்தகைய மகிழ்ச்சியில் முகிழ்த்த கலையில் ஈடுபடுகிறவர் அனைவரும் மகிழ்ச்சி அடைகின்றனர். ஆனால் கலையைக் கண்டு எல்லோரும் மகிழ்கிறார்கள் என்று சொல்வதற்கில்லை. அக்கலையில் ஈடுபடக்கூட ஒருவகை ஆற்றல் தேவை.

சிட்னி கால்வின் என்றவர் ஆங்கிலக் 'கலைக்களஞ்சியத்'தில் தாம் எழுதிய **நுண்கலைகள்** என்ற கட்டுரையில் பின்வருமாறு கூறுகிறார். "உலகில் பிறந்த நாம் செய்தே தீரவேண்டும் என்பதற்காகச் சில காரியங்களைச் செய்கிறோம். இவை நமக்கு இன்றியமையாதவை. இன்னும் சிலவற்றை நாம் செய்ய வேண்டுமென்று பிறர் எதிர்பார்க்கின்றனர். இவை கடமைகள் எனப்படும். இவற்றையல்லாமலும் சிலவற்றை நாம் செய்கிறோம். அவ்வாறு செய்வதற்கு நமது விருப்பமே

தூண்டுதலாகிறது. இங்ஙனம் விருப்பமே காரணமாகச் செய்யப்படும் பல செயல்களில் நுண்கலைகளும் ஒன்று. இவற்றின் விளைவு கலப்பற்றதும் நிலைத்ததுமான இன்பமே, இக்கலை ஓர் அளவுவரை முற்கூட்டிய ஆராய்ச்சி, சிந்தனை, எல்லைக்குட்பட்ட தன்மை இவற்றால் வரையறுக்கப்படுகிறது. அந்த அளவு நீங்கியதும் கற்பனைக்கு எட்டாத மறைபொருளும் தன்னுரிமையும் உடையதாகிறது".

**ஓவியமும் மனமும்**

உதாரணமாகச் சித்திரக்கலையை எடுத்துக்கொள்வோம். சில நினைவுகளையும் உணர்ச்சிகளையும் அதன்மூலம் வெளியிடலாம். ஆனால் சித்திரம் என்பது கண்முன்னர்க் காணப்படும் பொருளை அப்படியே படியெடுப்பதன்று. காணுகின்ற கலைஞனுடைய மனத்தில் அது எத்தகைய காட்சி அளித்ததோ அதுவே படமாக அமைதல் வேண்டும். இயற்கைக் காட்சியை வரையும் ஓவியத்திலும் கூடக்கலைஞன் மனத்தில் இயற்கை, எங்ஙனம் பிரதிபலிக்கிறதோ அங்ஙனமே தீட்டப்படுகிறது. "ஓவியம் கண்ணின் உதவியால் தீட்டப்படவில்லை. மனமும் அறிவுமே அதனைச் செய்கின்றன" என்கிறார். காரோலஸ் டூரான். இன்னுங்கூறவேண்டுமாயின் எல்லாக் கலைகளுமே இயற்கை ஆன்மக் கண்ணாடியில்பட்டுப் பிரதிபலிக்கும்பொழுதே சிறக்கிறது. கலைஞனின் உணர்ச்சி, விருப்பு முதலியவற்றின் கலப்புடன் வெளிவருவதே சிறப்பாகும்".

இதுவரையில் கூறியதைக் சுருங்கக் கூறுமிடத்துக் கலை என்பது, இயற்கை ஆன்மக் கண்ணாடியில் பட்டு எதிர்தோன்றும் சாயலேயாகும் என்றும், அங்ஙனம் எதிர் தோன்றுகையில் மனத்தின் இயல்புகள், உணர்வு, உணர்ச்சி, ஆசை என்பவற்றோடு கலந்தே அது வெளிவருகிறது என்றும் கூறலாம்.

நுண்கலைகள் பலவற்றுள்ளும் கவிதை சிறந்தது. மற்றவை இசை, ஓவியம், சிற்பம், கட்டடம் என்பவையாம். கவிதை என்ற சொல்லுக்கும், செய்யுள், பா, பாட்டு என்பவற்றிற்கும் வேற்றுமை உண்டு. இக்காலத்தில் இவை ஒரு பொருட் பன்மொழியாக வழங்கப்படினும் வேறுபாடு சிறிதளவு உள்ள பல சொற்களே. செய்யுள் என்பது செய்யப்பட்டது என்ற பொருளையுடையது. எனவே, செய்யப்பட்டதெல்லாம் கவிதை ஆகாது. இவ்வேற்றுமையை, "உளங்கனிந்த போதெல்லாம் உவந்துவந்து பாடுமே" என்ற நாவுக்கரசர் பெருமான் வாக்கால் அறியலாம். **கோலரிட்ஜ்** என்ற கவிஞர், பாடலைப்பற்றிக் கூறும் சொற்களாவன: "சாதாரண அளவுக்கு மேற்பட்ட உணர்ச்சி நிலையும் சாதாரண அளவுக்கு மேற்பட்ட ஒழுங்கும் கலந்து விளைவது கவிதை".

**கலைஞன் காட்சி**

சிறந்த கவிதை இம்முறையிலேயே தோன்றுகிறது. கவிஞன் மனம் ஏனையோரின் மனத்தைக் காட்டிலும் சிறிது வேறுபட்டது. கவிஞன் ஒரு செயலையோ பொருளையோ காண்பதாக வைத்துக்கொள்வோம். நம்போன்றவர்கள் பொருட்களைக் காணும்பொழுது பொறிபுலன்கள் மூலம் காண்கிறோம். அக்காட்சி விழித்துக்கொண்டு இருக்கும் நம் புறமனத்தில் சென்று விழுகிறது. ஆனால் கவிஞன் காணும்பொழுது அக்காட்சி அவனுடைய அகமனத்தில் சென்று தங்குகிறது. இவை இரண்டின் வேறுபாட்டை லுயி. கே. அன்ஸ்பாசர் நன்கு விளக்குகிறார்.

புறமனம் விழிப்புடையது, கூர்மையானது, எல்லையுடையது, பருமையுடையது. ஆனால் அகமனமோ அகன்று, ஆழ்ந்து, எல்லையற்று உணர்ச்சி கற்பனை என்பவற்றுடன் அதிகம் தொடர்பு கொண்டுள்ளது.

புறமனம் பொறிகளின் உதவியால் இயங்குவது, ஆனால் பெரும்பாலும் பொறிகளின் உதவி இன்றியே அனுபவங்களைப் பெறக்கூடிய இயல்பு அகமனத்துக்கு அமைந்து உள்ளது. இவ்வகமன அனுபவந்தான் கவிஞன் பெறும் அனுபவம்.

ஏனையோர் அதனைக் காணுகின்றபொழுது, காணுகின்றவன், காணப்படுகிற பொருள், கண்டதால் உண்டாகிற சுவை என மூன்று பொருள்கள் தனித்தனியே இருக்கக் காணலாம். ஆனால் கவிஞன் காணுகையில் இரண்டாவதாக உள்ளதும், சுவையுந்தான் இருக்குமே தவிரக் காண்கிற அவன் பொருளினுள் அமிழ்ந்துவிடுகிறான். தான் என்ற முனைப்புக் காணும் அந்த நேரத்தில் அவனிடம் இருப்பதில்லை. அம் முனைப்பு இருக்கும் வரையில் பொருளோடு ஒன்ற அவனால் முடியாது; எனவே, சிறந்த கவிதையும் இயற்றமுடியாது.

கவிஞன் தான் காணுகிற பொருளில் அன்பு செலுத்துகிறான். அது வியப்பாகிறது. பின்னர் அதன் பால் காதல் கொள்ளுகிறான். அந் நிலைக்குப் பிறகு அப்பொருளோடு ஒன்றிவிடுகிறான். காதலின் .இறுதிநிலையே ஒன்றல்தானே? இதனையே சிறந்த கவிகளுள் ஒருவராகிய பி.பி. ஷெல்லி "பாடலெல்லாம் காதலிலேயே முகிழ்க்கிறது என்கிறார்". ஆனால் காதல் என்ற சொல்லுக்குப் பொருளையும் அவரே விரிக்கிறார். காதல் என்பது நம்மிருந்து நாம் விடுபட்டு வெளியே சென்று உலகில் காணப்படும் அழகுடைய நினைவு, சொல், செயல் என்ற மூன்றிலும் ஈடுபடுவதாகும்". இங்ஙனம் வெளிச் செல்கிற "நான்" என்ற உணர்ச்சி, காணப்படுகிற பொருள்களின் புற அழகு முதலிய வற்றால் மயங்கி நின்றுவிடுவதில்லை. ஆனால் உலகின் புறத்தோற்றம் என்னும் திரையைக் கிழித்துக்கொண்டு உட்சென்று இலங்கும் அழகில் ஈடுபடுகிறது. ஆகவே, கவிஞன் ஏனையோர் காணுகிற காட்சியையும் வியப்பையும் தான் பெறாமல் தனக்கென ஒரு நிலையுடையான் என்பதை அறிகிறோமன்றோ? இதனாலேயே உலகம் சில சமயங்களில் அவனை வெறுங் கனவு காணுகிறவன் என்றும், உலகியலுக்குப் புறம்பானவன் என்றும் கூறுகிறது

பொருள்களை ஊடுருவி நிற்கும் அழகினைப் பருக வல்லவன் கவிஞன் என்றால், அவன் கவிதையும், அகவழகை (புற அழகை அன்று) வெளிப்படுத்துவதாக இருக்கும். அகவழகே 'என்றுமுள்ள உண்மை' என்பதில் ஐயமில்லை. இதனாலேயே மற்றொரு பெருங்கவியாகிய கீட்ஸ் என்பார், "கவிஞன் எதனை அழகு என்று பற்றுகிறானோ அது உண்மைப் பொருளாகவே இருக்கும்" என்றார். இதனால் "சிறந்த கவிஞன் தீர்க்கதரிசி" என்று சொல்லப்படுவது எவ்வளவு உண்மை என்பதும் விளங்கும். இந்தத் தீர்க்க தரிசிக் கொள்கையை மறுப்பார் பலர் உண்டாயினும் அவர்களும், ஊடுருவி நிற்கும் உண்மைப் பொருளை வெளியிட வல்லது கவிதை என்பதில் ஐயம் கொள்வதில்லை. பொருட்களை ஊடுருவி நோக்கும் வன்மை கவிஞனிடம் இருப்பது மட்டும் போதாது. ஏன் எனில் கவிஞனையல்லாமல் விஞ்ஞானியும் இவ்வன்மையைப் பெற்றுள்ளான். எனவே ஊடுருவி நோக்கியவற்றைக் கவிதைகளில் வெளியிடும் வன்மை பெற்றவனே கவிஞன் எனப்படுகிறான்.

**காட்சி வெளிப்பாடு**

மேற்கூறிய வழியாக அக அழகைக் காணும் கவிஞன் எவ்வாறு கவிதை மூலம் அதனை வெளியிடுகிறான் என்று காண்போம். ஒரு காரணத்தை உன்னிப் பாடப்படும் செய்யுட்களைத் தவிர ஏனைய கவிதைகளெல்லாம் திடீரென எழுபவையே யாகும். அத்தகைய கவிதையின் உட்பொருளை, கவிதையை இயற்று முன்னர்க் கவிஞன் முழுவதும் அறிவதில்லை. அப்பொருளும் ஒரு புகைப்படலம் போலவே கவிஞன் மனத்தில் கருக்கொள்கிறது. இங்ஙனம் அது கருக்கொள்வதற்குக் காரணமாக ஏதாவதொரு சிறு நிகழ்ச்சியோ, சம்பவமோ நிகழலாம் அல்லது முன்னர் நிகழ்ந்தும் இருக்கலாம். அதுபற்றி நினைவில் அவன் ஆழ்ந்துவிடுகிறான். நிகழ்ச்சி, அதனைக் காணுகிற அல்லது கேட்கிற அவன் என்ற வேறுபாடுகளோடேயே ஏனையோரைப்போல முதலில் காட்சி ஆரம்பமாகிறது. பிறர்

அக்காட்சியளவில் நின்றுவிடுகிறார்கள். ஆனால் கவிஞன் காட்சி அம்மட்டோடு நின்றுவிடுவதில்லை. கொஞ்சம் கொஞ்சமாக அவன் தன்னை அக்காட்சியில் மறக்கிறான். பொருட்களைக் காண்பதால் நாம் பெறும் உணர்ச்சிக்கும் கவிஞன் பெறும் உணர்ச்சிக்கும் வேறுபாடு உண்டு. சாதாரணப் பொருள்கள் கூட அவனை உணர்ச்சியுள் ஆழ்த்திவிடும். அவனுடைய பொறிபுலன்கள் மிகவும் கூர்மையானவை. எனவே அவன் அனுபவிக்கும் இன்ப துன்பங்களும் ஆழமாக அவனைப் பாதிக்கின்றன. தான் என்ற பொருள் அதனுள் அமிழ்ந்துவிடுகிறது. அனுபவம் ஒன்றே எஞ்சி நிற்கிறது. இவ்வனுபவ நிலை என்பது கற்பனை செய்யமுடியாததொன்று. இவ்வனுபவத்திலிருந்து அவன் மீளும்பொழுது வேறு மனிதனாகவே இருக்கிறான். இவ்வனுபவமும் அவனது கற்பனை என்ற பொருளோடு கலந்து புதியதொரு வடிவு பெறுகிறது. அவ்வடிவினைப் பூரண வடிவு என்று கூற இயலாது. பின்னர் அவனது சொல்லால் அது பூரண வடிவை அடைகிறது. அவ்வாறு அவன் பாடி முடித்த பின்னரே அவனது விருப்பம் எதுவாக இருந்தது என்பது அவனுக்கே புலப்படும்.

கவிதை வடிவாக அது வெளிவந்து முடிகிறவரையில் அவனிடம் கவிதைப் பொருள் இருக்கிறது என்று சொல்வதைக் காட்டிலும், கவிதைப் பொருளில் அவன் இருக்கிறான் என்று கூறுவதே பொருத்தமுடையதாகும்.

சீத்தலைச்சாத்தனார் மூலம் கண்ணகி வரலாற்றைக் கேட்டார். இளங்கோ, கேட்டு முடிந்தவுடன் தம்மை மறந்து அப்பத்தினிப் பெண்ணின் வரலாற்றில் ஈடுபட்டார். சிறிது ஈடுபட்ட பிறகு அவருக்குத் தோன்றிய முதலாவது எண்ணம், “நாட்டுதும் யாம் ஓர் பாட்டுடைச் செய்யுள்” என்பதேயாகும். பிறகு அவ்வெண்ணம் முற்றுப் பெறப் பன்னெடுங்காலம் ஆகியிருக்கும். ஒவ்வொரு முறையும் அவர் பாடத் தொடங்கியபொழுது புதிது புதிதாக அவ்வரலாற்றில் ஈடுபட்டுத் தம்மை மறந்த நிலையிலேயே பாடி இருத்தல் வேண்டும். அதனாலேயே அது புதியதாய் ஆக்கப்பட்ட பொருளாகத் தோன்றுகிறது. இத்தகைய

தன்னை மறத்தல் நிலை எப்பொழுது வருகிறதென்றோ, போகிறதென்றோ கவிஞனாலேயே அறிய முடியாது. கவிஞர்கள் கவிதைகளைப் பாடும்பொழுது பெரும்பாலும் தம்மை மறந்த நிலையிலேயே பாடுகின்றனர் என்பதைப் பாரதியின் 'தன்னை மறந்த லயம் தன்னில் இருந்தேன்' என்ற அடியாலும், கவி ரவீந்திரநாத் தாகூரின் கீழ்வருஞ் சொற்களாலும் அறியலாம். "நம் ஒவ்வொருவரிடமும் இரண்டு நிலைகள் உண்டு. ஒருநிலை மற்றொரு நிலையைவிட அறிவிலும் உணர்விலும் மேம்பட்டது. இந்நிலையே அகமனம் எனப்படுவது, புறமனம் என்பது முட்டாள் தனமானது. இம்முட்டாள் புறமனத்தின் கைமேலோங்கும் பொழுது ஒன்றும் செய்ய முடிவதில்லை. இப்புறமனத்தைக் கட்டுப்படுத்தி அகமனத்தின் வேலையில் தலையிடாமல் இருக்கச் செய்தால், கனவு காணமுடியாத உயரத்திற்கும் செல்ல முடியும்". அத்தகைய நிலையையும் அதனால் பெறுங்க காட்சியயும் மனித அறிவு கடந்த நிலையாக நினைக்கிறோம். அத்தகைய நிலையில் முகிழ்த்த பாடலில் ஒரு சொல்லைக்கூட நாம் மாற்றி அமைத்தல் இயலாத காரியம். சில நற்பேறுடையவர்கள் அகமனத்தில் ஓடும் ஊற்றிலிருந்து எப்பொழுது வேண்டுமாயினும் உணர்ச்சியைப் பெறும் வாய்ப்பைப் பெற்றுள்ளார்கள். இவர்களே கருவில் திருவுடையவர்கள்.

புறமனம், அகமனம் என்ற இரண்டின் ஒத்துழைப்பையும் ஒரே நேரத்தில் பெறக்கூடிய இயல்புடையவரே திருவுடையார் எனப்படுவார். நம்மைப்போல் அவர்கள் புற மனத்தில் மேலாக நின்று அகல வாழ்க்கை மட்டும் வாழ்வதில்லை. திருவுடையார் என்பார் அகமனத்தின் ஆழத்திலும் வாழ்கின்றனர். மற்றொரு வகையாகக் கூறுமிடத்து, அகமன அனுபவங்கள் அவர்கட்கு வேண்டும்பொழுது பீறிட்டுக்கொண்டு வரும். இவ்வாறு கவிஞனின் அகமன அனுபவம் பற்றி அன்ஸ்பாசர் கூறுகிறார்.

0-0-0

## 8. இளைஞர்களே! எழுச்சி கொள்ளுங்கள்!

**- தமிழண்ணல்**

*தாளாற்றித் தந்த பொருள் எல்லாம் தக்கார்க்கு*
*வேளாண்மை செய்தற் பொருட்டு*

என்பது வள்ளுவம்.

இக்கல்லூரி நிறுவனர் உயர்திரு லெ. நாராயணன் செட்டியார் அவர்கள் இக்குறளுக்கு எடுத்துக்காட்டாகத் தாம் தேடிய செல்வத்தை, இக்கல்லூரியை நிறுவுவதற்கும் நடத்துவற்கும் பயன்படுத்தியுள்ளார்கள். கலைத்தந்தை கருமுத்துத் தியாகராசரின் மருகராகிய அவர்கள் இச்சரசுவதி நாராயணன் கல்லூரியை நிறுவியதன் மூலம், வழி வழிவரும் மரபுச் சிறப்பைச் செவ்வனே நிலைநாட்டியுள்ளார்கள். இக்கல்லூரி புதுமை நோக்கும் புரட்சி நோக்கும் பூத்துக் குழுங்குவதென்பதற்கு, அவர்கள் தம் புகழ்ப் பெயரோடு தம் துணைவியார் திருப்பெயரையும் இணைத்து - மீனாட்சி சுந்தரேசுவரர் ஆட்சி செய்யும் இடம் என்பதற்கேற்பச் 'சரசுவதி நாராயணன் கல்லூரி' எனப் பெயரிட்டிருப்பதே சாலும்.

அன்பும் ஆற்றலும் பண்பும் பயனு பிக்க முதல்வரின் தலைமையில், திறமைமிக்க பேராசிரியப் பெருமக்களின் பணியாற்றும் இக்கல்லூரி, இத்தகைய பிற நிறுவனங்கட்கு ஓர் எடுத்துக்காட்டாக வளர்ச்சி பெற்று வருவது மனமகிழ்ச்சியைத் தருகிறது. பெயர் சுட்டிச் சொல்லும் பெருமைமிக்க நிறுவனமாக இக்கலைக்கல்லூரி தழைத்தோங்க மனமுவந்து வாழ்த்துகிறேன்.

நண்பர்களே! 'ஒரு திருவிளக்கு ஆயிரம் திருவிளக்குகளை ஏற்றுகிறது' என்ற ஆங்கிலப் பாடலடிகளை நினைவு கூறுங்கள். இங்கே குழுமியிருக்கும் பட்டம் பெற்ற ஒவ்வோர் அறிவுத் திருவிளக்கும்

பிற்காலத்தில் பல்லாயிரம் அறிவு விளக்குகளை ஏற்றி வைக்கும் என உறுதியாக யான் நம்புகிறேன். உங்கள் பொன்னான எதிர்காலம் பூத்துக் குலுங்கட்டும் என்று பூரிப்போடு உங்களை வாழ்த்துகிறேன்.

**சிக்கல்கள் - பிரச்சினைகள் - தடைகள்**

வாழ்க்கையில் சிக்கல்கள் உள்ளன; பிரச்சினைகள் எதிர்நோக்கி நிற்கின்றன; தடைகள் கணக்கற்றவை உள்ளன. இருக்கட்டுமே? ஒன்று சொல்கிறேன். பிரச்சினைகள் இல்லாத வாழ்வு பெருமையாகாது. நான் படிக்கும் போதே அப்படித்தான் சொன்னார்கள். "ஐயோ, தமிழா படிக்கிறாய் உன்னைக் கடவுள்தான் காப்பாற்ற வேண்டும்" என்று என் உறவினர்களே கேலி செய்தார்கள். எனக்கு அதைக் கேட்டுக் கொண்டிருக்க நேரமில்லை. எனக்கொரு குறிக்கோள் அந்த இளம் வயதிலேயே மனத்தில் ஊன்றிவிட்டது. திரு.வி.க. வின் நூல்களைப் படித்தேன். 'முருகன் அல்லது அழகு' என்ற அப்பெரியாரது நூல் என்னுள் ஆழப்பதிந்தது. பாரதியாரின் பாடல்களிலும் பாரதிதாசன் பாடல்களிலும் பெரிதும் நான் ஈடுபட்டேன். அறிஞர் அண்ணாவின் சொற்பொழிவுகளைக் கேட்பதில் ஆர்வம் காட்டினேன். அவரது எழுத்துக்களை வரிவிடாமல் படித்தேன். டாக்டர் மு. வரதராசனார் நூல்களைப் பயின்றேன். அவரைப்போல் டாக்டர் பட்டம் பெறவேண்டும்; அவரைப்போல் நூல்கள் எழுதவேண்டும் என்று என் உள்ளம் அடிக்கடி சிந்திக்கும். அதனால் என்னுள் ஒன்று உருவாகியது. 'தமிழ் படித்தாயே' என்று என்னைக் கேலி செய்த உறவினர் பிறகு ஒருநாள் "ஐயோ, நானும் உன்னைப்போல் தமிழ் படிக்காமல் போனேனே" என்று வருந்தினார்.

**ஈடுபாடு**

இதிலிருந்து யான் உங்களுக்குக் கூற விரும்புவதொரு உண்மையுளது. தமிழ் படித்த எனக்கே அதில் ஈடுபாடிருந்தது நல்லதாய்ப் போயிற்று. உங்களிலே தமிழ் இலக்கியம் படித்தவர்கள், ஆங்கில இலக்கியம் படித்தவர்கள், கணிதம், வரலாறு பொருளியல், வணிகவியல் படித்தவர்கள், அறிவியல் படித்தவர்கள் எனப் பல திறப்பட்டவர்கள் இருக்கிறீர்கள். நீங்கள் படித்த படிப்பின் மேல் உங்களுக்கு ஈடுபாடு இருக்கிறதா? நீங்கள் படித்த கல்வித் துறையை நீங்களே மதிக்கிறீர்களா? அத்துறையுடன் உங்கள் உள்ளம் பெருமிதத் தோடு ஒன்றுபடுகிறதா? அங்ஙனம் ஈடுபட்டால் நீங்கள் உங்கள் வாழ்வில் உயர்வீர்கள் என்று இப்பொழுதே உறுதி கூற முடியும்.

முதலின்றித் தொழிலைத் தொடங்கி விளம்பரப்படுத்துவது, அன்பின்றித் திருமணத்திற்குப் போய் வாழ்த்துரை வழங்குவது, ஈடுபான்றி ஒரு துறையில் கால் வைத்துப் படித்துப் பட்டம் பெறுவது என்பன அத்துணை விரும்பத்தக்கன அல்ல. அவை பயன்படாமற்போவதே பெரும்பான்மை. எனவேதான் உங்களை நான் கேட்டுக்கொள்வது, நீங்கள் உங்களுக்கென ஒரு துறையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு விட்டீர்கள். இனி அத்துறையில் ஈடுபாடு காட்டுங்கள்; சில குறிக்கோள்களை ஏற்படுத்திக் கொள்ளுங்கள்; சில முன்னோடிகளைப் பின்பற்ற முயலுங்கள்.

**இன்பமா? துன்பமா?**

துன்பம் துன்பம் என்று நினைத்துக்கொண்டிருப்பவர்கட்கு எல்லாம் துன்பமாகத்தான் தெரியும். நீங்களும் மகிழ்ச்சியாக இருங்கள்; உங்கள் சூழலையும் மகிழ்ச்சியாக வைத்திருங்கள். எனக்கொரு நண்பருண்டு; அவரைச் சேய்மையில் பார்க்கும்போதே எனக்கு

அச்சமாக இருக்கும். அரைமணி நேரச் சந்திப்பில், அவருடைய ஒருவாரத் துன்பம். துயரம், சங்கடங்களையெல்லாம் கொட்டிவிட்டு அவர் போய்விடுவார். அதுவரை மகிழ்ச்சியாக இருந்த எனக்கு அழலாம் போலத் தோன்றும். நான் அரிதாகச் சந்தித்து, பிறகு தொடர்பை மிகுதியும் விட்டுவிட்ட, என் நண்பரைப் போல நீங்கள் இருக்க வேண்டாம். பனிபடர்ந்த பசுமலர் போல, உள்ளத்தை வைத்துக் கொள்ளுங்கள். "துன்பத்திற்குத் துன்பத்தை உண்டாக்க வேண்டும்" என்பார் திருவள்ளுவர். இடும்பை நம்மைத் துன்பப்படுத்த வரும் போது, நாம் துன்பப்படாமல் இருந்துவிட்டால், அந்தத் துன்பம் என்ன செய்யும்? "சேச்சே போயும் போயும் இவனிடம் வந்தோமே? இவன் நம்மை வரவேற்கச் செய்மையிலே வாவென்று காத்திருப்பவர்களைச் சென்றடைவோமாக" என்று அந்தத் துன்பம் நம்மை விட்டு விட்டுச் சோம்பேறிகளை நாடிப் போய்விடும்.

*இடும்பைக்கு இடும்பை படுப்பர் இடும்பைக்கு*
*இடும்பை படாஅ தவர்.*

என்பது வள்ளுவம்.

நண்பர்களே நீங்கள் மலர்ந்த உள்ளத்தோடு இருங்கள்; மலர்ந்த முகத்தோடு பேசுங்கள்! எங்கும் மலர்ச்சியே காணப்படும். உங்களுக்கு இளமை எழில் கூடும்; வாழ்வில் வெற்றிகள் தாமே வரும்!

**செயல், செயல், செயல்**

இந்த நாட்டிற்கும் மொழிக்கும் நீங்கள் செய்ய வேண்டிய கடமைகள் உள்ளன. அதற்கு உங்களை ஆயத்தப்படுத்திக் கொள்ளுங்கள்.

நீங்கள் எடுத்துக்கொண்ட துறையில் ஆர்வமும் ஈடுபாடும் உழைப்பும் காட்டுங்கள்; பட்டம் பதவிகள் உங்களைத் தேடி வரும் பட்டம் பதவிகளைத் தேடி அடைந்து கொண்டு, அத்துறையில் ஆர்வமும் ஈடுபாடும் உழைப்பும் காட்டாவிட்டால், தேடிய அப்பட்டம் பதவிகள் தானும் உறுதியாக நிலைத்திராமல் ஆட்டங்காணும்!.

அதுபோல இந்த நாடும், நீங்கள் பேசும் மொழியுமே உங்கள் சமுதாயச் சூழலை உருவாக்குகின்றன. அவற்றிற்காக நீங்கள் சிந்திக்க வேண்டியிருக்கிறது; பாடுபட வேண்டியிருக்கிறது; தியாகம் செய்ய வேண்டியிருக்கிறது. அவை உங்களுக்குப் பெயரும் புகழும் தரும்; இந்த நாட்டை உயர்த்தும்.

இன்றைய கட்சி அரசியல் நையாண்டிக்குரியதாகி விட்டது; கேலிக்குரியதாகி விட்டது. நீங்கள் அவற்றை விட்டு விலகி நின்று சிந்தியுங்கள்! அவை போகும் வழியில் போகாமல், நீங்கள் போகும் வழியில் அவற்றைத் திருப்புமளவு முயன்று பாருங்கள்! இந்தச் சமுதாயத்தைப் பற்றி எவ்வாறெல்லாம் சிந்திக்கலாம் - ஒன்றிரண்டு உதாரணத்திற்குச் சொல்கிறேன். நினைத்துப் பாருங்கள்!

## சொற்பொழிவு மோகம்

ஒரு சப்பானியன் எப்பொழுதும் உழைத்துக்கொண்டிருக்கிறான், ஓர் உருசியன் பெரும்பாலும் படித்துக்கொண்டிருக்கிறான்; ஓர் அமெரிக்கன் பெரிதும் சிந்தித்துக்கொண்டிருக்கிறான்; ஒரு இந்தியன் எந்த நேரமும் சொற்பொழிவு செய்து கொண்டிருக்கிறான்

சாப்பானியன் உற்பத்தியைப் பெருக்கி உலகச் சந்தையை வளைத்த வண்ணமிருக்கிறான்; உருசியாவில் தான் உலகிலேயே மிகுதியான நூல்கள் வெளியாகின்றன; அமெரிக்கச் சிந்தனை நாளும் உலகப்போக்கை மாற்ற முயன்ற வண்ணமிருக்கிறது; தமிழ்நாட்டில்தான் உலகிலேயே சொற்பொழிவு விழாக்கள் வருடம் முன்னூற்றறுபத்தைந்து நாளும் கொண்டாடப்படுகின்றன.

பாரதியார், கலைமகள் விழா என்றால் என்ன? கலை மகள் பூசனை யாது? என்று கேட்டுக்கொண்டு "வீடுதோறும் கலையின் விளக்கமும் வீதி தோறும் இரண்டொரு பள்ளியும் அமைவதே கலைமகள் பூசனையாகும்" என்று விடையும் கூறினார் "மந்திரத்தை முணுமுணுத்து ஏட்டை வரிசையாக அடுக்கி அதன்மேல் சந்தனத்தை, மலரை இடுவது," அவள் பூசையன்று என்றார். ஆனால் அதற்குப் பிறகு நாம் என்ன செய்தோம்? முன்பு அடுக்கிய எல்லா ஏடுகளுக்கும் மேலே பாரதியின் ஏட்டையும் வைத்துச் சந்தனத்தை, மலரைவிட்டுப் பூசனை செய்து கொண்டிருக்கிறோம். அதன் காரணம் என்ன?

நாம் 'பாரதநாடு வாழ்க' என்று சொல்லக் கற்றிருக்கிறோம். நாம் என்ன செய்தால் பாரதநாடு வாழும் என்ற வழிவகைதான் நமக்குத் தெரியவில்லை. நாம் "தமிழ் வாழ்க" என்று சொல்லவே முந்துகிறோம். ஆனால் நாம் செய்யும் செயல்கள் தமிழை வாழவைப்பனவாக இல்லை. இதனால் வெறும் பூசனையிலும், விழாக்களிலும் நாம் பொழுதைப் போக்கிக் கொண்டிருக்கிறோம்.

நமக்குச் செயல் செய்யும் நினைப்பே போய்விட்டதோ என்று ஐயுறுகின்றேன். ஒரு நாட்டின் நெஞ்சமாகவும் மூளையாகவும் கருதத் தகுந்தவர்கள் கற்றறிந்தவர்கள். அவர்கள் இயக்குகிற வழியிலேதான் நாடு நடக்க வேண்டும். அத்தகு சிறப்பைக் கற்றறிந்தவர்கள் அடைய வேண்டும்.

அரசியல்வாதிகளைவிடக் கற்றறிந்தவர்கள் மதிக்கப்பபடுகிற காலம் விரைவில் வரும் அல்லது கற்றறிந்த, நற்பண்பாளர்களிடம் அரசியல் தஞ்சம் புகுகிற காலம் வரினும் வியப்படைவதற்கில்லை. உங்களுடைய காலத்திலேனும் அத்தகைய மாற்றம் ஏற்படுமாறு நீங்கள் செயற்பட வேண்டும் என வேண்டுகிறேன்.

**தமிழர்கட்குப் பொறுப்பதிகம்**

தமிழர்களாகிய நமக்குப் பொறுப்பு மிகுதி என்பது என் கருத்து. நம் தமிழ்மொழி, கிரேக்கம், லத்தீன், பாரசீகம் அராபி போன்ற மொழிகளுடன் உடன் வைத்துத் 'தொன்மைமொழி' என்று அழைக்கப்படுகிறது. இடைக்காலத்தில் பாலி முதலிய பிராகிருத மொழிகளுடன் வழங்கியமையால், அக்காலத்துச் சிறப்பும் உணரப்படுகிறது. இன்றைய மொழிகளுடனும் உடன் வைத்து இக்கால மொழி என்றும் போற்றப்படுகிறது. இத்தகைய மொழியை நமது தாய்மொழி என்பதற்காக அன்று, அதன் பழமை கருதியேனும் போற்றிக் காக்கக் கடமைப்பட்டிருக்கிறோம் சில நூற்றாண்டுகள் முந்திய ஒரு சின்னத்தைக் கண்டாலே பழமைபழமை என்று கொண்டாடும் இயல்பினர் தமிழை ஏன் அங்ஙனம் கொண்டாடக்கூடாது?

தமிழ்போல் இலக்கண வரம்பும் இலக்கிய வளமும் மிக்க மொழியைக் காண்டலரிது. இதனை எடுத்துச் சொல்லவும், தமிழுக்கு வரும் தீங்கைத் தடுத்துக்காக்கவும் நாம் வல்லமையுடையவர்களாக வேண்டும். தமிழ் இதழ்கள், நாளிகைகள், படைப்பு எழுத்தாளர்கள் என்போர் தமிழைச் சிதைத்து வருகிறார்கள். ஆங்கிலத்தை ஆள்வதற்குச் சில வரைமுறைகளைக் கடைபிடிக்கும் இவர்கள் தமிழில் மட்டும் எவ்விதத்திலும் எழுதலாம் என்று பாழடிக்கிறார்கள். ஆங்கிலத்தில் பிறமொழிச் சொல்லை எடுத்தாள நேர்ந்தால், அதனைச் சாய்ந்த

எழுத்திலோ, தடித்த எழுத்திலோ குறிப்பிடும் இவர்கள், தமிழில் அந்நெறியைக் கையாள்வதில்லை. எதனையும் ஆங்கிலச்சாயல் படுத்தி ஆளும் போக்கு, தமிழ் ஊர்ப்பெயர் ஆட்பெயர்களைக் கூட அவ்வாறு மாற்றுமுணர்வு இவர்களிடம் காணப்படுகிறது. தமிழிலோ எவ்வரைமுறையுமின்றிப் பேச்சு வழக்கு என்ற சாக்கில், பிற மொழி ஒலிப்புகளையும் சொற்களையும் கலக்கின்றனர். ஆங்கிலத்தில் இலக்கணப் பிழையாக எழுத வெட்கப்படும் இவர்கள் தமிழில் அவ்வாறு வெட்கப்படுவதில்லை. ஆங்கிலத்தில் ஓர் உருபைக் கூட(Preposition) மாற்றிப்போட்டுக் கேலிக்கு ஆளாக விரும்பாத இவர்கள், தமிழில் ஒற்றுப்பிழை, வாக்கியப்பிழை, இலக்கணப்பிழைகளைக் கண்ட கண்ட மேனிக்குத் தவழ விடுகிறார்கள். கேட்டால் 'பண்டிதர் தமிழ் வேண்டாம்' என்று திருப்பிக் கேலி செய்து வாயை அடக்கிவிடுவார்கள் "என்றுமுள தென்றமிழ் இயம்பியிசை கொண்டான்" என்ற கம்பர் வாக்கு இன்றும் என்றும் பலிக்குமாறு நாம் பாடுபட வேண்டுமன்றோ? அண்மையிலுள்ள கருநாடகத்தில் தொடக்கம் முதல் உயர் கல்வி வரை கன்னடமே பாடமொழி என்று அறிவித்து விட்டார்கள். எல்லா நிலையிலும் கன்னடமே ஆட்சி மொழி என நடைமுறைக்குக் கொண்டு வந்து விட்டார்கள். நாம் இவற்றைப் பற்றி இன்னும் பேச்சளவிலேயே இருக்கிறோம்.

**பாரத நாடு**

ஒரு குழுவினரின் இன்னிசையில் ஒவ்வொருவரும் தத்தம் குரலினிமையோடு பாடுவதுபோல, இந்திய ஒருமைப் பாடும் அமைய வேண்டும். தனித்துவத்தை அழித்து விடுவதன்று ஒருமைப்பாடு. தனித்துவத்தையே மிக வற்புறுத்துவதும் ஒருமையுணர்வைத் தராது. தமிழன் என்றும் பரந்தமனப்பான்மை மிக்கவன். இந்திய ஒருமைப்பாட்டிற்கும் தமிழனுடைய உணர்வே வழிகாட்டவல்லதாகும்

அவ்வுணர்வுதான் இந்தியா துண்டு துண்டாகிப் போகாமல் காக்கும் நன்மருந்தாகும். இத் தீர்வுகள் பாரதி பாடல் வழி புலனாகின்றன. வங்கத்தில் ஓடிவரும் நீரின் மிகையால், மையத்து நாடுகளில் பயிர் செய்வோம் என்னும்போது, பாரதியார் இந்திய நாட்டில் உள்ள நாடுகள் தமக்குள் மிகுந்ததைக் கொடுத்து மற்றவரை வாழ வைத்து ஒற்றுமையுடன் வாழவேண்டும் என வற்புறுத்துகின்றார். "கங்கை நதிப்புறத்து கோதுமைப் பண்டம் காவிரி வெற்றிலைக்கு மாறு கொள்ளுவோம்" என்னும் போது, உள்நாட்டு வாணிகம் மூலம் இவ்வுறவை வளர்க்கலாம் என்பது கூறப்படுகிறது. 'சிங்க மராட்டியர் தம் கவிதை கொண்டு சேரத்துத் தந்தங்கள் பரிசளிப்போம்' என்பது அவ்வப்பகுதியின் சிறப்பைக் காப்போம் என வற்புறுத்துவதேயாகும். கன்னடத்துத் தங்கத்தை இராசபுத்தானத்து வீரர்களுக்குப் பரிசளிப்பதென்பதும் இதுபோன்றது தான். சிந்து நதியில், சேரநாட்டு இளம் பெண்களுடன் சுந்தரத் தெலுங்கில் பாட்டிசைத்து மகிழ்வதென்பது இத்தகைய ஒரு கூட்டுறவையும் - கூட்டுணர்வையும் உள்ளடக்கிய வருணனையேயாகும்.

ஆனால் அசாமியர்கள் அச்சமும், அகாலியர்கள் உணர்ச்சி வேகமும் எவ்விதச்சிந்தனையைத் தூண்டுகின்றன? எவ்வகையிலும் யாருக்கும் என்றும் அச்சமில்லாத சூழலை உருவாக்கி, அவ்வப்பகுதியினரின் தனிச்சிறப்புகட்கு மதிப்புக் கொடுத்து, கொடுத்தும் கொண்டும் ஒட்டி உறவாடியும் உருவாக வேண்டிய தேசிய ஒருமைப்பாடு தடி கொண்டடித்தாலோ, தடித்த குரலில் பேசினாலோ உருவாகிவிடுமா?

**தாழ்வு மனப்பான்மை**

தமிழனுக்குத் தாழ்வு மனப்பான்மை ஒரு நோயாகப் பற்றிக் கொண்டிருக்கிறது. தன் தாய்மொழியில் பேசுவதானால் ஒரு தலைகுனிவு தமிழில் நிருவாகம் செய்ய நேர்ந்தால் ஒரு வித வெட்கம்.

அதே சமயம் தமிழுடன் பிறமொழிச் சொற்களை - குறிப்பாக ஆங்கிலத்தைக் கூடுதலாகக் கலந்து பேசப்பேச ஒருபெருமித உணர்வு. சாப்பாட்டு வேளையை நினைவுப்படுத்திப் பாருங்கள். தமிழனுடைய தாழ்வு மனப்பான்மை நன்கு விளங்கும். அங்கே தட்டை வைத்துக் கொண்டு 'ரைஸ்' கேட்பவன் உயர்வாகவும் 'சாதம்' கேட்பவன் நடுத்தரமாகவும் 'சோறு' கேட்பவன் தாழ்வாகவும் உணரப்படுவதைக் காணலாம் இதுபோல் அன்றாட வாழ்வில் தமிழைப்பயன்படுத்த வெட்கப்படும் தமிழன், மேடையேறினால் "உடல் பொருள் ஆவி மூன்றும் தமிழுக்கே" என முழக்கமிடுகிறான்.

இத்தாழ்வு மனப்பான்மை பல நூற்றாண்டு அடிமை வாழ்வினால் தமிழனுடைய குருதியில் இரண்றக் கலந்துள்ளது. இதைப்போக்க, வலுவான நன்மருந்து புகட்டப் படவேண்டும். இதற்கான வழிமுறைகளை நீங்கள்தான் கண்டுபிடிக்க வேண்டும்

எனவே இந்திய நாட்டிற்குத் தலைமை வகித்து நடக்கக்கூடிய பெருமிதமும் பண்பாடும் இருந்தும், தமிழன் தலை தாழ்ந்து போனதேன் என்று சிந்திப்பீர்களாக. உங்களிலே நல்ல தலைவர்களையும், அறிஞர்களையும், சிந்தனையாளர்களையும் காண்கிறேன். எதிர்காலத்திற்கு ஏற்ற வகையில் உங்கள் சிந்தனையையும் செயலையும் வழிப்படுத்திக்கொண்டீர்களானால், பல்வேறு துறைகளில் வழிகாட்டியாக நீங்கள் அமைந்து விடுவீர்கள். அத்தகைய உங்கள் நற்குறிக்கோள்களுக்கு என்னுடைய இச்சிற்றுரையும், பேருணர்வு ஒன்றைத் தூண்டுமாயின் அப்பெருமையில் எனக்கும் பங்கு கிடைக்குமல்லவா!

0-0-0

# 9. மொழிபெயர்ப்பு - சில சிந்தனைகள்

**-இரா. மோகன்**

'ஒரு கவிஞனது உள்ளம் ஒரு மொழியின் உயிரோட்டமாக உருக்கொண்டதனை, மற்றொரு மொழியின் உயிரோட்டமாக வேறொரு கவிஞன் உருக்கொடுப்பதுவே, கவிதையின் உண்மையான மொழி பெயர்ப்பு. இது ஒரு கவிதைப் பெருஞ்சித்து'.

**- தெ. பொ. மீனாட்சிசுந்தரன்**

*'தொகுத்தல், விரித்தல், தொகைவிரி, மொழிபெயர்த்து*
*அதர்ப்பட யாத்தலோடு அனைமர பினவே*

என்பது வழிநூலின் நான்கு வகைகளைச் சுட்டும் தொல்காப்பிய நூற்பா ஆகும் (மரபியல். 89) இந் நூற்பாவில் தொல்காப்பியர் 'மொழிபெயர்த்து யாத்தல்' என்று வறிதே கூறாமல், 'மொழிபெயர்த்து அதர்ப்பட யாத்தல்' எனச் சுட்டுவது கூர்ந்து நோக்கத்தக்கதாகும். 'அதர்ப்பட' என்ற தொடர் இங்கே 'நெறிப்பட' என்று பொருள் உணர்த்தும் வகையில் தொல்காப்பியரால் கையாளப்பட்டுள்ளது. மொழிபெயர்த்து என்பது பிற பாடையாற் (மொழியாற்) செய்யப்பட்ட பொருளினைத் தமிழ் நூலாகச் செய்வது எனப் பேராசிரியர் இந்நூற்பாவிற்கு நுட்பமான முறையில் உரைவிளக்கம் தந்துள்ளார். மொழிபெயர்க்கும் போது சொல்லைவிட பொருளுக்கே முதன்மை தரவேண்டும் என்பதை அவர் வலி யுறுத்தியுள்ளார். ஓர் எளிய எடுத்துக்காட்டால் இக் கருத்தினை நாம் விளக்கிக் கூறலாம்.

'Do or Die' என்பது காந்தியடிகளின் அமுத வாக்கு. தமிழில் இதனை எத்தனை வகைகளில் மொழிபெயர்க்கலாம்? முயன்று பார்ப்போமா?

*'செய் அல்லது சா'!*

*'செய் அல்லது செத்துப் போ'!*

*'செய் அல்லது செத்துஒழி'!*

*'செய் அல்லது மடி'!*

*'செய் அல்லது மடிந்து போ'!*

*'செய் அல்லது இற'!*

*'செய் அல்லது இறந்து போ'!*

-இவையெல்லாம் காந்தியடிகளின் உள்ளக் கருத்தினை ஆற்றலோடு எடுத்துரைக்கவில்லை; அடிகள் செயலாற்றுவதில் காட்டிய அழுத்தத்தை - ஆர்வத்தை - முனைப்பை - முழுமையாக உணர்த்தவில்லை. இந்நிலையில் தான் 'செய் அல்லது செத்து மடி' என்ற அருமையான மொழிபெயர்ப்பு பிறந்திருத்தல் வேண்டும். சாதல், மடிதல் என்ற இரண்டு சொற்களும் ஒரே பொருள் தருவனவே என்றாலும், 'செத்து மடி' என்று சொல்லும்போது அழுத்தமும் ஆற்றலும் சற்றுக் கூடுதலாகக் கிடைக்கின்றன. இதனைச் 'செய்து முடி அல்லது செத்து மடி' என்றும் மொழிபெயர்க்கலாம். ஆனால், ' செய்து முடி' என்று சொல்லும்போது அது மிகையாகத் தோன்றுகின்றது. ஏனெனில், எப்போதும் நல்ல வண்ணம் நடந்து முடியும் செயலுக்குத் தான் மதிப்பும் மரியாதையும் கிடைக்கும். ஆரவாரமாகத் தொடங்கும் செயலுக்கோ - அரைகுறையாக நின்று போகும் செயலுக்கோ - அல்ல. எனவே, 'செய்' என்றாலே போதுமானது; செயலை நன்கு திட்டமிட்டு, எவ்வளவு தடைகள் இடையே குறுக்கிட்டாலும் மனம் தளராமல், விடா முயற்சியுடன் செய்து முடி என்றே பொருள்படும். மேலும், பழந்தமிழ் இலக்கியமும் 'வினை முற்றிய' - 'செய்வினை முடித்த' - தலைமகனையே 'செய்வினை முடித்த செம்மல் உள்ளத்தினன்' என்று புகழாரம் சூட்டும். விடுதலைப் போராட்டக் காலத்தில் 'Do or Die' எனக் காந்தியடிகள் சொன்ன இப்பொன்மொழி, 'செய் அல்லது செத்து மடி' என்னும்

அழகிய மொழிபெயர்ப்பு வடிவில் இன்றளவும் உலக வழக்கில் நிலைபெற்றிருப்பது நமக்குள் இவ்வளவு சிந்தனைகளையும் தோற்றுவிக்கின்றது.

**மொழிபெயர்ப்பு - ஓர் அருங்கலை**

மொழிபெயர்ப்பு என்பது ஓர் அரிய கலை; ஓவியம் தீட்டுவது போல், சிற்பம் செதுக்குவது போல் ஓர் அற்புதமான பணி இத்தகு சீரும் சிறப்பும் வாய்ந்த மொழிபெயர்ப்புப் பணியில் ஈடுபடுவோர் ஆழ்ந்த அக்கறையும் ஆர்வமும் கொண்டவராக இருத்தல் வேண்டும்; கண்ணும் கருத்துமாக, கவனமாகச் செயல்படும் இயல்பு படைத்தவராக விளங்குதல் வேண்டும். பாரதியாரின் வாழ்வில் நிகழ்ந்த ஒரு சுவையான அனுபவம் இது: 'Member' என்ற ஆங்கிலச் சொல்லுக்கு நிகரான தமிழ்ச் சொல்லைக் கண்டறிய வேண்டிய நிலை; அரை மணி நேரம் பல்வேறு கோணங்களில் அலசிப் பார்த்த பிறகும் பாரதியாரால் எந்த ஒரு முடிவுக்கும் வரமுடியவில்லை. கடைசியில் தென் ஆப்பிரிக்காவில் 'பெண்கள் விடுதலை' என்னும் கட்டுரையின் உடற்பகுதியில் 'மெம்பர்' என்ற ஆங்கிலச் சொல்லை அப்படியே பயன்படுத்திவிட்டு அடிக்குறிப்பில் அவர் பின்வருமாறு எழுதினார்.

*" நடுவிலே ஒரு ரசமான வார்த்தை 'மெம்பர்' என்பதற்குச் சரியான தமிழ்ச் சொல் எனக்கு அகப்படவில்லை. இது ஆச்சரியத்திலும் ஆச்சர்யம் அவயவி சரியான வார்த்தையில்லை. அங்கத்தான் சுட்டி வராது. சபிகன் சரியான பதந்தான். ஆனால் பொது ஜனங்களுக்குத் தெரியாது. யாரேனும் பண்டிதர்கள் நல்ல பதங்கள் கண்டுபிடித்துக் கொடுத்தால் புண்ணியமுண்டு. அரை மணி நேரம் யோசித்துப் பார்த்தேன். உறுப்பாளி? ஏதெல்லாமோ நினைத்தேன். ஒன்றும்*

*மனத்திற்குப் பொருந்தவில்லை. என்ன செய்வேன்? கடைசியாக 'மெம்பர்' என்று எழுதிவிட்டேன். இன்னும் ஆர அமர யோசித்துச் சரியான பதங்கள் கண்டுபிடித்து மற்றொரு முறை சொல்லுகிறேன்".*

(பாரதியார் கட்டுரைகள் ப. / 92)

இப்பகுதி பாரதியாருக்கு மொழிபெயர்ப்புப் பணியில் இருந்த ஆழ்ந்த - உள்ளார்ந்த - ஈடுபாட்டினைப் புலப்படுத்துவதோடு, ஒரு மொழிபெயர்ப்பாளர் பிறமொழிச் சொல் ஒன்றனுக்கு நிகரான தமிழ்ச் சொல்லை உருவாக்க முற்படும்போது எப்படி எல்லாம் பற்பல நிலைகளில் - கோணங்களில் - சிந்தித்துப் பார்க்க வேண்டும் என்பதையும் நன்கு உணர்த்துகின்றது. பாரதியாரின் மொழிபெயர்ப்பு அனுபவம் உணர்த்துவது போல், ஒரு மொழிபெயர்ப்பாளர் உருவாக்கும் சொல்லானது, சரியான சொல்லாக இருக்க வேண்டும்; கட்டி வர வேண்டும் (அதாவது பொருளுக்கு இசைந்ததாக - ஏற்றதாக - இருக்க வேண்டும்); பொதுமக்களுக்குத் தெரிந்த ஒன்றாகவும் இருக்க வேண்டும்; எல்லாவற்றிற்கும் மேலாக, நல்லதாக - மனத்திற்குப் பொருந்தியதாக - வாய்க்கு வழங்குவதாக - இருக்க வேண்டும். இப்போது 'Member' என்ற சொல்லுக்கு இணையாக 'உறுப்பினர்' என்ற சொல்லை நாம் எழுத்து வழக்கிலும் பேச்சு வழக்கிலும் இயல்பாகவும் பரவலாகவும் பயன்படுத்துகின்றோம்; பாரதியார் அரை மணி நேர யோசனைக்குப் பின் 'உறுப்பாளி' என்று கையாண்டதையே நாம் சிறிது மெருகு சேர்த்து 'உறுப்பினர்' என்று வழங்கி வருகின்றோம். எனவே, 'உறுப்பினர்' என்ற இன்றைய சொல்லாட்சிக்கு - வழக்கிற்கு - அடியெடுத்துத் தந்தவர் பாரதியாரே என்பதை நாம் என்றென்றும் நன்றியுணர்வோடு நினைவு கூர்தல் வேண்டும்.

**சிறந்த மொழிபெயர்ப்பாளராக...**

உலக நாடுகள் மொழிபெயர்ப்புக்கு மிகுந்த மதிப்பினைத் தருகின்றன; குறிப்பாக, அமெரிக்க நாட்டினர் சிறந்த மொழிபெயர்ப்புக்கு முனைவர் பட்டமே(Ph.D.) வழங்கிச் சிறப்பிக்கின்றனர். இங்கு நம் மனப்பான்மையோ வேறாக உள்ளது. மொழிபெயர்ப்பு என்பது மூலத்தை விட ஒரு படி குறைவானது. தாழ்வானது என்ற எண்ணமே நம்மிடம் மேலோங்கிக் காணப்படுகின்றது. மூலத்திற்கு இணையாக மொழி பெயர்ப்பினையும் மதிக்கும் மனப்பான்மை நமக்கு வரவேண்டும்; மூல நூலாசிரியருக்கு நிகராக மொழிபெயர்ப்பாளரையும் போற்றும் மனப் பக்குவத்தை நாம் பெறவேண்டும். எளிமையாக விளங்கும் வகையில் சொல்லவேண்டும் என்றால், பாரசீக நாட்டுப் பெருங்கவிஞர் உமார் கய்யாம் பாடலுக்குத் தரும் மதிப்பை அவரது பாடலை அற்புதமான முறையில் தமிழாக்கித் தந்த கவிமணி தேசிய விநாயகம் பிள்ளைக்கும் தர நாம் முன்வரவேண்டும். கவிமணி மட்டுமன்று, உமார் கய்யாமின் பாடல்களைத் தமிழில் ச.து. சுப்பிரமணிய யோகியாரும், சாமி சிதம்பரனாரும் மொழிபெயர்த்துள்ளனர்; அண்மையில் கவிஞர் புவியரசும் சுவாமி கோவிந்த தீர்த்தரின் ஆங்கில மொழி பெயர்ப்பை அடியொற்றி உமார் கய்யாமின் ருபாயாத்தில் இருந்து 410 பாடல்களைத் தமிழாக்கித் தந்துள்ளார் பதச் சோறாக.

'Here with a Loaf of Bread, beneath, the Bough,
A Flask of Win,e A Book of Verse - and Thou
Beside me singing in the Wilderness -
And Wildnerness is Paradise Enow?
(Edward Fitzerald, Rubaiyat of Omar Khayyam, p. 69)

-என்ற உமார் கய்யாம் பாடலைக் கவிமணி தமிழில் எங்ஙனம் மொழி பெயர்த்துத் தந்துள்ளார் எனக் காண்போம்.

*' வெய்யிற் கேற்ற நிழலுண்டு;*
*வீசும் தென்றல் காற்றுண்டு;*
*கையில் கம்பன் கவியுண்டு;*
*கலசம் நிறைய மதுவுண்டு;*
*தெய்வ கீதம் பலவுண்டு;*
*தெரிந்து பாட நீயுண்டு;*
*வையந் தருமிவ் வனமன்றி;*
*வாழும் சொர்க்கம் வேறுண்டோ?*

(கவிமணி சி. தேசிய விநாயகம் பிள்ளை, உமார் கய்யாம் ப. 69)

'மொழிபெயர்ப்பு' (Translation) என்பது கவிமணியின் கைவண்ணத்தில் இங்கே 'மொழியாக்க'மாக (Transcreation) உருப்பெற்றுள்ளது. கவிமணியும் ஒரு படைப்பாளியாக இருப்பதால் இக்காரியம் முடிந்துள்ளது. இங்கே அவர் சொல்லுக்குச் சொல் மொழிபெயர்க்கும் முயற்சியில் ஈடுபடவில்லை; பொருளை - உமர் கய்யாமின் உள்ளத்து உணர்வை - மொழிபெயர்ப்பிலும் அப்படியே படம் பிடித்துக் காட்ட முயன்றுள்ளார்; 'அணிசெய் கவிதையில் ஆழ்ந்திருக்கும் கவியுள்ள'த்தைக் கண்டுகொண்டு, அதனை அப்படியே நமக்குக் காட்டுவதில் முழுவெற்றியும் பெற்றுள்ளார். 'A Book of Verse' என்பது கவிமணியின் எழுதுகோலில் 'கையில் கம்பன் கவியுண்டு' எனப் புத்துருவம் பெற்றுள்ளது; வெறுமனே 'பாட' என்னாது, 'தெரிந்து பாட' என யாத்திருப்பது, கவிமணியின் படைப்புத் திறத்திற்குப் பிறிதொரு சான்று 'Paradise' என்ற சொல்லுக்கு வறிதே 'சொர்க்கம்' என்று மொழிபெயர்க்காது, 'வாழும் சொர்க்கம்' என்று கவிமணி மொழி பெயர்த்திருப்பது, உமார் கய்யாமின் கவிதையை அவர் எவ்வளவு தோய்ந்து - மனம் கலந்து - கற்றிருக்கிறார் எனபதைக் காட்டுகின்றது; உமார் கய்யாமின் வாழ்க்கைத் தத்துவத்தை அவர் எவ்வளவு தெளிவாக

உணர்ந்திருக்கிறார் என்பதையும் புலப்படுத்தி நிற்கின்றது. கவிமணி செய்திருப்பது மொழியாக்கமா (Transcreation) அல்லது தழுவலா (Adaptation) என்பதில் வேண்டுமானால் இன்று மொழிபெயர்ப்புத் திறனாய்வாளர்கள் இடையே கருத்து வேறுபாடுகள் இருக்கலாம். ஆனால் கவிமணியின் படைப்பு அற்புதமானது என்பதிலோ, இனிய, எளிய யாப்பில் அமைந்துள்ளது என்பதிலோ, கவிமணி மூலமே உமர் கய்யாம் தமிழர்களுக்குப் பரவலாக அறிமுகம் ஆனார் என்பதிலோ, 'எழுதிச் செல்லும் விதியின் கை' 'வெய்யிற் கேற்ற நிழலுண்டு' போன்ற பாடல்கள் அமரத் தன்மை கொண்டவை என்பதிலோ யாருக்கும் ஒரு சிறிதும் கருத்து வேறுபாடு இருக்க முடியாது. இன்னும் சொல்ல வேண்டும் என்றால், சிறந்த மொழிபெயர்ப்பாளராக வர விரும்புவோர் - வளர முயல்வோர் - எட்வர்ட்ஃபிட்ஜெராட்டு பாரசீகத்தில் இருந்து மொழிபெயர்த்துத் தந்துள்ள ஆங்கிலப் பாடல்கள், அவற்றிற்குக் கவிமணி, ச.து.சு. யோகியார் இருவரும் படைத்துத் தந்துள்ள தமிழாக்கங்கள் - ஆகிய மூன்றையும் ஒப்பிட்டு ஆராய்ந்தால் பற்பல அடிப்படையிலான உண்மைகளை உணர்ந்து கொள்ளலாம். மொழிபெயர்ப்புக் கலையின் பல்வேறு நயங்களையும் நுட்பங்களையும் தெள்ளத் தெளிவாகக் கண்டுகொள்ளலாம்.

### மொழிபெயர்ப்பு படும் பாடு

'கரணம் தப்பினால் மரணம்' என்பது போல், மொழிபெயர்ப்பில் சிறிது கவனக் குறைவு ஏற்பட்டாலும், பொருள் மயக்கமும் குழப்பமும் பிறழ்ச்சியும் விளையும்; நகைப்புக்கு இடமாகும். இதற்கு எத்தனையோ சான்றுகளைக் காட்டலாம்.

ஒருமுறை ஆண்டன் செக்காவின் 'A Lady with a Dog' என்ற ஒரு கதையை ஒருவர் 'நாயுடன் கூடிய சீமாட்டி' என்ற தலைப்பிட்டு மொழிபெயர்த்திருந்தாராம். தலைப்பைப் படித்துவிட்டு 'நாயுடன் கூடிய

சீமாட்டியா, பேஷ்!' என்று சொல்லிச் சிரித்தாராம் கு. அழகிரிசாமி. இன்னோர் எடுத்துக்காட்டு : அந்தக் காலத்து ஆசிரியர்கள் பள்ளிக்கூடத்தில் ஆங்கிலம் சொல்லிக்கொடுப்பார்களாம். 'I have a slate' என்பதற்கு 'நான் ஒரு சிலேட்டை உடைத்தாய் இருக்கிறேன்' என்று தமிழில் பொருளும் சொல்லுவார்களாம். கு அழகிரிசாமி இந்த நிகழ்ச்சியையும் எடுத்துச் சொல்லிச் சிரிப்பாராம். கி. ராஜநாராயணன் தொகுத்து வெளியிட்டுள்ள 'கு. அழகிரிசாமி கடிதங்கள்' என்ற நூலில் இவ்விரு சுவையான தகவல்களும் இடம் பெற்றுள்ளன.

இன்றைய - சூழலில் அன்றாட வாழ்க்கையை உற்று நோக்கினால் மொழிபெயர்ப்பு என்ன பாடுபடுகிறது, எப்படி எல்லாம் நாம் மொழிபெயர்ப்பைப் பாடாய்ப் படுத்திக்கொண்டிருக்கின்றோம் என்பது நன்கு விளங்கும். 'Women's Consumer's Society' என்பது ஓர் இடத்தில் 'மகளிர் நுகர்வோர் சங்கம்" என மொழி பெயர்க்கப் பட்டிருந்தது! அரசின் 'One Family One Tree' என்னும் கொள்கை பரப்பு வாசகம் பேருந்துகளில் முதலில் "ஒரு வீடு ஒரு மரம்" என சொல்லுக்குச் சொல் அப்படியே மொழி பெயர்க்கப்பட்டது; பிறகு, அவ் வாசகம் 'வீட்டிற்கு ஒரு மரம் வளர்ப்போம்" எனப் பொருளைக் கருத்தில் கொண்டு விரித்து எழுதப்பெற்றது.

பிறிதோர் எடுத்துக்காட்டு: 'Rehabiliation Centre for the Alchoholics' என்பது 'மது அருந்துவோர் மறுவாழ்வு மையம்' என ஓர் இடத்தில் தமிழாக்கம் செய்யப்பட்டிருந்தது. இந்தத் தமிழாக்கம் மது அருந்துவதால் ஒரு மனிதனுக்கு நேரும் தீங்குகளைச் சுட்டாமல், மது அருந்துவோர் மறுவாழ்வு பெறலாம் என்ற எண்ணத்தை அல்லவா தோற்றுவித்து விடுகின்றது?

**மேன்மேலும் மெருகேற்றுதல்**

பாரதியார், பங்கிம் சந்திரரின் 'வந்தே மாதரம்' என்ற பாடலை இரண்டு முறை மொழிபெயர்த்துள்ளார் 'ஜாதீய கீதம்-1', 'ஜாதிய கீதம்-2' என்னும் தலைப்புகளில் இவ்விரு மொழிபெயர்ப்புக்களும் அவரது பாடல் தொகுதியில் அடுத்தடுத்துச் சேர்க்கப்பட்டுள்ளன. "முன்னொரு முறை முழுவதும் அகலமாக ஒரு மொழிபெயர்ப்பு எழுதியிருந்தேன். ஆனால், அது பாடுவதற்கு நயப்படாதாகையால் இப்போது பல சந்தங்கள் தழுவி மொழிபெயர்த்தெழுதப்பட்டிருக்கின்றது " (பாரதியார் கவிதைகள், ப, 162) எனப் 'புதிய மொழிபெயர்ப்'பின் குறிப்புரையில் பாரதியார் எழுதியிருக்கும் கருத்து இங்கே மனங்கொள்ளத்தக்கதாகும்.

மூலத்தின் ஒட்டு மொத்த அழகுகளையும் நுண்ணிய நயங்களையும் மொழிபெயர்ப்பில் எப்படிக் கொண்டு வரலாம என்பதே ஒரு மொழிபெயர்ப்பாளரின் முனைப்பான சிந்தனையாக இருக்க வேண்டும். முதல் மொழிபெயர்ப்பு முயற்சியிலேயே அவரது மனம் நிறைவடைந்து விடக்கூடாது. மீண்டும் மீண்டும் எண்ணிப் பார்த்து, மேலும் மேலும் மெருகேற்றுவதே ஒரு மொழிபெயர்ப்பாளரின் தலையாய பண்பாகவும் பணியாகவும் அமைய வேண்டும். இவ்வகையில் உமார் கய்யாமின் ருபாயத் பாடல்களைப் பாரசீக மொழியில் இருந்து ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துத் தந்த எட்வர்டு ஃபிட்ஜெரால்டு (Edward Fitzgerald) சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவர் ஆவார். அவரது மொழிபெயர்ப்பின் முதல் பதிப்பு 1859- ஆம் ஆண்டில் வெளிவந்தது; இரண்டாம் பதிப்பு 1868-இல் வெளிவந்தது; மூன்று, நான்காம் பதிப்புகள் முறையே 1872, 1879 ஆகிய ஆண்டுகளில் வெளிவந்தன. ஐந்தாம் பதிப்பு 1889-இல் அவரது மறைவுக்குப் பின் வெளிவந்தது. நீண்ட நெடுங்காலமாக - இன்னும் சொல்லவேண்டும் என்றால் தம் வாழ்வின் இறுதி வரையில் ஃபிட்ஜெரால்டு உமார் கய்யாம் மொழிபெயர்ப்புப் பணியிலேயே முழுமூச்சாக - முனைப்புடன் - ஈடுபட்டு வந்தார்; கூட்டியும் - குறைத்தும் - மாற்றியும் - புதுக்கியும் - ஒரு செம்மையான மொழிபெயர்ப்பினைத் தந்துவிட வேண்டும் என்பதிலேயே கவனமாக - கண்ணும் கருத்துமாக - இருந்தார். மொழிபெயர்ப்புத்

துறையில் பணியாற்ற விழைவோர் எட்வர்டு ஃபிட்ஜெரால்டைத் தம் வழிகாட்டியாகக் கொண்டால், அத் துறையில் வெற்றி பெறுவதும் முத்திரை பதிப்பதும் உறுதி எனலாம்.

நைடா என்னும் மொழியியல் அறிஞர் ஓர் அழகிய எடுத்துக்காட்டின் வாயிலாக மொழிபெயர்ப்பாளர் பணியாற்ற வேண்டிய முறை குறித்து விளக்குவார். ஒரு மலைப்பாம்பு எப்படித் தன் இரையை எடுத்துக்கொள்ளும் தெரியுமா? முதலில், அது தன் உடம்பால் இரையின் உடம்பினைச் சுற்றிக்கொள்ளும்; பிறகு, அதன் பிடி இறுகும்; முடிவில், வாயை அகலத் திறந்து மெல்ல மெல்ல – ஆனால், அப்படியே முழுமையாக – இரையை விழுங்கும். இதே போல் தான் ஒரு மொழிபெயர்ப்பாளரும் செயல்பட வேண்டும் என்பார் நைடா. மூலத்தை ஒரு முறை அமைதியாக – மனம் கலந்து – பொருளுணர்ந்து – படிக்க வேண்டும்; பிறகு, சொற்பொருளுக்கு அப்பாற்பட்டு கவிதையில் ஆழ்ந்திருக்கும் நுண்பொருள் – நயப்பொருள் – குறிப்புப் பொருள் – ஆகியன பற்றிச் சிந்திக்க வேண்டும்; கவிதைச் சிந்தனையில் ஆழ்ந்து ஆழ்ந்து, கவியுள்ளத்தில் தோய்ந்து தோய்ந்து, ஒரு மொழி பெயர்ப்பு என்று படிப்பவருக்குத் தோன்றாத வகையில் படைக்க முற்பட வேண்டும். ஒரு சிறந்த மொழிபெயர்ப்பாளரின் வெற்றி இரகசியம் இங்ஙனம் படைப்பதில்தான் அடங்கியுள்ளது எனலாம்.

### கூட்டு முயற்சி

மேலை நாடுகளில் மொழிபெயர்ப்பாளர் (Translator), தகுநய நடையாளர் (Stylist) என இரு வகையினர் இருப்பர். மொழிபெயர்ப்பாளர், பொருளில் தம் கவனத்தைச் செலுத்துவார்; தகுநய நடையாளர் பொருளுக்கு நயமும் மெருகும் சேர்ப்பார். நம் நாட்டிலும் இதுபோல் அறிவியல், தொழில் நுட்பத் துறை சார்ந்த மொழிபெயர்ப்பு முயற்சிகளில் மொழிபெயர்ப்பாளர், தகுநய நடையாளர் என இருவரும் இணைந்து செயலாற்ற முன்வருவது நன்று; இருவரது கூட்டு முயற்சிகள் சிறந்த

மொழிபெயர்ப்புகள் தோன்றுவதற்கு வழிவகுக்கும் சான்றாக, கணினி பற்றி அறிவியல், தொழில் நுட்பப் புலமை படைத்த ஓர் அறிஞரே முழுவதுமாக எழுதி வெளியிட்டிருக்கும் நூலுக்கும், ஓர் அறிவியல் அறிஞரும் ஒரு படைப்பாளியும் (இவர் அறிவியல், தொழில் நுட்பத் துறையில் ஈடுபாடு உள்ளவராக இருந்தால் பருத்தி புடைவையாகவே காய்த்தது போல இருக்கும்) இணைந்து வெளியிட்டிருக்கும் நூலுக்கும் இடையே பொருள் உணர்த்தும் முறையில் - புலப்பாட்டுப் பாங்கில் - நிறைய வேறுபாடுகள் இருக்கும்; முன்னைய நூலை விடப் பின்னைய நூல் பொதுமக்களை எளிதாகச் சென்று சேரும்.

**பழந்தமிழ் இலக்கியப் பயிற்சி**

பழந்தமிழ்ச் சான்றோர்களின் ஒருசில சொல்லாக்கங்களைப் பார்க்கும் போது அவர்களின் கற்பனைத் திறனும் சிந்னை ஆற்றலும் நம் நெஞ்சை அள்ளுகின்றன. நம்மை வியக்க வைக்கின்றன. மொழிபெயர்ப்புத் துறையில் ஈடுபடுவோர் கலைச் சொல்லாக்கங்களை உருவாக்கும்போது எப்படிச் செயல்பட வேண்டும் என்பதற்குப் பழந்தமிழ்ச் சான்றோர்களின் சொல்லாக்கங்கள் நன்கு வழிகாட்ட வல்லனவாகும். இவ்வகையில், பழந்தமிழ் இலக்கியங்களில் இடம்பெற்றுள்ள சில அரிய - அழகிய சொல்லாக்கங்களைக் காண்போம்;

*தொடுதோல் - செருப்பு*
*மெய்ப்பை - சட்டை*
*அங்காடி - கடை*
*காப்பாளன் - காவலாளன்*
*மெய்ம்மறை - கவசம்*
*காலதர் - சன்னல் (கால் - காற்று; அதர் - வழி)*
*விரற்செறி - மோதிரம்*
*மேதகு - பெருமை தருகின்ற*
*தலைநாள் - முதல் நாள்*

*மனை - வீடு*
*பெரும்பிறிது - மரணம்*
*இலம்பாடு - வறுமை*
*ஈனில் - பிரசவ அறை*
*கால்வழி கட்டில் - பாடை*

*கண்ணுள் வினைஞர் - ஓவியர்*
*விலைநலப் பெண்டிர் - பரத்தையர்*
*ஊதியம்-பொருள்*
*கால்கோள் - அடிக்கொள்ளுதல்*
*மெய்ம்மலி - உவகை - உடம்பு பூரித்தற்குக்*
*காரணமான மகிழ்ச்சி*
*புலம் - அறிவு*

அகம், வழிமொழிதல், பேராளர், தக்கார், முனைவர் முதலான பற்பல சொற்களை இன்றைய வழக்குத் தமிழில் கையாண்டு வருகின்றோம்; இவை பழந்தமிழ் இலக்கியங்களில் பயின்று வந்த சொற்கள் ஆகும். இந்த நோக்கில் ஆராய்ந்தால் மொழிபெயர்ப்புத் துறைக்குப் பல புதிய - பொருத்தமான - சொற்கள் கிடைப்பதற்கு வாய்ப்பு உள்ளது எனலாம்.

முத்தாய்ப்பாக ஒரு சொல் : பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் 'தமிழும் பணியும்' என்னும் தம் கட்டுரையில் குறிப்பிடுவது போல், நம் தமிழ்மொழியின் ஆக்கத்திற்கு ஒருதலையாக வேண்டுவனவற்றுள் இம் மொழி பெயர்ப்புச் செயலும் ஒன்றாகும் (உரைநடைக் கோவை : இரண்டாம் பகுதி ப. 26). எனவே, நம் அருந்தமிழ் நன்னிலைப்படுவதற்கு இன்றியமையாது வேண்டிய இம் மொழிபெயர்ப்புப் பணியில் ஒல்லும் வகையெல்லாம் ஈடுபடுவோம்; பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்களைத் தமிழ்மொழியில் பெயர்த்துத் தருவோம் செந்தமிழைச் செழுந்தமிழாய்ச் செய்வோம்.

0-0-0

# 10. படிப்பது எப்படி?

- ம. திருமலை

கல்வி எக்காலத்திலும் எந்நாட்டிலும் எச்சூழ்நிலையிலும் இன்றியமையாத இடத்தினைப் பெறுகின்றது. தொல்பழங்காலத்திலும் சரி, மிக நவீனமான இன்றைய கணினித் தொடர்பியல் உலகத்திலும் சரி கல்வியின் இன்றியமையாமை நிலை பேறுடையது.

*குஞ்சி அழகும் கொடுந்தானைக் கோட்டழகும்*
*மஞ்சள் அழகும் அழகு அல்ல நெஞ்சத்து*
*நல்லம் யாம் என்னும் நடுவு நிலைமையால்*
*கல்வி அழகே அழகு*

(நாலடியார் கல்வி. 1)

என்ற நாலடிப் பாடல் இதனை நமக்கு உணர்த்துகிறது. இது பன்முறை பல சூழல்களில் கேட்டுப் பழகிய பாடல்தான் என்றாலும், நுட்பமாகச் சிந்திக்கும்போது இதன் சிறப்பு புலனாகும். கல்வி ஒரு மனிதனின் ஆளுமையுடன் தொடர்புடையது. ஆளுமை (Peronality) வளர்ச்சிக்குக் கல்வியே இன்றியமையாதது என்பதை "நெஞ்சத்து நல்லம் யாம் என்னும் நடுவு நிலைமையால் கல்வி அழகே அழகு" என்று மேற்காட்டிய பாடல் உணர்த்துகிறது. இதில் குறிப்பிடப்படும் அழகு என்பது ஒருவனின் பண்பு நலத்துடன் தொடர்புடைய ஆளுமையைக் குறிப்பதாகும்.

தனிமனிதனை ஆளுமையில் சிறந்தவனாக மாற்றும் கல்வி, கண் போன்றது என்பதை "எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும் கண்ணென்ப வாழும் உயிர்க்கு" (திருக்குறள், 392) என்ற குறளின் வழித் திருவள்ளுவரும் குறிப்பிடுகின்றார்.

மனிதனை ஏனைய உயிரினங்களினின்றும் வேறுபடுத்திக் காட்டும் பகுத்தறிவை வளர்க்கும் கல்வி திடுமென ஒருவனுக்கு மந்திர சக்தியினால் வாய்த்துவிடுவதில்லை. இடைவிடாமல் படித்தால்தான்

ஒருவன் கல்வியறிவைப் பெற முடியும். "கண்டது கற்கப்பண்டிதனாவான்" என்ற பழமொழியும் இதனை உணர்த்துகிறது. எனவே ஒரு மனிதன் சிறந்த அறிஞனாக மாற, கல்விமாணாக ஒளிர இடைவிடாது படிக்கும் திறனை அவன் வளர்த்துக்கொள்ள வேண்டும்! அனைத்தும் உண்மைதான்! எப்படி?

படிப்பது என்பது இன்றையச் சூழ்நிலையில் சமூக முக்கியத்துவம் வாய்ந்தது. ஒரு நாட்டில் சனநாயகம் உயிர் பிழைத்திருக்க வேண்டுமாயின் அந்நாட்டின் மக்கள் படிப்பில் தகுதியுடையவர்களாக இருக்க வேண்டும் என்கிறார் டி.எச். ரஸ்ஸல் என்னும் அறிஞர்.

இன்றைய நவீன- காலச் சூழலில் பலதுறைகளில், பணிகளில், ஈடுபட்டிருப்பவர்கள் அனைவருக்கும் படிப்பது இன்றியமையாத தாகின்றது. மருத்துவர்கள், வழக்கறிஞர்கள், தொழில்முனைவோர், பேராசிரியர்கள், அரசு ஊழியர்கள் அனைவருமே தேவையான கல்வியறிவு பெற்ற பின்னர்தான் அவர்களின் பணிகளில் அமர்கின்றனர். ஆயினும் பணியில் இருக்கும்போதுகூட மேன்மேலும் அவரவர் துறைகள் பற்றிப் படிப்பது இன்றியமையாததாகின்றது; அவரவர் துறைகளில் அண்மைக்கால வளர்ச்சிகளை அவர்கள் அறிந்திருக்க வேண்டுமாயின் இடைவிடாமல் படித்துக்கொண்டுதான் இருக்க வேண்டும்.

ஒருவன் இடைவிடாமல் மிகுதியாப் பல்வகை நூல்களைப் படிக்கும் போது அவனுக்குள் உருவாகும் கருத்துக் கருவூலம் அவனது ஆளுமையை வளர்ப்பதுடன், வாழ்க்கைக் கண்ணோட்டத்தினையும் வளப்படுத்துகிறது என்று கல்விச் சிந்தனையாளர்கள் கூறுகின்றனர். வாழ்க்கைக் கண்ணோட்டம் வளரும் நிலையில் ஒருவன் அன்றாட வாழ்க்கையின் 'சின்னச் சின்ன' விஷயங்களைத் தாண்டிச் செல்கின்றான் 'சின்னக் கவலைகள் என்னைத் தின்னத் தகுமோ' என்று பாரதியார் வேண்டுவதும் அறிவுக் கடவுளிடம்தானே?

ஒருவன் உள்முகமாகத் தன்னைப் பற்றிச் சிந்திப்பதால் அன்றாடச் சமூக வாழ்க்கையின் முரண்பாடுகளிலிருந்தும் அவற்றால் பாதிக்கப்படும் சூழல்களிலிருந்தும் தப்பிக்கின்றனர். எனவே, ஒரு மனிதனுக்கு அகவுலகப் பார்வை என்பது மிகவும் வேண்டிய ஒன்றாக அமைகிறது.

படிப்பது என்கிற நடைமுறை நம்மிடையே புதைந்து கிடக்கின்ற படைப்புச் சக்தியைத் தூண்டுகிறது. உலகில் படைப்பாளர்களாகவும் கலைஞர்களாகவும் சிந்தனையாளர்களாகவும் பெரும் மேதைகளாகவும் வாழ்ந்தவர்கள் அனைவருமே நன்கு படித்தவர்கள். இடைவிடாமல் படித்ததனாலேயே படைப்புச் சக்தி உந்துதல் பெற்று உருவானவர்கள் என்பதை வரலாறு நமக்குத் தெரிவிக்கிறது. படிக்காமல் தானே சுயம்புவாக எல்லாவற்றையும் அறிந்துகொண்டவர்கள் எவரும் இல்லை; அவ்வாறு ஒருவர் கூறுவாராயின் அது உண்மையல்ல.

தத்தம் தொழில்களில் முன்னேறுவதற்குப் படிக்க வேண்டும்; வாழ்க்கைக் கண்ணோட்டம் வளரப் பலவற்றைப் படிக்க வேண்டும்; ஒருவனுக்குப் புறவுலகத் தேடலும் அகலுலகப் பார்வையும் உலக சகோரதரத்துவ உணர்வும் வளர பல மடங்கு படிக்க வேண்டும்; ஒருவனிடம் புதைந்துகிடக்கின்ற படைப்புச் சக்தி புலப்பட்டு வளர்ச்சியடையத் தொடர்ச்சியாகப் படிக்க வேண்டும் - எல்லாம் உண்மைதான்! படிப்பது எப்படி?

### ஆயத்த விதி

படிப்பதில் பின்பற்றப்படும் விதிமுறைகள் பற்றிக் குறிப்பிடும் கல்விச் சிந்தனையாளர்கள் 'ஆயத்த விதி' (Law of Readiness) என்ற ஒன்றினைக் குறிப்பிடுகின்றனர். இதன்படி ஒருவன் மனத்தில் சிற்சில தூண்டுதல்கள் ஏற்பட்டுப் படிக்கும் உணர்வினை அவன் பெறும்போது உடனே படிக்கத்தொடங்க வேண்டும். மனித மனத்தின் போக்கினை எத்தகைய தர்க்க முறைகளாலும் விளக்கிவிட இயலாது. சில சமயங்களில் இயல்பாகவே சுறுசுறுப்பும் ஆர்வமும் நம் மனத்தில்

கொந்தளிக்கும் சூழல்களைத்தான் ஆயத்த நிலை(Readiness) என்று கல்வியாளர்கள் குறிப்பிடுகின்றனர். இச்சூழ்நிலை ஒருவனின் மனத்தில் ஏற்படும்போது அவன் உடனே படிக்கும் செயலைத் தொடங்கலாம்; அவ்வாறு தொடங்கினால் படிக்கும் செயல்முறை செம்மையாக அமையும். மன எழுச்சி ஏற்பட்ட பிறகும் படிக்கும் செயலை ஒருவன் தொடராவிட்டால் அதுதான் இழுக்கு.

இவ்வகையான மனஎழுச்சி ஒருவனுக்கு அவனது தேவைகள், சூழ்நிலைகள் காரணமாக ஏற்படக்கூடும். தேர்வு நெருங்கி வரும் நிலைகள், போட்டிகளில் பங்கு கொள்ளத் தயார்படுத்திக் கொள்ளவேண்டிய சூழல், கருத்தரங்குகளில் உரையாற்ற வேண்டிய சூழல் - இத்தகைய சூழ்நிலைகளில் ஒருவன் உள்ளம் மனஎழுச்சி பெறும். இத்தருணங்களில் இயல்பாகவே ஒருவனால் படிக்க இயலும்.

உடல், மனம் இரண்டும் போதிய முதிர்ச்சியையும் தகுதியையும் பெற்றிருக்கும்போது ஒருவன் இயல்பாகப் படிக்கும் மன எழுச்சியினைப் பெறுவான் ஒருவன் மனத்தைத் தெளிவாகவும் உடலை ஆரோக்கியமாகவும் வைத்துக்கொள்ள வேண்டியது படிப்பதற்கு மிகவும் அவசியமாகும்.

நமது இல்லங்களில் சில சமயங்களில் சிறு குழந்தைகள் மிகுந்த ஆர்வத்துடன் படிப்பில் ஈடுபடுவதையும் பயிற்சிகளில் ஈடுபடுவதையும் காணலாம். அந்தச் சந்தர்ப்பங்களில் அவர்கட்குரிய பாடங்களை நினைவூட்டிப் படிக்கவைக்க வேண்டியது பெற்றோர் கடமையாகும்.

### செயற்படுத்தும் விதி

சிற்சில சமயங்களில் படித்த நூல்களின் கருத்துக்கள் மனத்தில் நிலைக்காமல் போவதுண்டு. படிப்பதில் காணப்படும் இச்சிக்கல்களைத் தீர்க்க உளவியல் வல்லுநர்கள் செயற்படுத்தும் விதி (Law of Use) என்ற ஒன்றினைக் குறிப்பிடுகின்றனர். இதன் பொருள் மிக எளிமையானது. கற்ற ஒன்றினை மீண்டும் மீண்டும் கற்றல்; அதன்மூலம்

படித்த நூலின் பொருளினை மனத்தில் நிலைநிறுத்திக்கொள்ளுதல் என்பதே இவ்விதியின் அடிப்படையாகும். இவ்விதியின் அடிப்படையானது பயிற்சி செய்தல் என்பதாகும். பயிற்சி, படிப்புக்கு முழுமையைத் தருகின்றது; அடுத்தடுத்து செய்தல்(Frequency) அண்மையில் நிகழ்தல் (Recency) ஆகியன பயிற்சியின் இன்றியமையாக் கூறுகள். பொதுவாக மனித மனம் கவர்ச்சி மிகுந்த பொருட்களை நாடுவது இயல்பாகும். கவர்ச்சியற்ற ஒன்றின் மீது மனம் ஒன்றுவதில்லை; அது மனித உள்ளத்தில் நிலைத்து நிற்பதில்லை. எனவே எளிதில் மறக்கப்படக்கூடிய ஒன்றினை நினைவில் தக்கவைத்துக்கொள்ள அதனை மீண்டும் மீண்டும் படித்தலே சிறந்த வழியாகும். நல்ல கவிதைகளை நினைவில் வைத்துக்கொள்ள இயலாத நம்மால் அடிக்கடி கேட்கக்கூடிய திரைப்படப் பாடல்கள் மீண்டும் மீண்டும் பல்வேறு சூழல்களில் காதில் ஒலிப்பதால்தான் நாம் இவற்றை எளிதில் நினைவில் வைத்துக் கொள்கிறோம். அடுத்தடுத்துச் செயற்படல் என்பதுதான் இதற்குக் காரணம். இதனைப் புரிந்துகொள்ள மேலும் ஒரு சான்றினைக் காணலாம்.

பள்ளிக் குழந்தைகள் பல பாடங்களைக் கற்றாலும் கணித வாய்ப்பாடுகளை மிக நீண்ட நாட்களுக்கு நினைவில் வைத்திருக்கின்றனர். ஏனைய பாடங்களை விட, வாய்ப்பாடுகளைப் பன்முறை மனப்பாடப் பயிற்சி செய்வதுதான் இதற்குக் காரணம். எனவே எத்தகைய கடினமான பாடல்களையும், உயர்ந்த தரம் வாய்ந்த இலக்கிய நூல்களையும் நாம் பன்முறை பயிற்சி செய்தல் வேண்டும். சிக்கல் மிகுந்த கட்டமைப்பினையும் உள்ளடக்கத்தினையும் உடைய நவீன இலக்கிய வகைகளைப் படித்துப் புரிந்துகொள்வதற்கும் இத்தகைய அடுத்தடுத்துச் செயற்படல் முறையில் (Frequency) படிக்க வேண்டும். நவீன இலக்கியங்களான நாவல், சிறுகதை, புதுக்கவிதை முதலிய இலக்கிய வகைகளுள் அண்மைக்காலத்தில் வெளிவருவனவற்றை வாசகர்களால் எளிதில் புரிந்துகொள்ள இயலவில்லை. இவற்றைப் புரிந்து கொள்வதற்குப் பன்முறை வாசித்தல் என்ற செயற்பாடு தேவை என்று அந்தந்த இலக்கியங்களைப் படைத்தவர்கள் கூறுகின்றனர். அந்த இலக்கியங்களைப் பன்முறை மௌனமாக வாசிக்கும் போதுதான், புதிய

புதிய பொருண்மைகள் அதில் புதைந்து கிடப்பதை உணர முடிகின்றது. சான்றாக,

"ராமச்சந்திரனா?
என்று கேட்டேன்.
ராமச்சந்திரன்
என்றார் எந்த ராமச்சந்திரன்
என்று நான் கேட்கவில்லை
அவர் சொல்லவுமில்லை"

என்ற புதுக்கவிதை மேற்போக்காகச் சாதாரணமாகத் தோன்றுகிறது. இதனைப் பன்முறை வாசித்துச் சிந்திக்கும்போது, இன்றைய மனித வாழ்க்கை, மனித இயல்புகள் தொடர்பான பல அடுக்கு விளக்கங்களை உணரமுடியும். உணர்த்த முடியும். அடுத்தடுத்துச் செயற்படல் (Frequency) என்னும் விதிப்படி படிக்கும்போது பல அரிய உண்மைகளை இலக்கியங்களினின்றும் வெளிக்கொணரலாம். பண்டைத்தமிழ் இலக்கியங்கள் சிலவற்றுக்குப் பிறர் நினைத்தும் காண முடியாத நுட்பமான விளக்கங்களை மரபுவழி உரையாசியர்கள் மிக விரிவாகக் கூறியுள்ளமைக்கு அவர்கள் அந்த இலக்கியங்களைப் பன்முறை பயின்றதே காரணம் ஆகும்.

படிப்பதனால் ஏற்படும் சிறந்த பின்விளைவுகள் ஒருவனது ஆர்வத்திற்குக் காரணமாக அமைகின்றன ஒரு மாணவன், தொழில் முனைவோர், அரசு ஊழியர், பேராசிரியர் என்று எத்துறையினரும் நன்கு படிப்பதற்கு அதனால் ஏற்படும் பின்விளைவுகள் காரணமாக அமைகின்றன; படிப்பதால் ஏற்படும் விளைவுகள் மனநிறைவையும் மகிழ்ச்சியையும் ஏற்படுத்துவனவாக இருக்க வேண்டும். ஒரு பள்ளி மாணவன் நன்றாகப் படிப்பதன் மூலம் அவனுக்கு உயர் வகுப்புகளில் படிக்க வாய்ப்பு கிடைக்க வேண்டும். அவன் விரும்பிய துறைகளில் முன்னேறிச் சாதனைகள் புரிய, சமூகம் அவனை அனுமதிக்க வேண்டும். படிப்பதையே தொழிலாகக்கொண்ட பேராசிரியர்கள், தொழில் முனைவோர்,அரசு ஊழியர் முதலியவர்கட்கும் அவரவர் துறைசார்ந்த படிப்பினால் உருவாக்கிக்கொள்ளும் தனித்திறன்களுக்குத் தக்க

விளைவுகள், பரிசுகள், பாராட்டுக்கள், ஊக்கத் தொகைகள் முதலியன கிடைக்க வேண்டும். அதனால் மகிழ்ச்சி ஏற்படும்போது ஒருவர் மேன்மேலும் நன்கு படிக்கும் வாய்ப்புண்டு. இவை வெளியுலகிலிருந்து ஒருவருக்குக் கிடைக்கும் உந்துதல்கள் ஆகும். இவை கிடைக்காத நிலையிலும் ஒருவர் தன் மனத்தில் சில திட்ட வரைவுகளை வகுத்துக்கொண்டு, படிப்பதன் மூலம், தன்னையும் தன் ஆளுமையையும் வளர்த்துக்கொள்வதில் மனநிறைவைப் பெறுவதன் மூலம் மகிழ்ச்சியடையலாம்; இதன் தொடர்ச்சியாகப் படிப்பதற்கான மன எழுச்சியினை அவர் பெறவியலும்.

**ஒருமுகப்படுத்தும் ஊக்கிகள்**

ஒருவன் படிப்பில் தன்னை ஈடுபடுத்திக்கொள்வதற்குச் சில புறக்காரணங்கள் தேவைப்படுகின்றன. படிப்பது என்பதே மன எழுச்சியுடன் தொடர்புடையது என்பது உண்மைதான்; எனினும் மன எழுச்சி புற உலகிலிருந்து வரவேண்டியிருக்கிறது. இவற்றை மனத்தினைத் தூண்டி ஒருமுகப்படுத்தும் ஊக்கிகள் (Motives) என்று கல்விச் சிந்தனையாளர்கள் குறிப்பிடுகின்றனர். ஒரு நிறுவனம் சார்ந்த கல்வி கற்கும் மாணாக்கர்கட்கு இத்தகைய ஊக்கிகள் மிக இன்றியமையாதவை; தான் அடைய வேண்டிய இலக்கு எது? தன் குறிக்கோள் என்ன? என்பதை நிர்ணயித்துக்கொள்ளும் ஒருவன் அதற்காக மிக அதிக அளவில் முயன்று படிப்பான். இதனை அடைவு ஊக்கி (Achievement Motives) என்று உளவியாலார் குறிப்பிடுவர். தேர்வுகளில் அதிக மதிப்பெண்கள் பெற்று முதன்மை இடங்களைக் கைப்பற்றும் மாணவர்களில் சிலர், மருத்துவப் படிப்பு படிக்க வேண்டும் என்பதற்காக அதிகம் முயன்று ப்டித்து மதிப்பெண் பெற்றதாகப் பேட்டிகளில் கூறுகின்றனர். சிலர் பொறியியல் பட்டப்படிப்பில் இடம் பெறுவதற்காக அதிகம் முயன்று உழைத்துப் படித்ததாகக் கூறுவர். இவ்வாறே கணினி வகுப்பில் சேர்வதற்காகவும், தொழில் நுட்பத்துறைகளில் இடம்பிடிப்பதற்காகவும் தாம் அதிகம் உழைத்துப் படித்ததாகச் சிலர் கூறுவதுண்டு. இவையெல்லாம் மாணவர்கள் தங்கள் எதிர்காலம் பற்றித் தாமே நிர்ணயித்துக்கொள்ளும் அடைவு (Achievement Motives) ஊக்கிகளாகும்.

**ஆர்வம்**

படிக்கத் தேர்வு செய்துகொள்ளும் பாடம் அல்லது நூலின் மீது ஒருவர் ஏற்படுத்திக்கொள்ளும் கவர்ச்சி அவரது படிப்பில் மிக முக்கியப் பங்கினை ஆற்றுகிறது. இதனை உளவியல் அறிஞர்கள் ஆர்வம் (Interest) என்று குறிப்பிடுகின்றனர். ஒரு பொருளின் மீது ஒருவருக்குக் கவர்ச்சி ஏற்படப் பல கூறுகள் அவசியமாகின்றன. தான் படிக்கும் நூலினால் விளையும் பயன் மிகப் பெரிது என்று ஒருவர் எண்ணும்போது அதன்மீது அவருக்குக் கவர்ச்சி ஏற்படும். ஒரு பேராசிரியர் புதிய பாடத்துறை ஒன்றில் நுழைந்து ஈடுபட்டுப் படித்து அதனைத் தன் மொழியில் அறிமுகம் செய்து நூல்கள் வெளியிட்டு நற்பெயரும் புகழும் அடைகிறார். இதனால் அப்பேராசிரியருக்கு அக்குறிப்பிட்ட பாடப்பிரிவில் ஈடுபாடு மிகுதியாக ஏற்பட்டு, மேலும், மேலும் அத்துறையில் ஈடுபட்டுப் படிக்க முடியும். படிக்கும் நூலில் ஒருவருக்கு ஈடுபாடும் தோய்வும் மிகுதியாக ஏற்பட, அது பயன்பாடுடையது என்ற எண்ணம் அவருக்கு மனதில் ஏற்பட வேண்டும். படிப்புத்துறைகளில் பெரும் கோட்பாட்டுப் பாடங்களைக் கற்பதைவிட (Theoritical Study) பயன்பாட்டுப் படிப்பு மாணவர்களிடையே அதிகம் (Applied Study) ஆர்வத்தினை ஏற்படுத்துகிறது. இலக்கியம், வரலாறு முதலிய பாடங்களைக் கற்கும் மாணவர்களைவிட, இதழியல், தகவல் தொடர்பியல், திரைப்படக்கலை, நாடகவியல், ஆள்வினைவியல் (M.B.A) மருத்துவம் போன்ற தொழில் சார்ந்த கல்வி, கற்கும் மாணவர்கள் தங்கள் படிப்பில் மிகுதியான ஆர்வமும் மகிழ்ச்சியும் உடையவர்களாகக் காணப்படுகின்றனர். அவர்கள் படிக்கும் படிப்பு அல்லது நூல் உலகியல் சார்ந்தது என்ற எண்ணம் அவர்களுக்கு இருப்பதே இதற்குக் காரணம் ஆகும். படித்து முடித்தவுடன் ஏதாவது பத்திரிகை ஒன்றில் பணிபுரியலாம். பத்திரிகை நிருபராகலாம். பத்திரிகை ஒன்றைத் தொடங்கலாம் என்ற எண்ணம் இதழியல் படிக்கும் மாணவர்கட்கு இருப்பதும், அந்த வாய்ப்புக்கள் அப்படிப்பில் இருப்பதும் மாணவர்களை அதிகமாகக் கவர்கின்றன.

ஒரு சிலர் தம் வாழ்நாளில் அதிகப் பகுதியைக் குறிப்பிட்ட சில நூல்களைப் படிப்பதிலேயே செலவிடுவதுண்டு. வாழ்நாள் முழுவதும் திருக்குறள் படித்துப் புலமை பெற்றவர்கள் பலரை நாம் அறிவோம்.

இவ்வாறு ஒரு நூலினை ஒருவர் இடைவிடாது தொடர்ச்சியாகப் பயிலுவதற்கு, அது வாழ்க்கைக்குப் பயன்படும் என்று அவர் கருதியதுதான் காரணம்.

ஒரு பள்ளி ஆசிரியர், இடைவிடாமல் ஓர் ஆங்கில நூலையே படித்துக்கொண்டிருந்தார். அதனால் உந்துதல் பெற்றுப் பணி ஓய்வு நேரங்களில், ஈடுபடும் முறையில் சிறிய அச்சகம் ஒன்றைத் தொடங்கிக் காலப்போக்கில் பெரும் செல்வராக மாறினார் தான் படித்த நூலினை உலகியல் சார்ந்ததாக மாற்றிக்கொண்ட அவரது திறமையே இதற்குக் காரணம். இத்தகைய நூல்கள் ஒருவருக்கு அவரது இலக்குகளைத் தீர்மானிக்க உதவுகின்றன; அதனால் மக்கள் அவற்றை விரும்பிப் படிக்கின்றனர். மனித ஆளுமையை, பண்புகளை வடிவமைக்கும் சுய முன்னேற்ற நூல்கள் இன்று அதிக அளவில் வெளிவருவதற்கும் மக்கள் அவற்றை விரும்பிப் படிப்பதற்கும் நூல்களின் உலகியல் பயன்பாடுதான் இன்றியமையாத காரணமாகின்றது. நன்கு நுட்பமாகப் படிக்கும் திறன் உடைய ஒருவர் எந்த நூலிலும், உயர் தனி இலக்கியத்திலும் இத்தகைய உலகியல் சார்ந்த பயன்பாட்டினை உணர முடியும்.

**கவனம்**

படிப்பதில் இன்றியமையாத பங்கு வகிக்கும் பிறிதொரு கூறு கவனம் (Attention) ஆகும் எதைப் படிக்கும்போதும் அதில் முழுக்கவனத்துடன் ஒருவர் படிக்க வேண்டும். ஆனால் நடைமுறையில் ஒருவர் ஒரு நூலினைப் படிக்கும்போது, கவனம் சிதறுவதுதான் இயல்பு. மனித மனம் ஒரே நேர்கோட்டில் எப்போதும் இயங்குவதில்லை; முன்னும் பின்னும் ஒழுங்கற்ற முறையில் பாய்வதுதான் மனித மனத்தின் இயல்பு. ஒரு நூலினைப் படித்துக்கொண்டிருக்கும்போது, அதில் உள்ள ஒரு சொல் அல்லது தொடர் நம் மனத்தில் அது தொடர்பான வேறு ஓர் எண்ணத்தை ஏற்படுத்துகின்றது. உடனே நாம் அதுபற்றி நினைக்கின்றோம். அதைத் தொட்டு இன்னொரு நினைவு வேறொரு நினைவு என்று எண்ணங்கள் சங்கிலித் தொடர்பாக நீள்கின்றன. பிறகு திடீரென்று நாம் விழித்துக்கொண்டவர்கள் போல, சுய

நினைவுக்கு வருகின்றோம். இதுதான் கவனச் சிதைவு என்பது. இது அனைவரிடமும் காணப்படும் ஒரு குறைதான். நூலினை விரித்துப் படிக்கத் தொடங்கும் ஒருவர், அதிலேயே கண்ணை வைத்திருப்பார்; பக்கங்கள் மட்டும் நகராமல் நிலையாக இருக்கும். மனம் வேறு எங்கோ சஞ்சரித்துக் கொண்டிருக்கும் இதுதான் கவனச் சிதைவு. இதனை ஒருவர் தொடர்ச்சியான பயிற்சியின் மூலம் வெற்றிகொள்ளலாம்.

படிக்கும்போது வெறுமனே புத்தகத்தை மட்டும் வைத்துக்கொண்டு படிக்காமல், அருகில் ஒரு தாளினை வைத்துக்கொண்டு குறிப்புகள் எழுதிக்கொண்டே படிப்பதன் மூலம் கவனச் சிதைவினை வெற்றிகொள்ளலாம்.

படிக்கும்போது கவனம் சிதைவதற்குப் பிறிதொரு காரணமும் உண்டு; பல்வேறு காட்சிகள், கண்களில் படுவதும் உரையாடல்கள் மனத்தில் படுவதும் கவனத்தைச் சிதறச் செய்கின்றன. படிப்பதற்கு அமைதியும், தனிமையும் உள்ள இடங்களில் அமர்ந்து படிப்பதன் மூலம் இச்சிக்கலைத் தவிர்க்கலாம். படிக்கும்போது நம் பார்வையின் கோணம் எவ்வாறு அமைத்துக்கொள்ளப்படுகிறது என்பதும் படிப்பில் அதிகம் உதவுகிறது. முழு அறை, அதன் பொருட்கள், அங்கிருக்கும் மனிதர்கள், அனைத்தும் கண்களில் படாதவாறும், பார்வை படிக்கும் நூலில் மட்டும் படுமாறும் பார்வைக் கோணத்தினை அமைத்துக்கொள்வதன் மூலம் கவனத்தைப் படிப்பதில் முழுமையாக ஈடுபடுத்த முடியும். இதற்காகச் சில வசதிகளைக் கூட ஏற்படுத்திக்கொள்ளலாம்:

1. தூய்மையான, ஒழுங்கான நூல்கள் அடுக்கி வைக்கப்பட்டிருக்கும் ஒரு சிறிய மேசையை வைத்துக் கொள்ளலாம்.

2. ஒரு பொருத்தமான நாற்காலியில் அமர்ந்துகொண்டு படிக்கலாம்.

3. ஒரு மேசை விளக்கு வைத்துக்கொள்ளலாம். இதன்மூலம் ஒளி படுகின்ற இடத்தில் நூலினை வைத்துப் படிக்கும்போது கவனம் ஒருமுகப்படுவதற்கு வாய்ப்பு உள்ளது.

4. முழுமையான மயான அமைதியுடையதாக அறை இல்லாமல் சிறுசிறு ஓசைகளுடன் கூடிய அறையைப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

இந்த வசதிகள் அனைத்தும் ஒருவரது கவனத்தினை மையப்படுத்த உதவுகின்றன. இந்த வசதிகள் இல்லாமல் தெருவிளக்கு ஒளியில், பொது இடங்களில் படித்து மேதைகளாக மாறிய பலர் உண்டு; எனினும் அவர்கள் விதிவிலக்கான, அசாதாரணமான மன உறுதி படைத்தவர்களாக இருந்திருப்பார்கள். நாம் இங்குச் சராசரிப் பண்புடைய மனிதர்கள் எவ்வாறு படிக்கும் முறைகளை வகுத்துக்கொள்ள வேண்டும் என்பது பற்றிக் காண்கிறோம்.

**உட்புலக்காட்சி**

ஒரு நூலினைப் படிக்கும்போது, அதனை வெறும் சொற்கூட்டமாகக் காணாமல், அதனை மனித அனுபவங்களில் தொகுப்பாகவும், அறிவுக் கருவூலமாகவும் கருதிப் படிக்க வேண்டும்; அவ்வாறு படிக்கும்போது, நடைமுறை மனித அனுபவங்களின் சார்பாக நூல்கள் அமைந்திருக்கின்ற உண்மையை உணரலாம். இதற்கு வெறும் படித்தலாகிய செயல் மட்டும் போதாது; படித்ததை நமது புலன்களில் நிறுத்திச் சிந்திக்க வேண்டும். இதனை உட்புலக்காட்சி என்று குறிப்பிடுவார்கள். கலை, இலக்கியத்துறைகளில் இவ்வுட்புலக்காட்சி, மனித அனுபவங்களை மீண்டும் நினைவூட்டுவதாக அமையும். அறிவியல், தொழில்நுட்பத் துறைகளில் இவ்வுட்புலக்காட்சி, குறிப்பிட்ட சில முன்மாதிரிகளை, அமைப்புக்களை மாணவன் தன் மனத்தில் நிலைநிறுத்திக்கொள்ளவும், புதிய முன்மாதிரிகளை, அமைப்புக்களை உருவாக்கவும் உதவும். படிக்கும் மாணவனுக்கும் இது மிகமிக இன்றியமையாததாகும்.

**முன்வரைவு**

ஒருவர் தன் படிப்பு மற்றும் செயல் திட்டங்கள் பற்றிய முன் வரைவு (Work Plan) ஒன்றினை எப்போதும் தயாரித்து வைத்திருக்க வேண்டும். அதன் மூலம் மிக எளிதாக, படிக்க வேண்டியவற்றைப் படித்து முடித்துவிடலாம். ஒருவாரத்தில் தன் படிப்பிற்காக ஒருவர் செலவிட இயலக்கூடிய மணி நேரங்கள், படிக்க வேண்டிய நூல்கள், படிக்க இயலும் நாட்கள் என்று வகைப்படுத்தித் திட்டம் தயாரித்துக் கொள்ளலாம். சான்றாக, ஒருவர் ஒரு வாரத்திற்கு 14 மணி நேரம் படிப்பதற்காக ஒதுக்க முடியும் என்றால் தினமும் இரண்டு மணி நேரம் என்று வகைப்படுத்தி, காலை, மாலை எனத் தனியே வகுத்துக்கொள்ளலாம். இதில்நான் படிக்க வேண்டிய நூல்களின் பட்டியலை இணைத்து நேரத்தையும, நூல்களின் அளவினையும் வகுத்துக்கொள்ள வேண்டும். இதனைக் குழப்பமின்றிப் பின்பற்றினால் எளிதாகப் படித்து முடிக்க இயலும்.

படிப்பதில் ஒருவிதமான சுவையை ஒருவர் தன் மனத்தில் ஏற்படுத்திக்கொள்ள வேண்டும். இதன் மூலம் மிகக் கடினமான நாம் விரும்பாத பொருட்களைக்கூட நம்மால் படித்து அறிந்துகொள்ள இயலும். ஒரு செயலைச் செய்து முடித்த பிறகு மனத்தில் ஒருவகை நிறைவும் நிம்மதியும் ஏற்படுவதை நாம் உணர்வோம். இந்த உணர்வை மையமாக வைத்து அதாவது கடின உழைப்புக்குப் பின் ஏற்படும் அமைதியை மையமாக வைத்து நாம் செயற்படும்போது மிக எளிதாக எதனையும் நம்மால் படித்து முடிக்க முடியும்.

கடினமான, மனத்திற்கு இதமளிக்காத செயல்களைச் செய்யாமல் தள்ளிப் போடுவதில் நமக்கு எப்போதும் இன்பம்தான். ஆனால் இதே இன்ப உணர்வை இரட்டிப்பாக நாம் அடைய முடியும்; எப்போது? நாம் விரும்பாத பொருள்களைக்கூட அரிதின் முயன்று படித்து முடிக்கும் போதும், அது தொடர்பாகப் பலரிடம் விவாதித்து அறிந்துகொள்ளும் போதும், அது தொடர்பாகப் படித்து ஒரு மேதைமையை, புலமையை நாம் அடையும்போதும் இரட்டிப்பான இன்ப

உணர்வை நாம் அடையலாம். இதற்கெல்லாம் தேவை படிக்கும் காரியத்தினைத் தள்ளிப்போடாமல் முடிக்கும் மனப் பக்குவம் அது. இதனைத்தான் திருவள்ளுவர்.

> *"வினைக்கண் வினைகெடல் ஓம்பல் வினைக்குறை*
> *தீர்ந்தாரின் தீர்ந்தன்று இவ்வுலகு"*

என்று நுட்பமாகக் கூறுகிறார்.

எனவே, படிப்பது எப்படி, என்ற வினா அனைவருக்கும் எழும் இயல்பான வினா:

- 'நான் பல மணிநேரம் புத்தகத்தை விரித்துக்
  கொண்டு அமர்ந்திருக்கிறேன். ஆனால்
  படிப்பது மிகக் குறைவு'

- 'நான் படிக்க வேண்டிய அனைத்தையும்
  என்னால் முடிக்க முடியவில்லை'

- 'மனத்தை ஒருமுகப்படுத்துவதுதான்
  என் பிரச்சனையே. என்னால் எதனையும்
  நீண்ட நேரம் செய்ய முடியவில்லை'

- 'எனக்குப் போதுமான நேரம் இல்லை'

- 'உரிய நேரத்தில் என்னால் முடிக்கமுடியவில்லை
  வேலை இழுத்துக்கொண்டே போகிறது'

என்ற குரல்களைத் தினமும் நாம் கேட்கிறோம். இவையனைத்திற்கும் காரணம், படிப்பினைப் பற்றிய திட்ட முன்வரைவு (Work Schedule) இல்லாமையே. திட்ட வரைவு செம்மையாக இருந்தால், அனைத்துச் சிக்கல்களும் தீரும். படிப்பது எப்படி என்ற கேள்விக்கு விடையும் கிடைக்கும்.

-o-o-o-